அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला–२०



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா
# 20

வாணீ விலாஸ் பிரஸ்,
ஸ்ரீரங்கம்.

1966


விஷயானுக்ரமணிகை



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
  तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
  सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
  तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
  विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை

ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலாவில் இது 20-வது மலர். இதில் ஸ்ரீ ஹரிஸ்துதி, ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹ கருணாரஸ ஸ்தோத்ரம், ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹ பஞ்சரத்னம், ஸ்ரீ ராமபுஜங்க ஸ்தோத்ரம், ஹநுமத்பஞ்சரத்னம், அச்யுதாஷ்டகம் இந்த ஆறு நூல்களும் வழக்கம்போல் பதவுரை கருத்துரைகளுடன் வெளிவந்துள்ளன. விஷ்ணு ஸ்தோத்ரங்களான இவைகளுள் முதலாவதான ஹரிஸ்துதியை ஹரிமீடேஸ்தவம் என்றும் சொல்லுவ துண்டு ஒவ்வொரு சுலோகத்திலும் 4-வது பாதத்தில் 'हरिमीडे' என்ற சொல் வருவதால் இப்பெயர் ஏற்பட் டுள்ளது संसारध्वान्तविनाश हरिमीडे (ஸம்ஸாரமாகிய இருளையழிக்கும் ஹரியை துதிக்கிறேன்) என்று சொன்னதையொட்டி ஸம்ஸாரத்திற்குக் காரணமான அக்ஞானம் விலக ஹரியின் தத்வம் உபநிஷத்தில் கூறி யுள்ளபடி நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. ஹரி என்ற பதத்திற்கு அக்ஞானத்தை அபஹரிப்பவர் என்றும் பொருள் கூறலாம் பற்பல உபநிஷத்துக்களின் கருத்துக்களை இங்கு காணலாம். ஆகவே இதை ஸ்தோத்ரம் என்பதைவிட உபநிஷத் விவரணம் என்று கூறுவதே மிகவும் பொருந்தும்.

ன் அவதாரமான ப் பற்றியது இரண்டு ஸ்தோத்ரங்கள். முதலாவதில் ஸம்ஸாரத் துன்பத்தைப் பலவாறாக வர்ணிக்கிறார். ஸம்ஸாரமென்னும் காட்டுத்தீ அணைய பகவானின் கருணை பிரவஹித்து ஓடவேண்டும். அதனாலேயே இதற்கு கருணாரஸ ஸ்தோத்ரம் என்ற பெயர் ஏற்பட்டிருக் கிறது. அடுத்ததில் மனதிற்குச் சொல்லும் வியாஜமாக நமக்கே உபதேசம் செய்கிறார். நரஸிம்ஹஸ்வரூபமே

ஜீவப்ரஹ்ம ஐக்யத்தைக் காட்டுகிறது. ஒரே மூர்த்தி நரனுகவும் ஸிம்ஹமாகவும் தோன்றுவதுபோல்தான் ஒரே ப்ரஹ்மம் ஜீவனுகவும் ஈசுவரனுகவும் தோன்றுகிருர். இதனுலேயே ஸ்ரீ சங்கரபகவத்பாதர் ந்ருஸிம்ஹரை உபாஸித்திருக்கிருர். பத்மபாதர் ந்ருஸிம்ஹோபாஸகர் என்பது ஸர்வப்ரஸித்தமானது சிருங்கேரி குரு பரம்பரையில் உள்ள ஆசார்யர் யாவருமே ந்ருஸிம்ஹோ பாஸகர்கள்தான் பலருடைய யோக பட்டத்திலும் 'ந்ருஸிம்ஹ' என்ற பெயர் இருப்பதைக் காணலாம்.

புஜங்க விருத்தத்தில் அமைந்துள்ள ராமஸ்தோத்ரத்துடன் அவரைவிட்டுப் பிரியாத ஹநுமத்பஞ்சரத்னமும் சேர்க்கப்பட்டிருக்கிறது. கடைசியாக 'அச்யுதம்' என்று ஆரம்பிக்கும் அச்யுதாஷ்டகமும் உள்ளது.

இவற்றில் இரண்டு நரஸிம்ஹ ஸ்தோத்ரங்களுக்கும் தமிழ் உரை எழுதித்தந்து உதவிய ஸ்ரீ R கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்களுக்கு நம் ஸமிதியின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். மற்ற நான்கு ஸ்தோத்ரங்களுக்கும் சமீபத்தில் காலம்சென்ற சிருங்கேரிமடம் ஆஸ்தானவித்வான் 'வித்யாபூஷணம்' ஸ்ரீ நரஸிம்ஹ சாஸ்திரிகள் எழுதிக்கொடுத்த தமிழ் உரை சேர்க்கப் பட்டுள்ளது.

சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ மஹா ஸந்நிதானம் 'வ்ய பாதபத்மங்களில் பக்தி யுடன் ம்மலரை ஸமர்ப்பணம் செய்வோம்.

K. V. சுப்பரத்னம் அய்யர்,
பொதுக்காரியதர்சி,
அகிலபாரத சங்கர ஸேவா ஸமிதி.

|| श्रीः ||

# || श्रीहरिस्तुतिः ||

# ஸ்ரீ ஹரிஸ்துதி

[43 சுலோகங்கள் கொண்ட இந்த ஹரிஸ்துதி ஸகுணமான ஸாகாரமான மஹாவிஷ்ணுவின் குணங்களையோ, உருவத்தையோ வர்ணிக்கவில்லை நிர்குணமான நிராகாரமான ப்ரஹ்ம ஸ்வரூபத்தை உபநிஷத்துக்கள் எவ்வாறெல்லாம் விளக்கிக்காட்டி இருக்கின்றனவோ அதெல்லாவற்றையும் சேர்த்துத் திரட்டி இங்கு காட்டியிருக்கிறார். எல்லா பிரபஞ்சமும் ப்ரஹ்மம்தான் என்ற தீர்மானத்தில் ஸகுணமான தேவதா மூர்த்திகளும் ப்ரஹ்மம்தான் என்பதில் ஸந்தேகமேயில்லை. பக்தர்களை அநுக்ரஹிப்பதற்காக பரப்ரஹ்ம வஸ்துவே மாயா சக்தியினால் ஸகுணமாக சரீரத்துடன் கூட விளங்குகிறது. இதுமட்டுமல்ல ஒரே ப்ரஹ்மமே தனது மாயா சக்தியினால் ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன் என்று பல மூர்த்திகளாகவும் தோன்றுகிறது. இந்தக் கருத்தை இதே ஸ்தோத்ரத்தில் 18-வது சுலோகத்தில் ஆசார்யாள் நன்கு காட்டியிருக்கிறார். ஆகவே உபநிஷத்துக்களில் கூறப்பட்டுள்ளபடி ஹரியின் உண்மை தத்வமான ப்ரஹ்ம ஸ்வரூபம் இந்த ஸ்துதியில் நன்கு விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது. இந்த ஸ்தோத்திரத்தை வாசித்து மனனம் செய்வதன்மூலம் பல உபநிஷத்துக்களின் கருத்துகளை நன்கு தெரிந்துகொள்வதுடன் பிரபஞ்சம், ஜீவன் இவைகளின் உண்மையையும் அறிந்து ப்ரத்யக்பிந்நமான பரபிரஹ்மஞான மேற்பட்டு பிறவித் துன்பம் நீங்கும்.]

स्तोष्ये भक्त्या विष्णुमनादिं जगदादिं
यस्मिन्नेतत्संसृतिचक्रं भ्रमतीत्थम् ।
यस्मिन्दृष्टे नश्यति तत्संसृतिचक्रं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ १ ॥

ஸ்தோஷ்யே பக்த்யா விஷ்ணுமநாதிம் ஜகதாதிம்
யஸ்மிந்நேதத் ஸம்ஸ்ருதிசக்ரம் ப்ரமதீத்தம் ।

யஸ்மின் த்ருஷ்டே நச்யதி தத் ஸம்ஸ்ருதிசக்ரம்
தம் ஸம்ஸாரத்வாந்த விநாசம் ஹரிமீடே ||

**अनादिं**–பிறப்பு அறறவரும, **जगदादिं**–பிரபஞ்சததிற்கு முதன்மை யாக இருப்பவருமான, **विष्णुं**–விஷ்ணுவை, **भक्त्या**–பக்தியோடு, **स्तोष्ये**–துதிக்கப்போகிறேன். **यस्मिन्**–எவரிடம, **एतत्**–இந்த, **संसृतिचक्रं**–ஸமஸார சகரம், **इत्थं**–இவவாறு, **भ्रमति**–சுழலுகிறதோ, **यस्मिन्**–எவர், **दृष्टे**–நேரில காணபபடடதும, **तत्**–அநத, **संसृतिचक्रं**–ஸம்ஸார சக்ரம, **नश्यति**–மறைந்துவிடுகிறதோ, **तं**–அநத, **संसारध्वान्तविनाशं**–ஸமஸாரமாகிற இருடடை அழிககினற, **हरिं**–ஹரியை, **ईडे**–போறறுகிறேன.

நான் விஷ்ணுவை, பரமாத்மாவை பக்தியோடு ஸ்தோத்ரம் செய்யப்போகிறேன். இவர் உலகம் தோன்றுவதற்கு முன்ஞலேயே இருந்துகொண்டு உலகத்தை உண்டுபண்ணிய காரணப் பொருள். இவருக்குப் பிறபபு இல்லாததால் இவருக்குக் காரணமான வேறுபொருள் கிடையாது உலகில் பிறப்பும், வாழ்வும், இறப்பும் திரும்பித் திரும்பி வந்துகொண்டிருப்பதால் ஸம்ஸாரத்தை சக்ரமாக வர்ணிததார் இந்தப் பரமாத்மா ஆதாரமாக இருப்பதால்தான் அவரிடம் ஸம்ஸார சக்ரம் சுழன்று கொண்டிருக்கிறது பூமியில் நடடுள்ள தூண் தாஙகிக்கொண்டிருப்பதால் தானே ராட்டினம் சுழலுகிறது உலக அசைவிற்கே அவன்தான் காரணம் இவரே நமது ஆத்மாவாக இருப்பதால் இவருடைய தத்வத்தை நேரில் அறிந்துகொண்டவருக்கு ஸம்ஸார சக்ரம் மறைந்துவிடும்.

ஆதார வஸ்துவை அறியாததனல் அதனிடம் தோன்றிக் கொண்டிருக்கும் பொருள், அவ்வாதாரப் பொருளின் உணமை ரூபம் அறியப்படும் சமயம் மறைந்து, மேல்கொண்டு தோன்றுவதில்லையென்பது கிளிஞ்சலை அறியாததால் அதனில் காணப்பட்ட வெள்ளி, கிளிஞ்சலின் உண்மை ஸ்வருபம் அறியப்பட்டவுடனேயே மறைந்து பிறகு காணப்படுவதில்லை என்பது போன்ற பல திருஷ்டாந்தஙகளால் ஒப்புக்கொள்ளப்பட்டயம்.

உலகம் உண்மைப்பொருள் அல்ல ப்ரம்மத்தினிடம் ப்ரம்மத்தை அறியாத ஜீவன தனது அஞ்ஞானத்தாலேயே காண்

கிறான். பிரம்மஞானத்தினால் பிரம்மத்தை அறியாமல் இருக்கை என்ற அக்ஞானம் விலகியவுடன் அந்த அஞானத்தினால் தோன்றின உலகமும் மறைந்து விடுவது நியாயமே. உலகம் மெய்ப் பொருளாக இருக்குமானால் ப்ரஹ்மஞானத்தால் மட்டும் மறைந்து போகாது. குடம் முதலான பொருள் கேவலம் அறிவினால்மட்டும் அழிந்துபோவதில்லை. கர்மாவினால் தான் அவை அழிந்து போகின்றன என்பதை உலகில் நாம் காண்கிறோம். பொய்யான பாம்பு, வெள்ளி முதலியவை அதிஷ்டானமான உண்மைப் பொருளை (கயிறு, கிளிஞ்சல் முதலியவற்றை) அறிவது ஒன்றினாலே மறைந்து விடுவதையும் காண்கிறோம். ஆகவே ப்ரஹ்மஞானம் ஒன்றினாலேயே மறைந்து போகும் ஸ்வபாவமுள்ள இப்பிரபஞ்சம் வாஸ்தவமல்ல பொய்யானதுதான்.

இப்பேற்பட்ட பரமாத்மா ஞான ஒளியை நமக்குக்கொடுத்து எல்லாத்துன்பங்களுக்கும் காரணமான ஸம்ஸார இருளைப் போக்குபவர். அவரைப்போற்றுகிறேன். (1)

**यस्यैकांशादित्थमशेषं जगदेत-**
**त्प्रादुर्भूतं येन पिनद्धं पुनरित्थम् ।**
**येन व्याप्तं येन विबुद्धं सुखदुःखै-**
**स्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ २ ॥**

*யஸ்யைகாம்ஶாதித்தமஶேஷம் ஜகதேதத்*
*ப்ராதுர்பூதம் யேந பிநத்தம் புநரித்தம் ।*
*யேந வ்யாப்தம் யேந விபுத்தம் ஸுகதுக்கைஸ்*
*தம் ஸம்ஸாரத்வாந்த விநாஶம் ஹரிமீடே ॥*

**यस्य**–எதனுடைய, **एकांशात्**–ஒரு அம்சத்திலிருந்து, **एतत्**–இந்த, **अशेषं जगत्**–ஜகத் முழுவதும், **इत्थं**–இவ்வாறு, **प्रादुर्भूतं**–தோன்றியுள்ளதோ, **येन पुनः**–எந்த ஸ்வரூபத்தோடேயே, **इत्थं**–இவ்வாறு, **पिनद्धं**–பிணைக்கப்பட்டிருக்கிறதோ, **येन**–எதனால், **व्याप्तं**–வியாபிக்கப்பட்டிருக்கிறதோ, **येन**–எதனால், **सुखदुःखैः**–ஸுகதுக்கங்களுடன், **विबुद्धं**–அறியப்பட்டிருக்கிறதோ, **तं**–அந்த, **संसारध्वान्त-विनाशं**–ஸம்ஸாரமாகிற இருட்டைப்போக்கும், **हरिं**–ஹரியை, **ईडे**–

பரப்ரம்மஸ்வரூபியான ஸ்ரீ ஹரியினுடைய நாலில் ஒரு அம்சத்திலிருந்தே இந்த ஸ்தாவரம், ஜங்கமம், சுகி, துக்கி, சிறிது, பெரிது காணப்படும், காணப்படாதது, நித்யம், அநித்யம் என்று பலவாறு மனதினுலும் நினைத்துக்கூட பார்க்கமுடியாத இவ்வித விசித்ரமான ஸமஸ்தமான உலகம் தோன்றியுள்ளது. "पादोऽस्य विश्वा भूतानि" "विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत्" என்ற வசனங்கள் பிரமாணங்கள். ஹரியின் ஸ்வரூபத்தோடேயே பிரிக்கமுடியாதபடி உலகம் துணியில் நூல்கள் பிணைந்து இருப்பதுபோல் பிணைக்கப்பட்டிருக்கிறது பகவான் அந்தர்யாமியாக எங்கும் இருப்பதால் எல்லாம் அவரிடமே பிணைக்கப்பட்டிருக்கிறது. 'मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव' என்றதுபோன்ற வசனங்கள் பிரமாணம் இந்த ஹரியின் ஸ்வரூபத்திலேயே இவ்வுலகம் உள்ளும் புறமும் வியாபிக்கப் பட்டிருக்கிறது अन्तर्बहिश्च तत् सर्वं व्याप्य नारायणः स्थितः என்றது முதலான வசனம் ஆதாரம். ஹரியினால் அளிக்கப்படும் ஞானஒளியைக்கொண்டு இவ்வுலகம் உயிர் இனம் பூரவும் தனது சுகம் துக்கம் முதலிய அனுபவங்களோடு சேர்ந்து தன்னை அறிகிறது. तस्य भासा सर्वमिदं विभाति அவ்விதமான ஸம்ஸார இருளை அழிக்கும் ஸ்ரீ ஹரியை துதிக்கிறேன். (2)

सर्वज्ञो यो यश्च हि सर्वः सकलो यो
यश्चानन्दोऽनन्तगुणो यो गुणधामा ।
यश्चाव्यक्तो व्यस्तसमस्तः सदसद्य-
स्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ३ ॥

ஸர்வக்ஞோ யோ யச்ச ஹி ஸர்வ: ஸகலோ யோ
யச்சாநந்தோऽநந்தகுணோ யோ குணதாமா ।
யச்சாவ்யக்தோ வ்யஸ்தஸமஸ்த: ஸதஸத் ய:
தம் ஸம்ஸாரத்வாந்த விநாசம் ஹரிமீடே ॥

**यः**—எந்த ஹரியானவர், **सर्वज्ञः**—எல்லாம் அறிந்தவரோ, **यश्च**—எவர், **सर्वः हि**—எல்லா வஸ்துரூபமாக இருக்கிறாரோ, **यः सकलः**—எவர் பதினாறு கலைகளுடன் கூடினவரோ, **यः च**—எவர், **आनन्दः**—அகண்ட ஆனந்தஸ்வரூபமோ, **अनन्तगुणः**—கணக்கற்ற நற்குணங்கொண்டவரோ,

**यः**-எவர், **गुणधामा**-குணமயமான மூலப்ருகிருதியை தனது இடமாகக் கொண்டவரோ **यः च**-மேலும் எவர், **अव्यक्तः** அவ்யக்த மென்று கூறப்படுகிறவரோ, **व्यस्तसमस्तः**-தனித்த ஒவ்வொரு பொருள் ரூபமாகவும், கூட்டுப்பொருள் ரூபமாகவும் இருப்பவரோ, **यः**-எவர், **सत्** -ஸத என்று கூறப்படும் பொருளாகவும், **असत्** -அஸத் என்று கூறப்படும் பொருளாகவும இருக்கிருரோ, **तं**-அந்த, **संसारध्वान्तविनाशं**-ஸம்ஸாரமெனனும் காரிருளே அகற்றக்கூடியவரான, **हरिं**-ஸ்ரீ ஹரியை, **ईडे**-துதிக்கிறேன்.

*ஹரியானவர் எல்லாம் அறிந்தவர் ஏனெனில் அவரே எல்லாமாக இருக்கிருர். பிரச்னோபநிஷத்தில் கூறியுள்ளபடி பிராணன் முதல் நாமா வரையுள்ள எல்லாக்கலைகளும் அவரிடமே தோன்றி அவரிடமே உள்ளன. அவரே ஆனந்த ஸ்வரூபம். தயை, தாக்ஷிண்யம், பக்தி பரவசமாதல் அனுக்ரஹித்தல் முதலான கணக்கற்ற அழிவற்ற திவ்ய மங்கள நற்குணங்கள் கொண்டவர் முக்குண ரூபியான மூலப்ரகிருதியை இருப்பிடமாகக் கொண்டவர். "**तद्धाम परमं मम**" அல்லது மூலப்ரகிருதிக்கும் ஆதாரமாக இருப்பவர் "**मम माया दुरत्यया**" பரப்ரஹ்ம ஸ்வரூபமாக இருப்பதால் அவ்யக்தர் இந்திரியங்களுக்கும் மனதிற்கும் புலப்படாதவர். தனித்த ஒவ்வொரு பொருளாகவும் கூட்டுப் பொருளாகவும் இருப்பவர். அல்லது பஞ்சீக்ருத ஸ்தூலப் பொருளாகவும் அபஞ்சீக்ருத சூக்ஷ்ம பொருளாகவும் இருப்பவர் ஸத்தாகவும், இருக்கிறது என்று சொல்லப்படும் பாவப் பொருளாகவும் அஸத் என்று சொல்லப்படும் அபாவப் பொருளாகவும் இருப்பவர். அல்லது. ஸத்தான ஸ்தூலமாக புல்ப்படும் பிருதிவி, ஜலம், தேஜஸ் என்ற மூன்று பொருள்களாகவும் அஸத்தான அவ்வாறு புலப்படாத ஸூக்ஷ்மமான வாயு, ஆகாச ரூபமாகவும் இருப்பவர். இப்பேர்பட்ட ஸம்ஸார இருளைப்போக்கும் ப்ரஹ்மரூபியான ஹரியை துதிக்கிறேன்.* (3)

**यस्मादन्यन्नास्त्यपि नैवं परमार्थं**
**दृश्यादन्यो निर्विषयज्ञानमयत्वात् ।**
**ज्ञातृज्ञानज्ञेयविहीनोऽपि सदा ज्ञ-**
**स्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ४ ॥**

*யஸ்மாதந்யந்நாஸ்த்யபி நைவம் பரமார்த்தம்*
*த்ருச்யாதந்யோ நிர்விஷயஞாநமயத்வாத் ।*
*ஞாத்ரு ஞாநஞேய விஹீநோऽபி ஸதா ஞ:*
*தம் ஸம்ஸாரத்வாந்த விநாசம் ஹரிமீடே ॥*

**यस्मात्** –எந்த ஹரியின்ஸ்வரூபத்தைக்காட்டிலும், **अन्यत्** –வேறு பொருள, **नास्ति**–கிடையாதோ, **अपि**–இருந்தபோதிலும், **एवं**–இதுபோல **न परमार्थं**–உண்மையாக இலலேயோ, (எது) **निर्विषयज्ञानमयत्वात्** –விஷய ஸமபந்தமில்லாத சுத்தஞானஸ்வரூபமாக இருப்பதால, **दृश्यात् अन्यः**–அறியப்படும் பொருளைககாட்டிலும் வேருனதோ, (எது) **ज्ञातृ-ज्ञानज्ञेयविहीनोऽपि**–அறிகிறவன, அறிவு அறியப்படும் பொருள் என்பவை இல்லாதபோதிலும், **सदा**–எப்பொழுதும், **ज्ञः**–ஞானரூபியாக இருக்கிறதோ, **तं**–அந்த, **संसारध्वान्तविनाशं**–ஸம்ஸாரமென்ற இருளை அழிக்கும், **हरिं**–ஹரிஸ்வரூபத்தை, **ईडे**–துதிக்கிறேன்.

*ஹரியின் ஸ்வரூபமான ஸத் சித் ஆனந்த பரபிரம்மத்தைக் காட்டிலும் தனித்து இருக்கக்கூடிய வேறு பொருள் ஒன்றும் கிடையவே கிடையாது. எல்லாவற்றிற்கும் உபாதான காரணமான பிரம்மத்தைவிட்டு காரியப்பொருள் எவ்வாறு தனித்து இருக்க முடியும்? மண்ணைக்காரணமாக உடையது அதன் காரியமான சட்டி, குடம் முதலிய வஸ்து. அவை தனக்குக்காரணமான, தான் இருக்கும் மண்ணைவிட்டு என்ருவது பிரிந்து தனித்து இருப்பதில்லை. பழுதையில் தோன்றும் பாம்பு தனக்கு இடமான அந்த பழுதையை விட்டு தனித்து இது பழுதை கயிறு, இது பாம்பு என வேருக இரு பொருளாகத் தோன்றுவதில்லை. அதுபோலவே பிரம்மத்தைத் தவிற மற்றப்பொருள் யாவும் பிரம்மத்தை விவர்த்த உபாதான காரணமாகக் கொண்டதால் அப்பிரம்மத்தைவிட்டு விலகித் தனிப்பொருளாக இருக்க முடியாது. அவை பிரம்மத்தைக்காட்டிலும் வேறுபட்டதாக நமக்குத் தோன்றியபோதிலும் ஆதார பிரம்மத்தைப்போல் உண்மைப்பொருளாக இல்லவே இல்லை. பழுதையைப்போல் அதில் காணப்படும் ஸர்ப்பத்தை உண்மைப்பொருள் எனக் கூற முடியுமா? வேறு பொருள்கள் யாவும் பொய்யே. மெய்யல்ல. பிரம்மத்தைக்காட்டிலும் வேருக உண்மைப் பொருள் ஒன்றுமில்லை என்று கருத்து. இங்கு ப்ரஹ்மமும் ப்ரபஞ்சமும் ஒன்று என்பதைக்கொண்டு ப்ரம்மத்தைக்காட்டிலும் வேருக பிரபஞ்சம்*

என்று கூறப்பட்டது. இதேபோல பிரபஞ்சத்தைக் காட்டிலும் ப்ரஹ்மம் வேறில்லை என்றும் கூறலாமோவெனில் அவ்வாறு கூறமுடியாது என்கிறார். விஷய ஸம்பந்தம் சிறிதும் இல்லாமல் சுத்த ஞானஸ்வரூபமாயிருப்பதால் அறியப்படும் பொருளான த்ருச்ய வர்க்கத்தில் ப்ரஹ்மம் சேர்ந்ததல்ல. அதைக்காட்டிலும் வேறானது. உலகில் எல்லாப்பொருளும் த்ருச்யமதான் அறியப்படும் வஸ்துதான். அதனாலேயே அவை உண்மையல்ல. உலகில் எல்லா ஞானமும் விஷயத்தைப்பற்றிய தாகவே இருக்கும். நிர்விஷயமான ஞானம் கிடையாது. ப்ரஹ்மம் ஒன்றுதான் நிர்விஷயமான ஞானஸ்வரூபம். ஆத்மா நிர்விஷயமான ஞானஸ்வரூபம என்பதை ஸுஷுப்தியிலிருந்தும் நிர்விகல்ப ஸமாதியிலும் நாம் தெரிந்துகொள்ளலாம். அது த்ருச்யம் (அறியப்படும் பொருள்) அல்ல. அதனால் அது ஒன்றே உண்மை வஸ்து. காரணப்பொருளை விட்டுத் தனியாக காரியப் பொருளில்லாததால் ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறுபொருள் இல்லையென்று கூறப்பட்டது. ஆனால் காரியபபொருள் அழிந்தும் காரணப்பொருள் மிஞ்சியிருப்பதாலும் ப்ரஹ்மம் ஒன்றே மெய்ப் பொருளானதாலும் த்ருச்யமான பிரபஞ்சத்தைக்காட்டிலும் பிரஹ்மம் வேறானது என்று கூறப்பட்டது. இங்கு த்ருச்யமான (அறியப்படும்) பொருளைக்காட்டிலும் ப்ரஹ்மம் வேறு என்று கூறியதால் ப்ரஹ்மம் மெய் என்பதும் கிடைக்கிறது. எதெல்லாம் காணப்படுகிறதோ, அறியப்படுகிறதோ அவை யாவும் உண்மை யல்ல. ஸ்வப்னத்தில் கண்ட பொருள்கள், காணப்படுவதால் மெய்யல்ல பொய்யே அதேபோல ஜாக்ரதவஸ்தையிலும் அறியப் படுபவை காணப்படுபவை யாவும் பொய்யே, மெய்யல்ல, காணப் படுவதால் என்ற காரணத்தினாலேயே. பிரம்மம் அறியப்படும் பொருள் அல்ல. அதனால் அது மெய். இதுமட்டுமல்ல. ப்ரம்மம் அறிகிற பொருளும் அல்ல, அறிவது என்ற க்ரியாரூபமுமல்ல. அறியப்படும் பொருள், அறியும் பொருள், அறிவது என்ற தொழில் என்ற த்ரிபுடீ சம்பந்தமற்ற சுத்த ஞானமயம். ஞாதா-அறிகிறவன் என்னும் கர்த்தா, ஞானம் - அறிவது என்ற தொழில் ஜ்ஞேயம்-அறியத்தக்கது என்ற கர்மா செயப்படுபொருள் மூன்று ஸ்வரூபமாகவும் இல்லாதது ப்ரஹ்மம். க்ரியை தால் அக்கிரியையில் இவன் கர்ததா, இது கர்ம செயப்படு பொருள் எனக் கூறலாம். நிஷ்கிரியமான பரபிரம்மத்தினிடம் க்ரியா நிமித்தமான இந்த வ்யவஹாரங்கள் கிடையாது. ஏற்பட நியாயமில்லை.

அவ்விதமிருந்தும் அந்த ப்ரம்ம ரூபமான ஹரியானவர் எப்பொழுதும் ஸாக்ஷியாக எல்லாவற்றையும் பற்றற்று அறிகிறவராக இருக்கிறார் முன்பு அறிகிறவனாக கர்த்தாவாக இல்லையென்றோம் இப்பொழுது சாக்ஷிரூபமாக, பார்ப்பது என்கிற தொழிலில் கர்த்தாவாக இருக்கிறார் என்றால் இது முன் பின் விரோதமில்லையா என்று கேட்கலாம். அதற்குப் பரிஹாரம் இதுவே. உண்மையில் பாரமார்த்திக தசையில் ஸகல வ்யவஹாரங்களும் இல்லாத காலத்தை வைத்து பர ப்ரம்மம் அகர்த்தா என்று சொன்னோம் வியவஹார தசை யென்னும் நமது அஞான தசையில் எல்லா காரியங்களும் வஸ்துக்களும் அஞானம் இருக்கும்வரை தோன்றுமாதலால் இத்தசையில் பகவான் அவைகளில் பற்றற்று கேவலஸாக்ஷியாக விளங்குகிறார் என்று சொல்லுகிறோம். நாடகமேடையில் நாடகம் நடக்கும்போது நடிகர்களையும் சபையோர்களையும் ப்ரகாசப்படுத்திக்கொண்டு இருந்த நாடகமேடையில் உள்ள தீபம் நாடகம் முடிந்து யாவரும் உறங்கச் சென்றுவிட்ட பிறகும் எரிந்துகொண்டு ப்ரகாசித்துக்கொண்டுதான் இருக்கிறது அப்பொழுது ப்ரகாசப் படுத்தப்பட வேண்டியவர்கள் இல்லை. ப்ரகாசப்படுத்தப் படுபவர்கள் இருந்தால் அவர்களை ப்ரகாசப்படுத்துகிறது. அவர்களில்லாவிட்டாலும் தான் பிரகாசித்துக்கொண்டுதானிருக் கிறது. அதுபோல் பிரம்மம் வ்யவஹாரதசையில் அபிமான மற்று தீபம்போல் பொருள்களை ப்ரகாசப்படுத்துகிறது அச் சமயத்தை ஒட்டி பிரம்மத்தை சாக்ஷி என்கிறோம். உண்மையில் ப்ரகாசப்படுத்தப்படவேண்டிய பொருள் ஒன்றுமே இல்லை ஆதலால் அப்பிரம்ம ஸ்வரூபஞானம் ப்ரகாசப்படுத்துகிற கர்த்தாவாக இல்லையெனக் கூறினார் உண்மை அவஸ்தையை அனுசரித்து இவ்விதமிருக்கக் கூடியவரும் ஸம்ஸாரமென்னும் காரிருளை நீக்கக்கூடியவருமான அந்த ஹரியை துதிக்கிறேன். (4)

आचार्येभ्यो लब्धसूक्ष्माच्युततत्त्वा
वैराग्येणाभ्यासबलाच्चैव द्रढिम्ना ।
भक्त्यैकाग्र्यध्यानपरा यं विदुरीशं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ५ ॥

ஆசார்யேப்யோ லப்தஸூக்ஷ்மாச்யுத தத்வா
வைராக்யேணாப்யாஸ பலாச்சைவ த்ரடிம்நா ।

*பக்த்யைகாக்ர்ய த்யானபரா யம் விதுரீஶம்*
*தம் ஸம்ஸாரத்வாந்த விநாஶம் ஹரிமீடே ॥*

**आचार्येभ्यः**-ஆசார்யர்களிடமிருந்து, **लब्ध**-அடையப்பட்ட, **सुसूक्ष्म**-மிகவும் ஸூக்ஷ்மமான, **अच्युततत्त्वाः**-ஹரியின் ஸ்வரூபத்தை உடையவர்களும, **वैराग्येण**-வைராக்யத்தாலும், **अभ्यासबलात्** -அப்பியாஸத்தின் பலத்தாலும, **दृढिम्ना**-உறுதியாலும, **भक्त्या चैव**-பக்தியாலும், **एकाग्र्य-ध्यानपराः**-ஏகாக்ரத்யானத்தில் ஈடுபட்டவர்களுமான யோகிகள, **यं**-எந்த, **ईशं**-ஈசுவரனை, **विदुः**-அறிகிறார்களோ, **तं**-அந்த, **संसारध्वान्त-विनाशं**-ஸம்ஸார இருளைப்போக்கும, **हरिं**-ஹரியை, **ईडे**-துதிக்கிறேன்.

*உத்தம ஆசார்யர்களிடமிருந்து உபதேசம் மூலம் மிக்க ரஹஸ்யமான, சுலபமாக அறியமுடியாத, ஸ்ரீ ஹரியின் உண்மை ஸ்வரூபத்தை அறிந்தவர்களும், விஷயப் பொருள்களின் தோஷங்களை உணர்ந்து அவைகளில் ஏற்பட்ட விரக்தியினாலும் (பொருள்கள் யாவும முக்குண மயமாதலால் தோஷம் நிறைந்தவைகளே. பயனற்றவைகளே என்ற உண்மையை உணர்ந்து அவைகளில் ஏற்பட்ட பற்றை விடுவது, மேற்கொண்டு பற்றுக்கொள்ளாமல் இருப்பது வைராக்யம் எனப்படும்) பிரதி தினம் அடிக்கடி நித்யாநித்ய வஸ்து விசாரம் செய்து நித்யப் பொருளான ஹரியின் ஸ்வரூபத்தை உணர்வது, அநித்யப் பொருள்களில் பற்றுக்கொள்ளாமல் இருக்கும்படி செய்வது என்னும் பழக்கமாகிற அப்யாஸத்தினாலும் மனதின் உறுதியினாலும் (*'**अभ्यासवैराग्याभ्यां तत्सिद्धिः; अभ्यासेन तु कौन्तेय वैराग्येण च गृह्यते**' *என்பதுபோன்ற வசனங்கள் ஆதாரங்கள்) உள்ளன்புடன் ஏகாக்ர மனதுடன் த்யானம் செய்வதில் ஈடுபட்ட மஹா யோகிகள் எந்த ஹரிரூப பரமேசுவரனை, ஸமாதிகாலங்களில் தனது ஆத்ம ஸ்வரூபமாக அறிகிறார்களோ அந்த ஸம்ஸாரமென்னும் காரிருளை அழிக்கும் ஹரியை துதிசெய்கிறேன்.* (5)

**प्राणानायम्योमिति चित्तं हृदि रुध्वा**
**नान्यत्स्मृत्वा तत्पुनरत्रैव विलाप्य ।**
**क्षीणे चित्ते भाद्दशिरस्मीति विदुर्यं**
**तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ६ ॥**

*ப்ராணுநாயம்யோமிதி சித்தம் ஹ்ருதி ருத்வா*
*நாந்யத் ஸ்ம்ருத்வா தத்புநரத்ரைவ விலாப்ய |*
*க்ஷீணே சித்தே பாத்ருசிரஸ்மீதி விதுர் யம்*
*தம் ஸம்ஸாரத்வாந்த விநாஶம் ஹரிமீடே ||*

**ओमिति**–'ஓம்' என்று, **प्राणान् आयम्य**–பிராணன்களை அடக்கி, **हृदि**–ஹிருதயத்தில, **चित्तं**–மனதை, **रुध्वा**–தடுத்துநிறுத்தி, **अन्यत्**–வேறு ஒன்றையும், **न स्मृत्वा**–நினைககாமல், **तत् पुनः**-அதை, **अत्रैव**–இங்கேயே, **विलाप्य**–மறையும்படி செய்து, **चित्ते**–மனமானது, **क्षीणे**–அழிந்த பிறகு, **भाद्दशिः अस्मि**–பிரகாசரூபமான ஞானமாக இருக்கிறேன் **इति**-என்று, **यं**-எவரை. **विदुः**-அறிகிறார்களோ, **तं**-அந்த, **संसारध्वान्त-विनाशं**–ஸம்ஸார இருளைப்போககும், **हरिं**-ஹரியை, **ईडे**–துதிக்கிறேன்.

ஓம் என்னும் ப்ரணவஸ்வருபத்தை தியானித்துக்கொண்டு மூச்சுக்காற்றை அடக்கி பிறகு அதன்மூலமாக மனதையும் ஹிருதயமென்னும் அதன் இருப்பிடத்தைவிட்டு வேறு இடம் செலுத்தாது அங்கேயே நிலைநிறுததி மற்றபொருளை நினைக்காமல் மேலும் அந்த சித்தத்தையும இந்த ஹரியினிடமே மறையும்படி செய்து, அல்லது அந்த மற்ற பொருள் யாவையும் இந்த சித்த மென்னும் மனதிலேயே ஒடுங்கும்படுசெய்து (கார்யம் காரணத் தில் லயமாவது இயற்கை. உலகம் பூராவும் மனதினுலேயே ஏற்பட்டுள்ளபடியால் அம்மனதும் பிரம்மத்திடம் கல்பித மாதலால் அதை அதை அதன் அதன் காரண வஸ்துவில் லய மடையும்படி யோகிகள் சிந்தித்துப் பார்ப்பார்கள். அம்மனதும், ப்ராணவாயுவை ப்ராணுயாமபூர்வம் தடை செய்து சலனமற்ற தாகச் செய்தால்தான் சலனமற்றதாக ஆகி தன்கார்ய உலகத்தை தன்னுள் லயமாக்கிக்கொண்டு, தானும் பிரம்மத்திடம் லயமாகி சுத்த பிரம்மம் விளங்க ஹேதுவாகும் என்பது யோகவேதாந்த சித்தாந்தம்) இவ்விதம் மனது தனது விருத்திகளுடன் லயமடைந்து இருக்கும்போது தான் ப்ரகாசரூபமான ஞானப் பொருள் ருபமாக நானே இருக்கிறேன் என்று ஹரியை தனது ஆத்மாவாகவே அறிகிறார்கள் யோகிகள். அவ்விதமான இந்த ஸம்ஸாரம் என்னும் இருளை அகற்றுகிறவனை ஸ்ரீஹரியை

''चले प्राणे चलं चित्तं निश्चले निश्चलं तथा''

सर्वद्वाराणि संयम्य मनो हृदि निरुध्य च ।
मूर्ध्न्याधायात्मनः प्राणानास्थितो योगधारणाम् ॥

ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्मामनुस्मरन् ।
"तदा द्रष्टुः स्वरूपेऽवस्थानम्"

*என்ற வசனங்கள் இங்கு ப்ரமாணமாகக் கொள்ளத்தக்கன.* (6)

**यं ब्रह्माख्यं देवमनन्यं परिपूर्णं**
**हृत्स्थं भक्तैर्लभ्यमजं सूक्ष्ममतर्क्यम् ।**
**ध्यात्वात्मस्थं ब्रह्मविदो यं विदुरीशं**
**तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ७ ॥**

*யம் ப்ரஹ்மாக்யம் தேவமநந்யம் பரிபூர்ணம்*
*ஹ்ருத்ஸ்த்தம் பக்தைர் லப்யமஜம் ஸூக்ஷ்மமதர்க்யம்*
*த்யாத்வாZZத்மஸ்த்தம் ப்ரஹ்மவிதோ யம் விதுரீஶம்*
*தம் ஸம்ஸாரத்வாந்த விநாஶம் ஹரிமீடே ||*

**अनन्यं**–தன்னைக்காட்டிலும் வேறுபொருளற்றவரும், **परिपूर्णं**–எங்கும் நிறைந்தவரும், **हृत्स्थं**–ஹிருதயத்தில இருப்பவரும், **भक्तैः**–பக்தர்களால், **लभ्यं**–அடையத்தக்கவரும, **अजं**–பிறப்பற்றவரும், **सूक्ष्मं**–ஸூக்ஷ்மமானவரும், **अतर्क्यं**–ஊஹித்து அறிய முடியாதவரும், **ब्रह्माख्यं**–ப்ரஹமம் என்று பெயருள்ளவருமான, **यं देवं**–எந்த தேவரை. **ध्यात्वा**–தியானித்து, **ब्रह्मविदः**–ப்ரஹமவிததுக்கள், **यं ईशं**–எந்த ஈசனை, **आत्मस्थं**–ஆத்மாவிலிருப்பவராக, **विदुः**–அறிகிறார்களோ, **तं**–அந்த, **संसारध्वान्तविनाशं**–ஸமஸாரமென்னும இருளை அழிக்கும், **हरिं**–ஹரியை, **ईडे**–துதிக்கிறேன.

*சைதன்ய ரூபமாக ப்ரகாசிப்பதும், தன்னைத்தவிர வேறு உண்மைப் பொருள் அற்றதும் எங்கும் நிறைந்த வஸ்துவானதும் பிராணிகளின் ஹிருதயத்திலேயே இருப்பவரும் (கடவுள் எங்கும் பூர்ணமாக இருப்பினும் உபாஸகர்கள் தியானித்துக் காண வேண்டிய இடம் ஹிருதயமாதலால் ஹிருதயத்தில் இருப்பவர் எனக் கூறப்பட்டார்.* "**हृदि ह्येष आत्मा**" "**ईश्वरः सर्वभूतानां**

हृद्देशेऽर्जुन तिष्ठति" என்றது முதலான வாக்யங்கள் ஆதாரம்) தன்னிடம் பக்திகொண்ட யோகிகளால் அடையத்தக்கவரும் பிறப்பு முதலிய பாவவிகாரங்களற்றவரும் புலன்களால், சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் மணம் இக்குணங்களைக்கொண்டு மற்றவை போல் அறியமுடியாததால் சூக்ஷ்ம வஸ்துவாக இருப்பவரும் ஆதலாலேயே கேவல புத்தி சக்தியினுல் ஊஹித்து அறிய முடியாதவருமான மூன்று பரிச்சேதங்களுமற்றதால் ப்ரஹ்மம் என்று பெயர் கொண்ட வஸ்துவை ஸமாதியில் தியானித்து ப்ரம்ம ஸ்வரூபமறிந்தவர்கள் ஹரிரூபமான பரமேச்வரனை தங்களது ஆத்மாவினிடத்திலேயே பேதமற்று விளங்குபவராக அறிகிறார்கள் தங்களது மனோவிருத்திகளை ப்ரகாசப்படுத்திக் கொண்டு மனோவிருத்திகளில் ப்ரதிபிம்ப ப்ரகாசமாக விளங்கு பவராக ஜீவாத்மாவோடு கூடவே, கர்மபலன்களை அனுபவிக்கச் செய்துகொண்டு இருக்கிறார் என்றும் பொருள் கொள்ளலாம். அவ்விதமான ஸம்ஸார இருளைப் போக்கும் ஹரியை துதிக் கிறேன். (7)

मात्रातीतं स्वात्मविकासात्मविबोधं
ज्ञेयातीतं ज्ञानमयं हृद्युपलभ्य ।
भावग्राह्यानन्दमनन्यं च विदुर्यं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ८ ॥

மாத்ராதீதம் ஸ்வாத்மவிகாஸாத்ம விபோதம்
ஜ்ஞேயாதீதம் ஜ்ஞானமயம் ஹ்ருத்யுபலப்ய ।
பாவக்ராஹ்யானந்தமனந்யம் ச விதுர் யம்
தம் ஸம்ஸாரத்வாந்தவிநாசம் ஹரிமீடே ॥

यं–எவரை, मात्रातीतं–பஞ்சதன்மாத்ரைகளுக்கு அப்பால் பட்டவராகவும், அளவிடமுடியாதவராகவும், स्वात्मविकासात्मविबोधं–தனது சொந்த பிரகாசத்தினாலேயே மனதையும் பிரகாசிக்கச்செய்கிறவராகவும், ज्ञेयातीतं–அறியப்படும் பொருள்களைத் தாண்டி நிற்பவராகவும், ज्ञानमयं–ஞானஸ்வரூபராகவும், भावग्राह्यानन्दं–பாவனையினால் அறியத்தக்க ஆனந்தஸ்வரூபராகவும், हृदि–மனதில், उपलभ्य–தியானித்து, अनन्यं–வேறாக இல்லாதவராக, विदुः–ஸாக்ஷாத்தாகத் தெரிந்துகொள்கிறார்களோ,

**तं**–அந்த, **संसारध्वान्तविनाशं**–ஸம்ஸார இருளைப்போக்கும், **हरिं**–ஹரியை, **ईडे**–துதிக்கிறேன்.

*யோகிகள் எந்த ஸ்ரீ ஹரியை சப்த தன்மாத்ரை ஸ்பர்ச தன்மாத்ரை, ரூபதன்மாத்ரை, ரஸதன்மாத்ரை, கந்ததன்மாத்ரை என சொல்லப்படும் சூக்ஷ்ம பூதங்கள், அதனுல் ஏற்படும் ஸ்தூல பூதங்கள் இவைகள் யாவிற்கும் காரணமான முக்குண ஜடப் பொருள் ப்ருகிருதி இவைகளைத்தாண்டி ஒதுங்கி அப்பால் நிற்பவராகவும், ( இரவும் பகலும் ஒன்று சேர்ந்து கலந்து இருப்ப தில்லை என்பதுபோல் சேதனப் பொருளான பிரம்மமும் அசேதனப் பொருளான ப்ரகிருதி அதன் கார்ய வர்க்கங்களும் உண்மையில் சேராது தனித்தே இருப்பது நியாயம். ஆதலால் அசேதன ப்ரகிருதி கார்யங்களில் பற்றுள்ள ஸம்ஸாரிகளுக்கு பிரம்மப்பொருள் திரையால் மறைக்கப்பட்டதுபோல விளங்காது தான்.) தனது சொந்தமான இயற்கைப்ரகாசத்தினுலேயே ஜீவ மனோவிருத்திகளை ப்ரகாசிக்கச் செய்கிறவராயும் (* **प्रतिबोधविदितं मतं**) *தனது ப்ரம்ம ஸ்வரூபத்தை விஷயமாகக் கொண்ட ப்ரம்மாகார அகண்ட மனோ விருத்தியினுல் அறியப்படுகிற வராயும், மனது என்னும் உபாதியால் பிரிந்து விளங்கும் ஜீவாத்மாவை தனது ப்ரகாசத்தினுலேயே ப்ரகாசிக்கச் செய்கிற வரும் அறியப்படும் எல்லாப் பொருளையும் தாண்டி நிற்பதும் (அவை யாவும் பொய்ப்பொருள்கள் இது மெய்ப்பொருள் அவை யாவும் இப்பொருளின் நாலில் ஒரு பாகத்தின் தோற்றமே. ஆதலால் உலகப் பொருள்களுக்கு அப்பாற்பட்டது இப்பொருள் எனக் கூறப்படுகிறது ) ஹரியென்னும் பரப்ரம்மம் அறிவு மயம், மற்ற சிலர் கூறுவதுபோல் ஞானம் என்னும் குணத்தை சில சமயம் தன்னிடம் உடையது என்பதல்ல என்பதைக் கூற ஞான மயம் என்றார். பேரறிவு ஸ்வரூபம் அப்பிரம்மம்* **भावग्राह्यानन्दं** *பரபிரம்ம பாவனையினுல்* **अहं ब्रह्मास्मि** *என்ற ஐக்ய பாவனையினுல் அறியப்பட்டு அனுபவிக்கப்படும் பேரானந்த ஸ்வரூபம் அல்லது நல்ல சுத்தமான மனோவிருத்தி பாவமெனப்படும் அதனுல் காணப் படக்கூடியது மனோ விருத்திகளைக் கொண்டு அறியத்தக்கது. அதாவது விஷயங்களை அறியப்படுத்தும் ஜடமான மனோ விருத்தி களுக்கு பிரகாசத்தைக் கொடுக்கிறது ஆத்மப்ரகாசம். ஆத்ம ப்ரகாசத்தால்தான் மனோ விருத்திகளை நாம் அறிந்து கொள் கிறோம். தான் ஆனந்தஸ்வரூபமாதலால் தனது ஆனந்த அம்சங்*

களினால் இதர பூதங்களையும் ஆனந்தமடையச் செய்கிறது இப் பரம்பொருள், ஜீவஸ்வரூபமான தன்னைக் காட்டிலும் முற்றிலும் வேறுபடாத ஆத்மப்பொருளாகவே இருப்பதாக தங்களுடைய மனதில் அறிந்து அனுபவித்து பிறகு ப்ரத்யக்ஷமாக அதுவே நான் என்று அறிகிறார்கள். அவ்விதமான இச்சம்சார இருட்டை நீக்கும் ஸ்ரீ ஹரியை துதி செய்கிறேன். (8)

यद्यद्वेद्यं वस्तुसतत्त्वं विषयाख्यं
तत्तद्ब्रह्मैवेति विदित्वा तदहं च ।
ध्यायन्त्येवं यं सनकाद्या मुनयोऽजं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ९ ॥

யத் யத் வேத்யம் வஸ்துஸதத்வம் விஷயாக்யம்
தத் தத் ப்ரஹ்மைவேதி விதித்வா ததஹம் ச ।
த்யாயந்த்யேவம் யம் ஸநகாத்யா முநயோऽஜம்
தம் ஸம்ஸாரத்வாந்த விநாஶம் ஹரிமீடே ॥

**विषयाख्यं**—விஷயம் என்று பெயருள்ள, **वेद्यं**—அறியத்தக்கதான, **यद्यत्**—எந்தெந்த, **वस्तुसतत्त्वं**—வஸ்துஸ்வரூபமோ, **तत्तत्**—அதெல்லாம் **ब्रह्मैव**—ப்ரஹ்மம்தான், **तत्**—அந்த ப்ரஹ்மம், **अहं च**—நான் **इति**—என்று **विदित्वा**—அறிந்து, **एवं**—இவ்வாறே, **सनकाद्याः**—ஸநகர் முதலான, **मुनयः**—முனிவர்கள், **अजं**—பிறப்பற்ற, **यं**—எந்த ஸ்வரூபத்தை, **ध्यायन्ति**—த்யானம் செய்கிறார்களோ, **तं**—அந்த, **संसारध्वान्तविनाशं**—ஸம்ஸாரமெனனும் இருளைப்போக்கும், **हरिं**—ஹரிஸ்வரூபத்தை, **ईडे**—துதிக்கிறேன்.

விஷயம் என்ற பெயருடைய எந்தெந்த பொருள்களின் ஸ்வரூபம் அறியப்படுகிறதோ அந்தந்த, விஷயமான எல்லாப் பொருளும் அவைகள் தோன்றுவதற்கு ஆதாரக் காரணமான ப்ரம்ம ஸ்வரூபமே, (கயிறில் தோன்றும், ஸர்ப்பம், தைலதாரை, பூமியில் ஏற்பட்டுள்ள வெடிப்பு என்பவைகளின் உண்மை ஸ்வரூபம் கயிற்றின் ஸ்வரூபம் தானே. மண்ணில் தோன்றும் சட்டி குடங்களின் ஸ்வரூபம் மண் ஸ்வரூபம் தானே) அந்த ப்ரஹ்மமே நான். இவ்வாறு உண்மையை அறிந்து ஸநகர் முதலான முனிவர்கள் பிறப்பற்ற எந்த பரதத்வத்தை தியானம் செய்கிறார்

களோ அவ்விதமானவரும், அக்ஞான இருள் மயமான ஸம்ஸாரபந்தத்தை விலக்குகிறவருமான ஹரியை துதிக்கிறேன் முதலில் தன்னால் அறியபபடும் பிரபஞ்சம் முழுவதையும் பிரஹ்மமாகத் தெரிந்துகொள்ளவேண்டும. பிறகு அறிகிறவனை தானும் அந்த ப்ரஹ்மம்தான் என்று அறிந்து அத்விதீயமான ப்ரஹ்மத்தை ஆத்மாபிந்நமாக த்யானம் செய்து வந்தால் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டு அக்ஞானம் விலகி பிறவி மரணம் என்னும் ஸம்ஸாரமும் நீங்கும். (9)

यद्यद्वेद्यं तत्तदहं नेति विहाय
स्वात्मज्योतिर्ज्ञानमयानन्दमवाप्य ।
तस्मिन्नस्मीत्यात्मविदो यं विदुरीशं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ १० ॥

யத் யத் வேத்யம் தத் ததஹம் நேதி விஹாய
ஸ்வாத்மஜ்யோதிர் ஞாநமயாநந்தமவாப்ய ।
தஸ்மிந்நஸ்மீத்யாத்மவிதோ யம் விதுரீஶம்
தம் ஸம்ஸாரத்வாந்த விநாஶம் ஹரிமீடே ॥

**यद्यत्**-எது எல்லாம், **वेद्यं**-அறியபபடுகிறதோ, **तत्तत्**-அது எல்லாம், **अहं न**-நான் அலல, **इति**-என்று, **विहाय**-(அவைகளில நான், என்னுடையது என்ற அபிமானததை) நீக்கி, **स्वात्मज्योतिर्ज्ञानमयानन्दं**-தனது ஆத்மஸ்வரூபமாயும் பிரகாசஸ்வரூபமாயும், ஞானனந்தஸ்வரூப மாயும் உள்ள அநத ப்ரஹ்மஸ்வரூபத்தை, **अवाप्य**-அடைந்து, (பிரத்யக்ஷமாக அறிநது), **तस्मिन्**-அதனிடம, **अस्मि इति**-இருக்கிறேன் என்று, **आत्मविदः**-ஆத்ம ஞானிகள, **यं ईशं**-எந்த ஈசனே, **विदुः**-அறிகிறார்களோ, **तं**-அந்த, **संसारध्वान्तविनाशं**-ஸம்ஸாரமாகிற இருளைப்போக்கும், **हरिं**-ஹரியை, **ईडे**-துதிக்கிறேன்.

எந்தெந்தப்பொருள் (என்னால்) அறியப்படுகிறதோ அந்தந்த, அறியப்படும் ஜடப்பொருளாக நான் இல்லை. நான் அறிகிறவன். இவை என்னால் அறியப்படுபவை நான் சேதனன். இவை ஜடம். நான் உண்மை வஸ்து. இவை பொய். நான் இவைகளுக்கு அதிஷ்டானமாக இருக்கிறேன். என்னிடம் இவை தோன்று

ரன. இவ்வாறு எனக்கும் விஷயங்களுக்கும், வெளிச்சத்துக்கும் போல மிகுந்த வேற்றுமை இருக்கும்பொழுது நான் எப்படி இந்த விஷயங்களாக இருக்கமுடியும்? இவ்வாறு அடிக்கடி மனனம் செய்து. இதுவரை இந்த சரீராதிகளையே நான் என்னுடையது என்று எண்ணிவந்ததை விலக்கி பிரகாசமாயும் ஞான ஸ்வரூபமாயும் ஆனந்த ஸ்வரூபமாகவும் உள்ள தனது ஆத்ம ஸ்வரூபத்தை அறிந்து அதை ஸாக்ஷாத்தாகப் பெற்று அந்த ப்ரஹ்மவஸ்துவிலேயே நான் இருக்கிறேன். (மண்ணில் குடம் இருக்கிறது என்பதுபோல) அந்த பரபிரம்மத்திலேயே அந்தக்கரண உபாதியினால் பிரிக்கப்பட்டுத் தோன்றிக்கொண்டிருக்கிறேன். கண்ணாடி என்னும் உபாதியினால் முகம், பிரதிபிம்பமென வெவ்வேறாகக் காணப்பட்டபோதிலும் உண்மையில், கண்ணாடி என்னும் உபாதியில் தோன்றும் பிரதிபிம்பம் பிம்ப ஸ்வரூபமே ப்ரதிபிம்பம் பிம்பத்தையே தனது தோற்றத்திற்கு ஆதாரமாக உடையது, அதுபோல் ஜீவன் என்னும் ப்ரதிபிம்பத்திற்கு பிம்பபூத ஆதாரமாக இருப்பது பரபிரம்மமே. ஆதலால் அப்பிரம்மத்தில் நான் ஜீவன் அவன் ஸ்வரூபமாக இருக்கிறேன் என்று அறிவது உசிதமே) இவ்வாறு ஆத்மஞானிகள் ஈசுவரனை எந்த ஹரியை அறிகிறார்களோ அவ்விதமானவரும் ஸம்ஸாரக் காரிருளை அழிக்கிறவராயுமுள்ள ஸ்ரீ ஹரியை துதி செய்கிறேன். (10)

हित्वाहित्वा दृश्यमशेषं सविकल्पं
मत्वा शिष्टं भादृशिमात्रं गगनाभम् ।
त्यक्त्वा देहं यं प्रविशन्त्यच्युतभक्ता-
स्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ११ ॥

ஹித்வா ஹித்வா த்ருச்யமசேஷம் ஸவிகல்பம்
மத்வா சிஷ்டம் பாத்ருசிமாத்ரம் ககநாபம் |
த்யக்த்வா தேஹம் யம் ப்ரவிசந்த்யச்யுத பக்தாஸ்
தம் ஸம்ஸாரத்வாந்தவிநாசம் ஹரிமீடே ||

**अच्युतभक्ताः**-ஹரிபக்தர்கள், **सविकल्पं**-விகல்பங்களுடன் (வேறுபாடுகளுடன்) கூடியதும், **दृश्यं**-அறியத்தக்கதுமான, **अशेषं**-எல்லா

வற்றையும், **हित्वा हित्वा**-விட்டுவிட்டு, **शिष्टं**-மிஞ்சியுள்ள, **गगनाभं**-ஆகாயத்திற்கொப்பான, **भाद्दशिमात्रं**-ஞானபரகாசத்தை மட்டும், **मत्वा**-சிந்தித்து, **देहं**-சரீரத்தை, **त्यक्त्वा**-விட்டுவிட்டு, **यं**-எந்த ஸ்வரூபத்தில், **प्रविशन्ति**-ப்ரவேசிக்கிறார்களோ, **तं**-அந்த, **संसारध्वान्तविनाशं**-ஸம்ஸார இருளை அழிக்கும், **हरिं**-ஹரியை, **ईडे**-துதிக்கிறேன.

*அச்யுதனை ஸ்ரீ ஹரியினிடம் பக்தி கொண்டவர்கள், விஷயமாக அறியப்படும் நாமரூபம் என்னும் விகல்பத்துடன்கூடிய எல்லாப் பொருளையும் நன்கு விலக்கி மிஞ்சியதும், ஆகாயத்திற் கொப்பானதும், (வியாபித்தும் கிரியையற்றும் சப்தம் தவிர மற்ற குணமின்றியும் பூதாகாசம் சூக்ஷ்மமாயிருப்பதுபோல பர. பிரம்ம சேதனப் பொருளும் இருப்பது பற்றி ஆகாயத்தை உபமானமாகக் கூறினர். ஏறக்குறைய ஆகாயமே பிரம்மம் போல் நாம் அறிக வஸ்துக்களுக்குள் இருப்பதால் ஆகாயத்தை உபமானமாகக் கூறவேண்டியதாயிற்று.) அந்த ஞான ப்ரகாசத்தையே ஸ்வரூபமாகக் கொண்ட ப்ரஹ்ம சைதன்யமே தனது ஆத்மாவாக விளங்குவதை நன்கு அறிந்து மனனம் செய்து தியானித்து ஸாக்ஷாத்காரமடைந்து பிராரப்தகர்ம வசத்தினால் ஏற்பட்டிருக்கும் இந்த தேகத்தையும் விட்டு, நான் என்னுடையது என்ற தேகாபிமானத்தை விட்டு, இறுதியில் தேக வியோக காலத்தில் தேகத்தையும் விட்டு ஹரிஸ்வரூபமான ப்ரஹ்மத்தில் இரண்டறக் கலந்து விடுகிறார்கள். முக்தர்கள் ஆகிறார்கள். தேகம் அழிவதற்குள்ளாகவே தத்வ ஞானத்தின் பயனாக அஞானம் விலகி தேகாபிமானம் நீங்கி ப்ராரப்த கர்மக்ஷய பர்யந்தம் சலித்துக்கொண்டிருக்கும் தேகத்தில் பற்றற்று இருக்கிறார்கள். அவர்கள் ஜீவன்முக்தர்கள் எனப்படுவர். அவர்களே அத்தேகம் அழிந்த பிறகு விதேக முக்தர்கள் எனப்படுவர்; இரண்டு அவஸ்தைகளிலும் அவர்கள் ஞானத்தினால் தங்களது அஞானத்தை எரித்துவிட்டவர்களாதலால் ஹரியுடன் அபேத மானவர்களே அவ்விதமானவரும் ஸம்ஸார இருளை அழிப்ப வருமான ஸ்ரீ ஹரியை துதிக்கிறேன்.* (11)

सर्वत्रास्ते सर्वशरीरी न च सर्वः
सर्वं वेत्त्येवेह न यं वेत्ति च सर्वः ।
सर्वत्रान्तर्यामितयेत्थं यमयन्य-
स्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ १२ ॥

*ஸர்வத்ராஸ்தே ஸர்வஶரீரீ ந ச ஸர்வ:*
*ஸர்வம் வேத்த்யேவேஹ ந யம் வேத்தி ச ஸர்வ: ।*
*ஸர்வத்ராந்தர்யாமிதயேத்தம் யமயன் யஸ்*
*தம் ஸம்ஸாரத்வாந்தவிநாஶம் ஹரிமீடே ॥*

**यः**–எவர், **सर्वत्र**–எங்கும, **आस्ते**–இருக்கிருரோ, **सर्वशरीरी**–எல்லாவற்றையும் சரீரமாகக்கொண்டவரோ, **न च सर्वः**–எவர் எல்லாப் பொருளாக இல்லேயோ, **इह**–இங்கு, **सर्वं**–எல்லாவற்றையும, **वेत्त्येव**–கட்டாயம் அறிகிருரோ, **यं**–எவரை, **सर्वः**–எலலாம, **न वेत्ति च**–அறிகிற திலலேயோ, **इत्थं**–இவவாறு, **सर्वत्र**–எங்கும, **अन्तर्यामितया**–அந்தர்யாமியாக, **यमयन्** -அடக்கிககொண்டு இருககிருரோ, **तं**-அந்த, **संसारध्वान्तविनाशं**–ஸம்ஸாரமென்னும் இருளேபபோக்கும, **हरिं**–ஹரியை, **ईडे**–துதிக்கிறேன்.

*பிருஹதாரண்யக உபநிஷத்தில்* **यः पृथिव्यां तिष्ठन् पृथिव्या अन्तरः यं पृथिवी न वेद यस्य पृथिवी शरीरं यः पृथिवीमन्तरो यमयति एष त आत्मा अन्तर्याम्यमृतः** *' என்ற அந்தர்யாமி ப்ராஹ்மணத்தின் கருத்தைக் கூறுகிருர்.*

*பிரஹ்மம் எல்லாப் பொருள்களிலும் இருக்கிறது. எல்லாப் பொருள்களுக்கும் ஆதார உபாதான காரணமாக பிரம்மம் இருப்பதால், அக்காரண வஸ்து, தனது கார்ய வஸ்துக்களிலும் விட்டுப்பிரியாது இருப்பது நியாயமே. பிரம்மத்தைத்தவிற, மற்ற யாவும் பிரம்மத்தின் கார்யப் பொருளாகவிருப்பதால் அப் பிரம்மம் எல்லாப்பொருளிலும் இருக்கிறது என கூறப்படுகிறது. எல்லா சரீரங்களிலும் ஜீவன் என்னும் க்ஷேத்ரஜ்ஞனை இருப்பதும் அதுவே* **'क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत'** *ஆகையால் அந்தந்த ஜீவர்களின் சரீரமே இவருக்கும் சரீரமாகின்றது இவருக்குத் தனியாக சரீரம் கிடையாது பிருதிவிக்குள் அந்தர்யாமியாக உள்ள ப்ரஹ்மத்திற்கு பிருதிவியே சரீரம். இதுபோல. இவ்விதமிருந்தும் இந்த பிரம்மம் இவ்வுலகத்தில் உள்ள எந்த ஜடப்பொருள் ஸ்வரூபமாகவும் இல்லே. என்றும் சேதனமாய் இருக்கும் வஸ்து, ஒரு நாளும் தான் அசேதனப் பொருளாக ஆகாது. பிரம்மத்தைத் தவிற யாவும் அசேதனப் பொருள் அதன் ஸ்வரூபமாக உண்மையில் எங்ஙனம் ப்ரம்மம் ஆகும்? இவ்வாறே எல்லாப் பொருள்களிலும் அந்தர்யாமியாக*

உள்ளிருந்து அப்பொருள்களை அடக்கி ஆளும் ஈசுவரனை இருப்பதால், உள்ளிருந்து எல்லாவற்றையும் அடக்கி ஆண்டு வருகிற ப்ரஹ்மம் தன்னால் அடக்கி ஆளப்படுகிற எல்லாவற்றை யும் அறிகின்றது ஆனால் அவ்விதம் அடக்கி ஆளும் அவரை அடக்கி ஆளப்படும் எல்லாம் அறிவதில்லை அவ்வித மஹிமை கொண்டவரும் ஸம்ஸாரக் காரிருளைப்போக்குகிறவருமான ஸ்ரீ ஹரியை துதிக்கிறேன். (12)

सर्वं दृष्ट्वा स्वात्मनि युक्त्या जगदेत-
द्दृष्ट्वात्मानं चैवमजं सर्वजनेषु ।
सर्वात्मैकोऽस्मीति विदुर्यं जनहृत्स्थं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ १३ ॥

ஸர்வம் த்ருஷ்ட்வா ஸ்வாத்மனி யுக்த்யா ஜகதேதத்
த்ருஷ்ட்வாத்மானம் சைவமஜம் ஸர்வஜனேஷு ।
ஸர்வாத்மைகோऽஸ்மீதி விதுர் யம் ஜனஹ்ருத்ஸ்தம்
தம் ஸம்ஸாரத்வாந்தவிநாசம் ஹரிமீடே ॥

**युक्त्या**–யுக்தியினாலே, **एतत्**-இந்த, **सर्वं जगत्**-பிரபஞ்சம் முழுவதையும், **स्वात्मनि**-தனது ஆத்மவஸ்துவிலே, **दृष्ट्वा**-பார்த்து, **एवं**–இவ்வாறே, **अजं**–பிறப்பு அற்ற, **आत्मानं**–ஆத்மவஸ்துவை **सर्वजनेषु च**-எல்லா பிராணிகளிடமும், **दृष्ट्वा**–பார்த்து, **सर्वात्मा**–, எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக, **एकः**-ஒரே பொருளாக, **अस्मि**–இருக்கிறேனே, **इति**-என்று, **जनहृत्स्थं**-பிராணிகளின் ஹிருதயத்திலுள்ள, **यं**-எவரை, **विदुः**-அறிகிறார்களோ, **तं** அந்த, **संसारध्वान्तविनाशं**–ஸம்ஸாரமாகிற இருளைப்போக்கும், **हरिं**–ஹரியை, **ईडे**–துதிக்கிறேன்.

ஞானிகள் இந்த எல்லா பிரபஞ்சமும் தனது ஆத்மஸ்வ ரூபத்தில் இருப்பதாக பிரத்யக்ஷமாக அறிந்து அவ்வாறே பிறப்பு முதலிய விகாரமற்ற தங்களது ஆத்மாவையும் எல்லா உயிர் களிடத்திலும் பேதமற்று ஒரே ஆன்மாவாகவிருப்பதை ஸாக்ஷாத் தாக அறிந்து எல்லா ஸ்வரூபமாகவும், எல்லாவற்றிற்கும் ஆத்ம ஸ்வரூபமாகவும் நான் இருக்கிறேன் என்று எந்த ஹரியை ஜீவர்களின் ஹிருதயத்திலிருப்பவராக ஸாக்ஷாத்தாக காணு கிறார்களோ அவ்விதமான அஞான சம்ஸார இருளைப் போக்கும்

ன்,

"यस्तु सर्वाणि भूतानि आत्मन्येवानुपश्यति ।
सर्वभूतेषु चात्मानं ततो न विजुगुप्सते ॥"

'क्षेत्रज्ञं चापि मां विद्धि' 'हृदि ह्येष आत्मा ॥' (13)

सर्वत्रैकः पश्यति जिघ्रत्यथ भुङ्क्ते
स्प्रष्टा श्रोता बुध्यति चेत्याहुरिमं यम् ।
साक्षी चास्ते कर्तृषु पश्यन्निति चान्ये
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ १४ ॥

*ஸர்வத்ரைக: பச்யதி ஜிக்ரத்யத புங்க்தே*
*ஸ்ப்ரஷ்டா ச்ரோதா புத்யதி சேத்யாஹுரிமம் யம் ।*
*ஸாக்ஷீ சாஸ்தே கர்த்ருஷு பச்யன்னிதி சாந்யே*
*தம் ஸம்ஸாரத்வாந்தவிநாசம் ஹரிமீடே ॥*

**सर्वत्र**–எல்லா இடத்திலும், **एकः**–ஒருவனாக இருந்துகொண்டு, **पश्यति**–பார்க்கிறான். **जिघ्रति**–முகருகிறான். **अथ**–பின், **भुङ्क्ते**–சாப்பிடுகிறான், **स्प्रष्टा**–தொடுகிறவனாகவும், **श्रोता च**–கேட்கிறவனாகவும் இருக்கிறான், **बुध्यति**–அறிகிறான், **इति**–என்றும், **कर्तृषु**–கிரியைகளைச் செய்பவர்களிடம், **पश्यन्**–பார்த்துக்கொண்டு, **साक्षी च**–ஸாக்ஷியாகவும் **आस्ते**–இருக்கிறார், **इति च**–என்றும், **अन्ये**–ஞானிகளான மற்ற சிலர், **यं इमं**–எந்த இந்த ஆத்மாவை, **आहुः**–சொல்கிறார்களோ, **तं**–அந்த, **संसारध्वान्तविनाशं**–ஸம்ஸார இருளைப்போக்கும், **हरिं**–ஹரியை, **ईडे**–துதிக்கிறேன்.

*எங்கும் ஒரே ஆத்ம வஸ்துதான் கண்ணால் விஷயத்தைப் பார்க்கிறான், வாசனையை முகருகிறான் உணவு அருந்துகிறான், சீதோஷ்ண ஸ்பர்சத்தை அறிகிறான். காதுகளினால் சப்தத்தை உணருகிறான். மனதினால் சுகம் துக்கம் முதலானவற்றை அறிகிறான் என்று இவரைப்பற்றிச் சிலர் சொல்கிறார்கள். விசாரம் செய்து அறிந்த மற்ற ஞானிகள் இந்த ஹரி கர்த்தா போக்தா ஞாதா அல்ல, ஆனால் கிரியைகளைச்செய்யும் ஜீவர்களிடம் அவர்கள் ஸ்வரூபமாகவே இருந்துகொண்டு ஜீவர்கள் செய்யும் கார்யங்களில் பற்றற்று கேவலம் சாக்ஷியாக பார்த்துக் கொண்டிருக்கிறார் என்று சொல்கிறார்கள். அவ்வித மஹிமை*

கொண்டவரும் சம்ஸாரக் காரிருளைப் போக்குகின்றவருமான ஸ்ரீஹரியை துதிக்கிறேன்.

'नान्योऽतोऽस्ति द्रष्टा नान्योऽतोऽस्ति श्रोता' 'साक्षी चेता केवलो निर्गुणश्च'

உலகில் ஸாதாரணமாகக் கண்ணால் பார்த்துக்கொண்டும், காதால் கேட்டுக்கொண்டும், மூக்கால் முகர்ந்துகொண்டும் மனதால் அறிந்துகொண்டும் மற்ற புலன்களாலும் அதனைச் செய்துகொண்டும் இருக்கும் ஜீவன் ஒவ்வொரு சரீரத்திலும் வெவ்வேறாக இருக்கிறான். ஆகவே ஜீவர்கள் அநந்தம். எல்லா வற்றிலும் அந்தர்யாமியாக இருக்கும் ஈசுவரன் ஒருவர்தான் என்று எல்லா த்வைதிகளும் கூறுகிறார்கள். ஆனால் உபநிஷத் ஸித்தாந்தம் இப்படியல்ல. ஒரே ப்ரஹ்மமே உபாதி பேதங் களால் வெவ்வேறு சரீரங்களில் வெவ்வேறு ஜீவன்களாகக் காண்கிறது. கண்ணால் பார்க்கிறதும், காதால் கேட்கிறதும், மூக்கால் முகருகிறதுமான ஜீவர்களெல்லாம் ஒரே ப்ரஹ்ம ஸ்வரூபமானதால் அந்த ஒரே ப்ரஹ்மம்தான் எல்லா சரீரங் களிலும் பார்த்துக்கொண்டும் கேட்டுக்கொண்டும் இருக்கிறது. ஆனாலும் அஸங்கமான ஆத்மாவுக்கு ஒன்றுடனும் உண்மையில் ஸம்பந்தமில்லாததால் ஸாக்ஷியாக பார்த்துக்கொண்டு மட்டும் இருக்கிறது. இதையே அடுத்த சுலோகத்திலும் விளக்குகிறார். (14)

पश्यञ्शृण्वन्नत्र विजानन्रसयन्सं-
जिघ्रद्भिभ्रद्देहमिमं जीवतयेत्थम् ।
इत्यात्मानं यं विदुरीशं विषयज्ञं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ १५ ॥

பச்யன் ச்ருண்வந்நத்ர விஜாநன் ரஸயன் ஸம்
ஜிக்ரத் பிப்ரத் தேஹமிமம் ஜீவதயேத்தம் ।
இத்யாத்மாநம் யம் விதுரீசம் விஷயக்ஞம்
தம் ஸம்ஸாரத்வாந்தவிநாசம் ஹரிமீடே ॥

**अत्र**—இந்த சரீரத்தில், **जीवतया**—ஜீவஸ்வரூபமாக இருப்பதால், **पश्यन्**—பார்த்துக்கொண்டும், **शृण्वन्**—கேட்டுக்கொண்டும், **विजानन्**—அறிந்துகொண்டும், **रसयन्**—ருசிபார்த்துக்கொண்டும், **संजिघ्रत्**—

முகர்ந்து கொண்டும், **इमं देहं**–இந்த தேஹத்தை, **बिभ्रत्**–தரித்துக் கொண்டும் (இருக்கிறார்), **इति इत्थं**–என்றிவ்வாறு, **विषयज्ञं**–விஷயங்களை அறிகிற, **आत्मानं**–ஆத்மாவை, **यं ईशं**–எந்த ஈசனை, **विदुः**–அறிகிறார்களோ, **तं**–அந்த, **संसारध्वान्तविनाशं**–ஸம்ஸார இருளைப்போக்கும், **हरिं**–ஹரியை, **ईडे**–துதிக்கிறேன்.

"**अनेन जीवेनात्मना अनुप्रविश्य नामरूपे व्याकरवाणि**" "**तत्वमसि**" "**अहं ब्रह्मास्मि**" "**क्षेत्रज्ञं चापि मां विद्धि**" என்ற வசனங்களின்படி ப்ரஹ்மமைதன்யமே ஜீவத்தன்மையையடைந்து இந்த தேஹத்தை கர்மவசமாகக் கிடைத்ததை தரிக்கிறவனாக என்னுடையது என்று போஷிப்பவனாக இந்த தேகத்தில் இருந்து கொண்டு இவ்வுலகில் கண்களால் பார்க்கிறவனாயும் காதுகளால் கேட்டறிகிறவனாயும் முகருகிறவனாயும் சுவைத்து ருசி அறிகிறவனாயும் மனதால் சுக துக்காதிகளை உணருகிறவனாயும் இருக்கிறார் என்று முன் கூறியபடி விஷயங்களை அறியும் தன்னையே ஜீவனையே எந்த ஈசுவரராக ஞானிகள் ஸாக்ஷாத்தாக கண்டு உணருகிறார்களோ (**तत्वमसि** என்ற மஹாவாக்யம் **तत्** என்ற சொல்லிற்குப் பொருளான ஈசுவரனிடமும் **त्वं** என்ற சொல்லிற்குப் பொருளான ஜீவனிடமும், ஜீவத்தன்மை ஈசுவரத்தன்மை ஏற்படுவதற்கு காரணமான உபாதிகள் மனது மாயை இவைகளை விலக்கி சுத்த சித்து ஒன்று என ஜீவசித்திற்கும் ஈசுவரசித்திற்கும் பேதமின்மையை விளக்குகிறது என்பது சித்தாந்தம்) அவ்விதமான சம்சாரகாரிருளை அகற்றுகிற ஸ்ரீஹரியை துதிக்கிறேன். (15)

जाग्रद्दृष्ट्वा स्थूलपदार्थानथ मायां
दृष्ट्वा स्वप्नेऽथापि सुषुप्तौ सुखनिद्राम् ।
इत्यात्मानं वीक्ष्य मुदास्ते च तुरीये
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ १६ ॥

ஜாக்ரத் த்ருஷ்ட்வா ஸ்தூலபதார்த்தாநத மாயாம்
த்ருஷ்ட்வா ஸ்வப்நே஽தாபி ஸுஷுப்தௌ ஸுகநித்ராம் ।
இத்யாத்மாநம் வீக்ஷ்ய முதாஸ்தே ச துரீயே
தம் ஸம்ஸாரத்வாந்தவிநாஶம் ஹரிமீடே ॥

**जाग्रत्**-ஜாக்ரதவஸ்தையில், **स्थूलपदार्थान्**-ஸ்தூலப்பொருள் களை, **दृष्ट्वा**-பார்த்தும், **अथ**-பிறகு, **स्वप्ने**-ஸ்வப்னத்தில், **मायां**-மாயையை, **दृष्ट्वा**-பார்த்தும், **अथ**-பிறகு, **सुषुप्तौ**-ஸுஷுப்தியில், (நல்ல தூக்கத்தில்), **सुखनिद्रामपि**-ஆனந்தத்துடன் நித்ரையையும் (அக்ஞானத்தையும்), **दृष्ट्वा**-அனுபவித்தும், **तुरीये**-துரீய (நான்காவது) அவஸ்தையில், **आत्मानं**-ஆத்மவஸ்துவை, **वीक्ष्य च**-பிரத்யக்ஷமாக அறிந்தும், **मुदा**-ஸந்தோஷமாக, **इति**-இவ்வாறு (எவன்), **आस्ते**-இருக் கிறானோ, **तं**-அந்த, **संसारध्वान्तविनाशं**-ஸம்ஸார இருளைப்போக்கும், **हरिं**-ஹரியை, **ईडे**-துதிக்கிறேன்.

*எந்த ஹரியே ஜாக்ரதவஸ்தையில் ஸ்தூல சரீரங்களின் வ்யஷ்டி ஸமஷ்டி அபிமானியான முறையே விசுவன், விராட் புருஷனாக விழித்து இருந்துகொண்டு அவ்வவஸ்தையில் காணத் தக்க ஸ்தூலப் பொருள்களான சரீரம் முதலியவற்றைப் பார்த்தும் அனுபவித்தும், பிறகு ஸ்வப்னம் எனப்படும் உறங்கும் சமயத்தில் ஏற்படும் இரண்டாவது அவஸ்தையில் ஸ்தூல சரீர இந்திரியங்கள் லயமாகி இருந்துங்கூட தனது அஞான மென்னும் அவித்யையினால் கற்பிக்கப்பட்ட பொய்யான மனோமய பொருள்களை தைஜஸன், ஹிரண்யகர்பன் என்று முறையே வ்யஷ்டி ஸமஷ்டி சூக்ஷ்ம சரீர அபிமானியாக இருந்து கண்டு அனுபவித்தும் பிறகு வேறு பொருள் அறியாது தூங்கும் சமயம் சுஷுப்தியென்னும் அவஸ்தையிலும் தனது சொந்த ஆனந்தானு பவத்துடன், தன்னை மறைத்துவரும் அஞானமென்னும் நித்ரையை மட்டும் வ்யஷ்டி ஸமஷ்டி சரீர அபிமானிகளான ப்ராக்ஞன், சூத்ராத்மாவாக முறையே இருந்து அனுபவித்தும் அதற்கும் அப்பாற்பட்ட நாலாவது அவஸ்தையில் தன் ஸ்வரூபத்தை மட்டும்* **'अव्यवहार्यमग्राह्यं अलक्षणं अचिन्त्यमव्यपदेश्यमेकात्मप्रत्ययसारं प्रपञ्चोपशमं शान्तं शिवं अद्वैतं चतुर्थं मन्यन्ते स आत्मा स विज्ञेयः'** *என்று மாண்டுக்யோபநிஷத்தில் கூறிய தத்வப்பொருளாக ஸாக்ஷாத்கரித்து பேரானந்தத்துடன் விளங்குகிறானோ, அவ்விதமாயும் சம்ஸார இருளை அகற்றுகிற வராயுமுள்ள ஸ்ரீ ஹரியை துதிக்கிறேன்.* (16)

**पश्यञ्शुद्धोऽप्यक्षर एको गुणभेदा-**
**न्नानाकारान्स्फाटिकवद्भाति विचित्रः ।**

भिन्नश्छिन्नश्चायमजः कर्मफलैर्य-
स्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ १७ ॥

*பச்யன் ஶுத்தோ஽ப்யக்ஷர ஏகோ குணபேதாத்*
*நாநாகாரான் ஸ்பாடிகவத் பாதி விசித்ர: ।*
*பிந்நச்சிந்நச்சாயமஜ: கர்மபலைர் யஸ்*
*தம் ஸம்ஸாரத்வாந்தவிநாஶம் ஹரிமீடே ॥*

**शुद्धः**—நிர்மலராகவும், **अक्षरः**—நாசமில்லாதவராகவும், **एकः**—ஒருவ ராகவும், **अजोऽपि**—பிறப்பில்லாதவராகவுமிருந்தபோதிலும், **योऽयं**—எந்த இவர், **गुणभेदान्** ஸத்வரஜஸ்தமோ குணங்களால வேறுபாடு அடை கின்ற, **नानाकारान्**—பல உருவங்களை, **पश्यन्**—பார்த்துக்கொண்டு, **कर्मफलैः**—கர்ம பலன்களால, **भिन्नः**—வேறுபட்டவராகவும, **छिन्नश्च**—பிளக்கப்பட்டவராகவும, **स्फटिकवत्**—ஸ்படிகம்போல, **विचित्रः**—பலவித மாக, **भाति**—தோன்றிக்கொண்டிருக்கிறரோ, **तं**—அந்த, **संसारध्वान्त-विनाशं**—ஸம்ஸார இருளைப்போக்கும், **हरिं**—ஹரிஸ்வரூபத்தை, **ईडे**—துதிக்கிறேன்.

*நம் ஆத்மஸ்வரூபம் வாஸ்தவத்தில் சுத்தமானது தோஷமோ விகாரமோ ஒன்றுமில்லாதது அழிவற்றது. எங்குமுள்ளது. அது ஒரே வஸ்து பிறப்பு இல்லாதது அதனாலேயே மாறுபாடு வளர்ச்சி முதலான மற்ற விகாரங்களுமற்றது. இவ்வாறு இருந்த போதிலும் ஸத்வம் ரஜஸ் தமஸ் என்னும் முக்குணவடிவமான ப்ரகிருதியினால் ஏற்படும் பலவித உருவங்களை (சரீரங்களை)ப் பார்த்து அவற்றில் நான் என்னுடையது என்ற அபிமானத்தை யும் வைப்பதால் இந்த ஆத்மா பலவிதமாக ஆய்விடுகிறான். அவன் செய்யும் கர்மாக்களால் பிறப்பு, அழிவு, விகாரம் முதலான எல்லா தோஷங்களும் ஏற்படுகின்றன. சரீராபிமானத்தால் ஏற்படும் இவை வாஸ்தவத்தில் ஆத்மாவில் கிடையாது. அருகிலுள்ள புஷ்பங்களின் நிறங்களையொட்டி ஸ்படிகம் பல நிறமுள்ளதாகக் கண்களுக்குத்தோன்றியபோதிலும் உண்மையில் ஸ்படிகம் வெளுப்புத்தான் என்பதை யாரும் மறுக்கமாட்டார்கள் இவ்வாறு பலவாறாகத் தோன்றும் ஜீவன் வாஸ்தவத்தில் ஹரிஸ்வரூபம்தான். அந்த ஹரிதான் அபிமானத்துக்குக் காரண மான அக்ஞானத்தை நீக்கி பிறவி மரணங்களைப் போக்குபவர். அந்த ஹரியை துதிக்கிறேன்.*

(17)

ब्रह्मा विष्णू रुद्रहुताशौ रविचन्द्रा-
विन्द्रो वायुर्यज्ञ इतीत्थं परिकल्प्य ।
एकं सन्तं यं बहुधाहुर्मतिभेदा-
त्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ १८ ॥

*ப்ரஹ்மா விஷ்ணூ ருத்ரஹுதாசௌ ரவிசந்த்ரா-*
*விந்த்ரோ வாயுர் யஜ்ஞ இதீத்தம் பரிகல்ப்ய ।*
*ஏகம் ஸந்தம் யம் பஹுதாஹுர் மதிபேதாத்*
*தம் ஸம்ஸாரத்வாந்தவிநாசம் ஹரிமீடே ॥*

**एकं सन्तं**–ஒரே பொருளாக இருக்கிற, **यं**–எவரை, **मतिभेदात्**–புத்திபேதத்தால, **ब्रह्मा**–ப்ரஹ்மா, **विष्णु**–விஷ்ணு, **रुद्रहुताशौ**–ருத்ரன், அகனி, **रविचन्द्रौ**–சூரியன், சந்திரன், **इन्द्रः**–இந்திரன், **वायुः**–வாயு, **यज्ञः**–யகஞன், **इति इत्थं**–என்றிவவாறு, **परिकल्प्य**–கற்பனைசெய்து, **बहुधा**–பலவாக, **आहुः**–சொல்கிறார்களோ, **तं**–அந்த, **संसारध्वान्तविनाशं**–ஸம்ஸார இருளைப்போக்கும், **हरिं**–ஹரியின் ஸ்வரூபத்தை, **ईडे**–துதிக்கிறேன.

*ஒரே ஹரிதான் பல தேவதாவடிவமாகக் காணப்படுகிறார். அவரவர்களுடைய புத்தியையும் வாஸனையையும் ஒட்டி உபாஸனம் செய்து க்ஷேமம் அடைய ஒரே பரமாத்மா தமது மாயாசக்தியால் பலதேவதா உருவமெடுத்துக் கொள்கிறான். ப்ரஹ்மா, விஷ்ணு, ருத்ரன் என்னும் மும்மூர்த்திகளோ, இந்திரன் வாயு, அக்னி ஸூர்ய சந்திரர்கள் முதலான தேவதைகளோ எல்லாம் ஒரே பரமாத்மாவின் பல வடிவங்கள் தாம். எந்த தேவதையை உபாஸித்தாலும் அது வாஸ்தவத்தில் பரமாத்ம வடிவமானதால் அதன் மூலம் க்ஷேமத்தையடையலாம். ஆகவே தேவதாமூர்த்திகளில் உயர்வு தாழ்வு காண்பது அறியாமையே. எவர் இவ்வாறு பலதேவதா உருவில் தோன்றுகிறாரோ அந்த ஹரியை பிறவி மரணம் என்னும் ஸம்ஸாரத் துன்பம் நீங்க துதிக்கிறேன். இதே கருத்தை* ‘**एकं सत् विप्रा बहुधा वदन्ति**’ *என்ற ருக்வேத மந்திரமும்* **स ब्रह्म स शिवः स हरिः सेन्द्रः सोऽक्षरः परमः स्वराट्** *முதலான வசனங்களும் காட்டுகின்றன.* (18)

सत्यं ज्ञानं शुद्धमनन्तं व्यतिरिक्तं
शान्तं गूढं निष्कलमानन्दमनन्यम् ।
इत्याहादौ यं वरुणोऽसौ भृगवेऽजं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ १९ ॥

*ஸத்யம் ஞானம் ஶுத்தமனந்தம் வ்யதிரிக்தம்*
*ஶாந்தம் கூடம் நிஷ்கலமானந்தமனந்யம் ।*
*இத்யாஹாதௌ யம் வருணோऽஸௌ ப்ருகவேऽஜம்*
*தம் ஸம்ஸாரத்வாந்தவிநாஶம் ஹரிமீடே ॥*

**आदौ**–ஆதியில, **असौ वरुणः**–அந்த வருணர், **भृगवे**–பிருகுவிற்கு, **अजं**–பிறப்பற்ற, **यं**–எந்த வஸதுவை, **सत्यं**–முக்காலததிலும அழிவற்ற உண்மைப்பொருள், **ज्ञानं**–சைதன்யஸ்வரூபம், **शुद्धं**–தோஷங்கள அற்றது, **अनन्तं**–எல்லையற்றது, **व्यतिरिक्तं**–ஐந்து கோசங்களைக்காட்டி லும வேறானது, **शान्तं**–விகாரங்களற்றது, **गूढं**–மறைந்திருப்பது, **निष्कलं**–அவயவங்களற்றது, **आनन्दं**–ஆநந்த ஸவரூபம், **अनन्यं**–தன்னைககாட்டிலும் வேறாக இலலாதது, **इति** என்று, **आह**-சொன்னாரோ, **तं**–அந்த, **संसारध्वान्तविनाशं**–ஸம்ஸார இருளை அழிக்கும், **हरिं**–ஹரியின் ஸ்வரூபததை, **ईडे**–துதிக்கிறேன்.

*தைத்திரீய உபநிஷத்தில் வருணர் தனது குமாரனுக்கு ப்ரஹ்மதத்வத்தை இவ்வாறு உபதேசிக்கிறார். ப்ரஹ்மம் ஸத்யம் உண்மையானது முக்காலங்களிலும் அழியாமல் மாறுபாடு அடையாமல் ஏக ரூபமாக இருக்கிறது. அது ஞானரூபம நித்ய சைதன்ய ஸ்வரூபம். சுத்தமானது அவித்யையும் அதனால் உண்டாகும் தோஷங்களுமற்றது. அநந்தம தேசத்தாலோ, காலத்தாலோ வஸ்துவினாலோ எல்லையற்றது. எல்லா தேசங் களிலும் இருப்பதால் தேச பரிச்சேதமில்லை. எல்லாக் காலங் களிலும் இருப்பதால் காலபரிச்சேதமில்லை. எல்லா வஸ்துக் களாகவுமிருப்பதால் வஸ்து பரிச்சேதமுமில்லை. நம் சரீரத்தில் காணும் ஐந்து கோசங்களைக் காட்டிலும் வேறாக அவைகளுக்குள் மறைந்திருப்பது எந்தவிதமான விகாரமும் அவயவமும அற்றது. ஆனந்தஸ்வரூபம். இது நம்மைவிட வேறன்று. நம் ஆத்மாவாக உள்ளது. இதைக் காட்டிலும் வேறு பொருள் ஒன்றும் வாஸ்த*

வத்தில் கிடையாது இவ்வாறு முன்னல் பிருகு முனிவருக்கு வருணர் உபதேசித்தார். பிறப்பு இறப்பற்ற அந்த ஆத்ம வஸ்துதான் ஸம்ஸாரபயத்தைப் போக்கும் ஹரிஸ்வரூபமாக விளங்குகிறார். அவரைப் போற்றுகிறேன். (இங்கு ஒவ்வொரு சுலோகத்திலும் 'ஸம்ஸார இருளைப் போக்கும் ஹரி'' என்று கூறுவதால் இதற்காகவே ஹரியைப் போற்றுகிறேன் என்பது (19)

कोशानेतान्पञ्च रसादीनतिहाय
ब्रह्मास्मीति स्वात्मनि निश्चित्य दृशिस्थम् ।
पित्रा शिष्टो वेद भृगुर्यं यजुरन्ते
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ २० ॥

கோஶாநேதான் பஞ்ச ரஸாதீநதிஹாய
ப்ரஹ்மாஸ்மீதி ஸ்வாத்மநி நிச்சித்ய த்ருஶிஸ்த்தம் ।
பித்ரா ஶிஷ்டோ வேத ப்ருகுர்யம் யஜுரந்தே
தம் ஸம்ஸாரத்வாந்த விநாஶம் ஹரிமீடே ॥

**यजुरन्ते**-யஜுர்வேத உபநிஷத்தில், (தைத்திரீயோபநிஷத்தில்), **भृगुः**-ப்ருகு என்பவர், **पित्रा**-தனது தந்தை வருணரால், **शिष्टः**-உபதேசிக்கப்பட்டவராக ஆகி, **रसादीन्**-அன்னமயகோசத்தை முதலாவதாகக்கொண்ட, **एतान्**-இந்த, **पञ्च कोशान्**-ஐந்து கோசங்களையும், **अतिहाय**-விலக்கி, **स्वात्मनि**-தனது ஜீவஸ்வரூபத்திலேயே, **दृशिस्थं**-கூடஸ்த கேவல சாக்ஷியாக விளங்கும், **ब्रह्मास्मीति**-பிரம்மமாக நான் இருக்கிறேன் என்று, **निश्चित्य**-நிர்ணய ரூபமாக அனுபவித்து, **यं**-எவரை, **वेद**-அறிகிறாரோ, **तं**-அவ்விதமானவரும், **संसारध्वान्तविनाशं** ஸம்ஸார இருளைப்போக்குபவருமான, **हरिं**-ஹரியை, **ईडे**-போற்றுகிறேன்.

இவ்வாறு வருணர் உபதேசித்ததும் பிருகு அறிந்துகொண்ட பிரகாரத்தைக் கூறுகிறார். உலகில் ஸாதாரணமாக எல்லாரும் பஞ்சகோசங்களையே 'நாம்' என்ற சப்தத்தால் சொல்கிறார்கள். அதனல்தான் ஐந்து கோசங்களுக்கும் அப்பால்பட்டதான ஆத்ம தத்வத்தை அறியமுடிகிறதில்லை. அன்னரஸத்தாலேயே வளரும் ஸ்தூலமான அன்னமயகோசம், கர்மேந்திரியங்களும்

களும் சேர்ந்த பிராணமயகோசம், ஞானேந்திரியங்களும் மனமும் சேர்ந்த மனோமயகோசம், ஞானேந்திரியங்களும் புத்தியும் சேர்ந்த விக்ஞானமயகோசம். ஜீவன் என்ற ஆநந்தமய கோசம் இவ்வைந்து கோசங்களையும் நன்கு விசாரித்து தன் பிதா சொன்ன லக்ஷணங்கள் எல்லாம் இவற்றில் இல்லாததால் இவை ஆத்மாவல்ல என்று ஒவ்வொன்ருக விலக்கி எஞ்சியதாக உள்ள சுத்த ஞானவடிவான ஆத்மஸ்வரூபத்தை ப்ரஹ்மமாக அறிந்து அதுவே நான் என்று தீர்மானித்து பிருகு பிரத்யக்ஷிந்ந ப்ரஹ்மஸ்வரூபத்தை நேரில் தெரிந்துகொண்டார். இவ்வாறு தைத்திரீய உபநிஷத்தில் விளக்கப்பட்டுள்ள ப்ரஹ்மமேதான் ஹரியாக விளங்குகிறது. ஸம்ஸார பயத்தைப் போக்கும் அந்த ஹரியை துதிக்கிறேன். (20)

येनाविष्टो यस्य च शक्त्या यदधीनः
क्षेत्रज्ञोऽयं कारयिता जन्तुषु कर्तुः ।
कर्ता भोक्तात्मात्र हि यच्छक्त्यधिरूढ-
स्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ २१ ॥

யேநாவிஷ்டோ யஸ்ய ச ஶக்த்யா யததீந:
க்ஷேத்ரக்ஞோऽயம் காரயிதா ஜந்துஷு கர்த்து: ।
கர்த்தா போக்தாத்மாऽத்ர ஹி யச்சக்த்யதிரூட:
தம் ஸம்ஸாரத்வாந்தவிநாஶம் ஹரிமீடே ॥

**जन्तुषु**–பிராணிகளிடத்தில், **अयं क्षेत्रज्ञः**–இந்த க்ஷேத்ரக்ஞன் என்னும், **आत्मा**–ஜீவன், **येन**–எந்த ஈசுவரரூப ஹரியினுல, **आविष्टः**–தனது சைதன்ய ரூபத்தினுல் வியாபிக்கப்பட்டவனுகவும, **यस्य शक्त्या**–எந்த ஈசுவரனுடைய சக்தியினுல், **यदधीनः**–எந்த ஈசுவரனுக்கு அடங்கினவனுகவும் இருந்துகொண்டு, **कर्तुः कारयिता**–காரியங்களை செய்யும் புத்தி மனம் சரீரம் முதலியவற்றை ஏவிச் செய்விககிறவனுகவும், மேலும் **यच्छक्त्यधिरूढः**–எந்த ஈசுவர சக்தியை ஆதாரமாகக கொண்டவனுய், **अत्र**–இந்த சரீரத்தில, **कर्ता**–கர்த்தா வென்றும், **भोक्ता**–அதன் பலன்களை அனுபவிக்கின்றவன் என்றும சொல்லப்படுகிருனே, **तं**–அந்த **संसारध्वान्तविनाशं**–ஸமஸார இருளை அழிக்கும், **हरिं**–ஹரியை, **ईडे**–துதிக்கிறேன்.

இந்த சரீரம் கர்மாக்களைச் செய்வதற்கும், கர்மபலன்களை அனுபவிப்பதற்கும் ஸாதனமானதால் க்ஷேத்ரமெனப்படும். இந்த சரீரத்தையே நான் என எண்ணிக்கொண்டு கர்த்தாவாகவும் போக்தாவாகவும் இருக்கும் ஜீவன் க்ஷேத்ரக்ஞன். இந்த ஜீவனுக்குள் ஈசுவரன் இருந்துகொண்டு சக்தியைக் கொடுக்கிறான். ஜீவன் ஈசுவரனுக்கு அடங்கியவன். வாஸ்தவத்தில் இவன் ஈசுவரஸ்வரூபம்தான், சித்ரூபி. அதனால் இவன் கர்த்தாவும் (செய்கிறவனும்) அல்ல. போக்தாவும் (கர்ம பலன்களை அனுபவிக்கிறவனும்) அல்ல சரீரம் இந்திரியம் மனம் முதலான க்ஷேத்ரம் தான் எல்லாக் காரியங்களையும் செய்கிறது. ஜீவன் அக்ஞானத்தால் அவற்றில் பற்றுக்கொண்டு ஈசுவர சக்தியால் அவைகளைச் செய்யும்படி ஏவுகிறான். இதைக்கொண்டு தன்னையும் கர்த்தாவாகவும், போக்தாவாகவும், அறியாமையால் எண்ணுகிறான் இந்த சரீரமென்னும் க்ஷேத்ரத்துடன் தனக்கு சம்பந்தம் இல்லை என்று அறிந்த மாத்திரத்தில் அக்ஞானம் விலகிவிடுவதால் தன்னை ஹரியான பரமாத்ம ஸ்வரூபமாகத் தெரிந்துகொள்வான். "**प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः । अहंकारविमूढात्मा कर्ताऽहमिति मन्यते ॥**" அந்த ஹரி ஸம்ஸார இருளைப் போக்கட்டும். (21)

**सृष्ट्वा सर्वं स्वात्मतयैवेत्थमतर्क्यं**
**व्याप्याथान्तः कृत्स्नमिदं सृष्टमशेषम् ।**
**सच्च त्यच्चाभूत्परमात्मा स य एक-**
**स्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ २२ ॥**

ஸ்ருஷ்ட்வா ஸர்வம் ஸ்வாத்மதயைவேத்தமதர்க்யம்
வ்யாப்யாதாந்த: க்ருத்ஸ்நமிதம் ஸ்ருஷ்டமஶேஷம் ।
ஸச்ச த்யச்சாபூத் பரமாத்மா ஸ ய ஏக:
தம் ஸம்ஸாரத்வாந்தவிநாஶம் ஹரிமீடே ॥

**स य एकः परमात्मा**-பிரசித்தமான எந்த ஈசுவரரூபியான ஹரி ஒருவரே, **इत्थं**-இவ்வாறு, **अतर्क्यं**-எவராலும் மனதினாலும் சிந்தித்துப் பார்க்கமுடியாத அமைப்பையுடைய, **सर्वं**-எல்லாவற்றையும், **स्वात्मतयैव**-தன்னையே ஆத்மாவாகவுடையதாக, **सृष्ट्वा**-சிருஷ்டித்து, **अथ**-பிறகு, **सृष्टं**-அவ்விதம் சிருஷ்டிக்கப்பட்ட, **अशेषं**-சமஸ்தமான, **इदं**-

இந்த உலகை, **कृत्स्नं**-பூர்ணமாக, **अन्तः**-உள்ளிலும், **व्याप्य**-வியாபித்து, **सच्च**-ஸதூலப் பொருளாகவும், **त्यच्च**-ஸூக்ஷ்மப் பொருளாகவும, **अभूत्**-ஆனரோ, **तं**-அந்த பரமாத்மாவான, **संसारध्वान्तविनाशं**-ஸம்ஸார இருளை அழிக்கும, **हरिं**-ஹரியை, **ईडे**-துதிக்கிறேன.

*ஆதியில் பரமாத்மா ஒருவரே இருந்தார். அவர் தான் ஒருவராகவே வேறு ஸாதனம் ஒன்றையும் எதிர்பாராமலே மனதால் சிந்தித்துக் கூடப் பார்க்கமுடியாத இப்பிரபஞ்சம் முழுவதையும் ஸிருஷ்டித்தார். ஆனாலும் தன் ஸ்வரூபத்திற்குச் சிறிதும் மாறுதலோ குறைவோ ஒன்றும் ஏற்படவில்லை. பிறகு தான் சிருஷ்டித்த பிரபஞ்சம் முழுவதிலும் பாக்கியன்னியில் உள்ளே நுழைந்து எங்கும் பரவிவிட்டார். இவ்வாறு பரமாத்மா ஒருவரே ஸத்தாகவும் ஸ்தூலமான வடிவமுள்ள பொருளாகவும் த்யத்தாகவும், சூக்ஷ்மமான வடிவமில்லாத பொருளாகவும் ஆய்விட்டார். அந்தப் பரமாத்மாவேதான் ஹரியின் ஸ்வரூபம். அவரை ஸம்ஸார பயம் நீங்க துதிக்கிறேன்.* (22)

वेदान्तैश्चाध्यात्मिकशास्त्रैश्च पुराणैः
शास्त्रैश्चान्यैः सात्त्वततन्त्रैश्च यमीशम् ।
दृष्ट्वाथान्तश्चेतसि बुद्ध्वा विविशुर्यं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ २३ ॥

*வேதாந்தைச்சாத்யாத்மிக ஶாஸ்த்ரைச்ச புராணை:*
*ஶாஸ்த்ரைச்சாந்யை: ஸாத்வத தந்த்ரைச்ச யமீஶம் ।*
*த்ருஷ்ட்வாதாந்தச்சேதஸி புத்வா விவிஶுர் யம்*
*தம் ஸம்ஸாரத்வாந்தவிநாஶம் ஹரிமீடே ॥*

**वेदान्तैश्च**-உபநிஷத்துகளினாலும், **आध्यात्मिकशास्त्रैश्च**-அத்யாத்ம என்னும் ஜீவனது ஸ்வரூப விசாரம் செய்யும் சாஸ்திரங்களினாலும், **पुराणैः**-புராணங்களினாலும், **अन्यैश्च शास्त्रैः**-மற்ற சாஸ்திரங்களினாலும், **सात्त्वततन्त्रैश्च**-ஸாத்வததந்திர நூல்களினாலும், **यं ईशं**-எந்தஈசனை, **दृष्ट्वा**-அறிந்து, **अथ**-பிறகு, **अन्तः चेतसि**-தங்களது மனதிலுள்ளேயே, **बुद्ध्वा**-சாக்ஷாத்கரித்து உடனேயே, **यं**-எந்த ஈசனிடம், **विविशुः**-

இரண்டற ஐக்யமாகக்கலந்து விட்டாரகளோ, **तं**–அவ்விதமானவரும், **संसारध्वान्तविनाशं**–ஸம்ஸார இருளைப் போக்குகிறவருமான, **हरिं**–ஸ்ரீ ஹரியை, **ईडे**–துதிக்கிறேன்.

*வேதங்களில் கடைசியிலுள்ள உபநிஷத்துக்கள், அத்யாத்ம சாஸ்திரங்கள், அதாவது ஜீவாத்ம ஸ்வரூபத்தை நன்கு விசாரித்து விளக்கிக் காட்டும் ப்ரஹ்ம ஸூத்ரம் முதலான சாஸ்திரங்கள் உபநிஷதர்த்தத்தை விளக்கும் ஸூதஸம்ஹிதை முதலான புராணங்கள், மற்றும் பல சாஸ்திரங்கள் ஈசுவர ஸ்வரூபத்தை வர்ணிக்கும் ஸாதவத தந்திரங்கள் இவைகளைப் பலமுறை வாசித்து ஈசுவர ஸ்வரூபத்தை அறிந்து அதையே எப்பொழுதும் மனதில் தியானித்து ஸாக்ஷாத்காரம் பெற்று மஹான்கள் அந்த ஈசுவர ஸ்வரூபத்திலேயே ஐக்யமாகி விடுகின்றனர். அந்த ஈசுவரனை ஹரியை ஸம்ஸார இருளைப் போக்குபவரைப் போற்றுகிறேன். (23)*

**श्रद्धाभक्तिध्यानशमाद्यैर्यतमानै-**
**र्ज्ञातुं शक्यो देव इहैवाशु य ईशः ।**
**दुर्विज्ञेयो जन्मशतैश्चापि विना तै-**
**स्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ २४ ॥**

*ச்ரத்தா பக்தி த்யாந ஶமாத்யைர் யதமாநைர்*
*ஞாதும் ஶக்யோ தேவ இஹைவாஶு ய ஈச: ।*
*துர்விக்ஞேயோ ஜந்மஶதைச்சாபி விநா தைஸ்*
*தம் ஸம்ஸாரத்வாந்தவிநாஶம் ஹரிமீடே ॥*

**देवः**–பரதேவதாரூபியான, **यः ईशः**–எந்த பரமேச்வரன், **श्रद्धाभक्तिध्यानशमाद्यैः**–சிரத்தை பக்தி த்யானம் சமம் முதலியதுகளால், **यतमानैः**–அறிய முயற்சிக்கும் யதிகளால், **आशु**–சீக்கிரமே, **इहैव**–இவ்வுலகிலேயே, **ज्ञातुं**–ஸாக்ஷாத்தாகக்காண, **शक्यः**–கூடியவரோ **तैः विना**–அவைகளில்லாமல், **जन्मशतैश्चापि**–நூற்றுக்கணக்கான பிறவிகளிலும், **दुर्विज्ञेयः**–அறிய முடியாதவரோ, **तं**–அவ்விதமான, **संसारध्वान्तविनाशं**–ஸம்ஸார இருளை நீக்கும், **हरिं**–ஸ்ரீ ஹரியை, **ईडे**–

ஈசுவரனை அறிவதற்கு முக்யமான உபாயங்களைக் கூறுகிறார். ச்ரத்தை அதாவது குருவின் வாக்யத்திலும், சாஸ்திரம் (வேதம்) கூறும் விஷயங்களிலும் மிகுந்த விச்வாஸம், நம்பிக்கை, இதன் படி நடந்தால் அவசியம பலன் கிடைக்கும் என்ற உறுதி. பக்தி, ஈசுவரனிடத்தில் மாறாத அன்பு, மனதை ஈச்வர ஸ்வரூபத்தில் நிலை நிறுத்தல், புலனடக்கம், பொறுமை, வைராக்யம் இது முதலான ஸாதனங்களைக் கைக்கொண்டு இடைவிடாது முயற்சித்து வந்தால் இவ்வுலகிலேயே இந்த சரீரத்தில் வாழும் பொழுதே விரைவில் ஈசுவர ஸ்வரூபத்தை நன்கு அறிந்து கொள்ளமுடியும். மேலே கூறிய உபாயங்கள் இல்லாவிட்டால் நூற்றுக்கணக்கான பிறவிகள் எடுத்தாலும் ஈசுவரனை அறிய முடியாது அந்த ஈசுவரனை ஸம்ஸார இருளைப் போக்க துதிக்கிறேன். (24)

यस्यातर्क्यं स्वात्मविभूतेः परमार्थं
सर्वं खल्वित्यत्र निरुक्तं श्रुतिविद्भिः ।
तज्जादित्वादब्धितरङ्गाभमभिन्नं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ २५ ॥

யஸ்யாதர்க்யம் ஸ்வாத்மவிபூதே: பரமார்த்தம்
ஸர்வம் கல்வித்யத்ர நிருக்தம் ச்ருதிவித்பி: ।
தஜ்ஜாதித்வாதப்திதரங்காபமபிந்நம்
தம் ஸம்ஸாரத்வாந்தவிநாசம் ஹரிமீடே ॥

**यस्य**–எந்த பரமாத்மாவின், **स्वात्मविभूतेः**–தனது ஆத்ம விலாஸத்தின், **परमार्थं**–உண்மைததவம், **अतर्क्यं**–ஊகிதது அறிய முடியாததோ, **श्रुतिविद्भिः**–வேதமறிந்தவர்களால், **सर्वं खलु इत्यत्र**–ஸர்வம் கலவிதம் ப்ரஹ்ம தஜ்ஜலாநிதி சாந்த உபாஸீத, (**सर्वं खल्विदं ब्रह्म तज्जलानिति शान्त उपासीत**)-என்றஇடததில, **तज्जादित्वात्**–அதிலிருந்து உண்டானது முதலிய காரணத்தால, **अब्धितरङ्गाभं**–ஸமுத்திரத்தில அலைபோனறு, **अभिन्नं**–வேறாக இலலாததாக, **निरुक्तं**–விளக்கிக் கூறப்பட்டிருக்கிறதோ, **तं**–அந்த, **संसारध्वान्तविनाशं**–ஸம்ஸார இருளைப் போக்கும, **हरिं**–ஹரியை, **ईडे**–துதிக்கிறேன்

இப்பிரபஞ்சம் முழுவதும் பரமாத்மாவின் சொந்த விபூதி. அதாவது அவருடைய விலாஸம். அவரே இப்பிரபஞ்ச உருவ

மாகக் காணப்படுகிறார். ஆகவே இப்பிரபஞ்சத்தின் உண்மைத் தத்துவம் பரமாத்மஸ்வரூபம்தான். இவ்விஷயம் சாந்தோக்ய உபநிஷத்தில் 3வது அத்யாயம் 14வது கண்டத்தில் சாண்டில்ய வித்யையில் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. இப்பிரபஞ்சம் முழுவதும் முதலில் பரமாத்மாவிடமிருந்தே உண்டானது. இப் பொழுதும் பரமாத்மாவிடமே நிலை பெற்றிருக்கிறது. பரமாத்மா இல்லாவிடில் இப்பிரபஞ்சத்தைக் காண முடியாது முடிவிலும் அதிலேயே லயமடைகிறது. பிரபஞ்சம் அழிந்த பின் மிஞ்சி இருப்பது பரமாத்மாதான். இவ்வாறு முக்காலங்களிலும் பரமாத்மாவுடனேயே இருப்பதால் வாஸ்தவத்தில் இவை பரமாத்மாவைக் காட்டிலும் வேறல்ல உண்மையில் எப் பொழுதும் இருப்பது பரமாத்மாதான். ஆனால் சில சமயத்தில் மட்டும் பரமாத்மாவே பிரபஞ்ச உருவமாகத் தோற்றமளிக்கிறார். உலகம் வெறும் தோற்றமே. இதற்கு ஓர் திருஷ்டாந்தத்தைக் காட்டுகிறார் ஆசார்யாள். சமுத்திரத்தில் அலை உண்டாகிறது. அதிலேயே இருக்கிறது. அதிலேயே மறைந்து விடுகிறது. அறியாத குழந்தைகள அலையைத் தனிப்பொருளாக எண்ணிக் கொண்ட போதிலும் நாம் அப்படி எண்ணுவோமா? ஸமுத்திரத் தைக் காட்டிலும் அலை வேறு பொருளல்ல. ஸமுத்திரமேதான் அலை உருவமாகக் காட்சியளிக்கிறது என்பதுதானே உண்மை. இதுபோலவேதான் பிரபஞ்சமும் பிரஹ்மத்தைக் காட்டிலும் வேறல்ல. அந்த பிரஹ்மமேதான் ஹரியின் ஸ்வரூபம். அவரை றன். (25)

दृष्ट्वा गीतास्वक्षरतत्वं विधिनाजं
भक्त्या गुर्व्या लभ्य हृदिस्थं दृशिमात्रम् ।
ध्यात्वा तस्मिन्नस्म्यहमित्यत्र विदुर्यं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ २६ ॥

த்ருஷ்ட்வா கீதாஸ்வக்ஷரதத்வம் விதிநாஜம்
பக்த்யா குர்வ்யா லப்ய ஹ்ருதிஸ்த்தம்
த்ருஶிமாத்ரம் ।
த்யாத்வா தஸ்மிந்நஸ்ம்யஹமித்யத்ர விதுர் யம்
தம் ஸம்ஸாரத்வாந்தவிநாஶம் ஹரிமீடே ॥

**विधिना**—முறைப்படி, **गीतासु**—கீதையில, **अजं**—பிறப்பற்ற, **अक्षरतत्वं**—அழிவற்ற அக்ஷரமென்னும் ப்ரஹ்மஸ்வரூபத்தை, **दृष्ट्वा**—

பார்த்து(தெரிந்து), **गुर्व्या भक्त्या**—சிறந்த பக்தியினால், **दृशिमात्रं**-ஞானத்தையே ஸ்வரூபமாகக் கொண்ட அவரை, **हृदिस्थं**-ஹ்ருதயத்தில் இருப்பவராக, **लब्ध्य**—பெற்று, **तस्मिन्**—அந்த ஹ்ருதயத்தில், **अहमस्मि इति**—நான் அவராக இருக்கிறேன் என்று, **ध्यात्वा**—தியானம் செய்து, **अत्र**—இங்கு, **यं**—எவரை, **विदुः**—அறிகிறார்களோ, **तं**—அந்த, **संसारध्वान्तविनाशं**-ஸம்ஸார இருளைப்போக்கும், **हरिं**—ஹரியை, **ईडे**—துதிக்கிறேன்.

*கீதையின் கருத்தைக் கூறுகிறார். 12வது அத்யாயத்தில் அக்ஷரஸ்வரூபம் நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. அது பிறப்பு இறப்பு அற்றது. இந்த ஸ்வரூபத்தை முறைப்படி குருமுகமாக வேதாந்த ச்ரவணம் செய்து தெரிந்துகொள்ளவேண்டும். ஈசுவரனிடம் சிறந்த பக்தியைச் செலுத்தி அவரது அருளைப் பெற்றால் ஞான வடிவமான அக்ஷரஸ்வரூபத்தை தமது ஹ்ருதயத்திலேயே காணலாம். பிறகு அந்த அக்ஷரஸ்வரூபம் நான்தான் என்று தியானம் செய்துவந்தால் ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டு அந்த அக்ஷரஸ்வரூபமாக ஆகிவிடுவான்.*

'ये त्वक्षरमनिर्देश्यमव्यक्तं पर्युपासते ।
सर्वत्रगमचिन्त्यं च कूटस्थमचलं ध्रुवम् ॥

सन्नियम्येन्द्रियग्रामं सर्वत्र समबुद्धयः ।
ते प्राप्नुवन्ति मामेव सर्वभूतहिते रताः ॥'

*இந்த அக்ஷரஸ்வரூபமான ஹரியை ஸம்ஸார இருள் நீங்க போற்றுகிறேன்.* *(26)*

क्षेत्रज्ञत्वं प्राप्य विभुः पञ्चमुखैर्यो
भुङ्क्तेऽजस्रं भोग्यपदार्थान्प्रकृतिस्थः ।
क्षेत्रे क्षेत्रेऽप्स्विन्दुवदेको बहुधास्ते
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ २७ ॥

*க்ஷேத்ரஜ்ஞத்வம் ப்ராப்ய விபு: பஞ்சமுகைர் யோ*
*புங்க்தேऽஜஸ்ரம் போக்யபதார்த்தான்*
*ப்ரக்ருதிஸ்த்த: ।*
*க்ஷேத்ரே க்ஷேத்ரேऽப்ஸ்விந்துவதேகோ பஹுதாஸ்தே*
*தம் ஸம்ஸாரத்வாந்தவிநாசம் ஹரிமீடே ॥*

**यो विभुः**–எந்த பரமேச்வரன், **क्षेत्रज्ञत्वं**–க்ஷேத்ரஞன் என்னும் ஜீவனது தன்மையை, **प्राप्य**–அடைந்து. **पञ्चमुखैः**–ஐந்து இந்திரியங்கள் வாயிலாக, **अजस्रं**–எப்பொழுதும், **भोग्यपदार्थान्**–அனுபவிக்கத்தக்க பொருள்களான சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் மணம் என்ற விஷயங்களை, **प्रकृतिस्थः**–முக்குண ப்ருகிருதியில் இருந்துகொண்டு **भुङ्क्ते**–அனுபவிக்கிருனே. **अप्सु**–தண்ணீர்களில, **इन्दुवत्**–சந்திரன்போல **एकः**–ஒருவனுன இப்பரமாத்மாவே, **क्षेत्रे क्षेत्रे**–ஒவ்வொரு சரீரத்திலும், **बहुधा**–பலவாக, **आस्ते**–விளங்குகிருரோ, **तं**–அந்த, **संसारध्वान्त-विनाशं**–சம்ஸார இருளை நீக்குகிற, **हरिं** ஸ்ரீஹரியை, **ईडे**–துதிக்கிறேன்.

*பரமாத்மா எங்கும் உள்ளவர். அவர் ஒருவரேதான். இரண்டாவது பொருள் கிடையாது. ஆனாலும் முக்குண வடிவமான மாயா ஸம்பந்தத்தால் அதை தன்ஸ்வரூபமாக எண்ணினார். அந்த மாயையால் ஏற்பட்ட கோடிக்கணக்கான சரீரங்களில் புகுந்து ஜீவர்களாக ஆகிவிட்டார் சரீரமென்னும் க்ஷேத்திரத்தில் புகுந்து அதையே தனது ஸ்வரூபமாக எண்ணி வியவஹாரம் செய்வதால் க்ஷேத்ரக்ஞர் என்ற பெயர் ஏற்பட்டுவிட்டது. இவ்வாறு ஜீவத் தன்மையை அடைந்து தனது சரீரத்திலுள்ள ஐந்து இந்திரியங்கள் மூலமாக சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்னும் விஷயங்களை எப்பொழுதும் அனுபவித்துக் கொண்டிருக்கிறான்.*

'इदं शरीरं कौन्तेय क्षेत्रमित्यभिधीयते ।
एतद्यो वेत्ति तं प्राहुः क्षेत्रज्ञ इति तद्विदः ' ॥ (गीता. 13–I)

'पुरुषः प्रकृतिस्थो हि भुङ्क्ते प्रकृतिजान् गुणान् ' । (13-21)

*உண்மையில் பரமாத்மா ஒருவராக இருந்தாலும் சரீரம் பலவாகவிருப்பதால் அவரும் பலவாக (ஜீவர்களாக) த்தோன்றுகிறார். இதற்கு உதாஹரணம் கூறுகிறார். ஆகாசத்தில் சந்திரன் ஒருவன்தான் ஆனாலும் பல பாத்திரங்களில் தண்ணீரை நிரப்பி இரவில் வெளியே வைத்தோமானால் ஒவ்வொன்றிலும் சந்திரன் வெவ்வேறாக காணப்படுகிறான். ஒரே சந்திரன் பல நீர் நிலைகளில் பல சந்திரர்களாக காணப்படுவதுபோல ஒரே பரமாத்மா பல சரீரங்களில் பல ஆத்மாவாகக் காண்கிறான். உண்மையில் தண்ணீர் தான் அநேகம். சந்திரன் ஒன்றுதான்,*

இதுபோல ஆத்மா ஒன்றுதான். சரீரம்தான் அநேகம். சந்திரனைப்போல சூரியனையும் திருஷ்டாந்தமாகக் கூறலாம். இங்கு அத்யாரோபம் என்னும் ஸம்ஸார நிலை கூறப்பட்டது.

'यथा ह्ययं ज्योतिरात्मा विवस्वानपो भिन्ना बहुधैकोऽनुगच्छन् ।
उपाधिना क्रियते भेदरूपो देवः क्षेत्रेष्वेवमजोऽयमात्मा ॥'

'एक एव हि भूतात्मा भूते भूते व्यवस्थितः ।
एकधा बहुधा चैव दृश्यते जलचन्द्रवत् ॥'

'शरावोदकस्थो यथा भानुरेकः' 'अविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितम्' ।

அப்பேற்பட்ட பரமாத்மா ஹரியை துதிக்கிறேன். (27)

युक्त्यालोड्य व्यासवचांस्यत्र हि लभ्यः
क्षेत्रक्षेत्रज्ञान्तरविद्भिः पुरुषाख्यः ।
योऽहं सोऽसौ सोऽस्म्यहमेवेति विदुर्यं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ २८ ॥

யுக்த்யாலோட்ய வ்யாஸவசாம்ஸ்யத்ர ஹி லப்ய:
க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞாந்தரவித்பி: புருஷாக்ய: ।
யோஹம் ஸோऽஸௌ ஸோऽஸ்ம்யஹமேவேதி விதுர் யம்
தம் ஸம்ஸாரத்வாந்தவிநாசம் ஹரிமீடே ॥

**क्षेत्रक्षेत्रज्ञान्तरविद्भिः**—க்ஷேத்ரம் என்னும் சரீரம் க்ஷேத்ரக்ஞன் என்னும் ஜீவன இவைகளுடைய வித்யாசத்தை நன்குணர்ந்த ஞானிகளால், **व्यासवचांसि**—வ்யாசபகவானின வசனங்களை, **युक्त्या**—யுக்தியுடன், **आलोड्य**—நன்கு விமர்சனம செய்து, **यः पुरुषाख्यः**—எந்த புருஷன் என்ற சப்தத்தினல கூறபபடும பரமாத்மா, **अत्र**—இந்த ஜன்மாவிலேயே இந்த சரீரத்திலேயே, **लभ्यः**அடையத்தக்கவரோ, **सः**—அந்த ஹரி, **अहं**—நான், **असौ सः**—அவ்விதமான அந்த ஹரியாக, **अहमेवास्मि**—நானே இருக்கிறேன. **इति**—என்று, **यं**—எவரை, **विदुः**—அறிகிறார்களோ. **तं**-அந்த, **संसारध्वान्तविनाशं**—ஸம்ஸார இருளைப் போக்கும், **हरिं**—ஹரியை, **ईडे**—துதிக்கிறேன்.

*வியாஸருடைய வசனங்களை அதாவது ப்ரஹ்மஸூத்ரம், மோக்ஷதர்மம், ஸூதஸம்ஹிதை. கீதை முதலியவற்றை நன்கு படித்து அதன் கருத்துக்களை அறிந்து யுக்திகளைக் கொண்டு ஆராய்ந்துபார்த்தால் க்ஷேத்ரத்திற்கும் க்ஷேத்ரக்ஞனுக்கும் உள்ள வேற்றுமைகள் நன்கு தெரியவரும். க்ஷேத்ரம் என்னும் சரீரம் ஜடம் பிறந்து அழியக்கூடியது. கர்த்தா, போக்தா பலவாக உள்ளது. க்ஷேத்ரக்ஞனுடைய ஸ்வரூபமோ சேதனம் பிறப்பு இறப்பில்லாதது. அகர்த்தா, அபோக்தா, ஒன்று. இதுபற்றி விரிவாக கீதை 13வது அத்யாயத்தில் கூறப்பட்டு உள்ளது. இவ்வாறு சரீரத்திலிருந்து பிரித்து ஆதமஸ்வரூபத்தை பரமாத்மாவாகத் தெரிந்துகொண்டு விடுகிறார்கள். நானே அந்த பரமாத்மா, அவரே நான் என்று சிறிதும் வேற்றுமையின்றி ஜீவப்ரஹ்மைக்ய ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டுவிடுகிறது. அந்த பரமாத்மாவான ஸ்ரீஹரியை அக்ஞான இருள் விலக பிரார்த்திக்கிறேன்.* (28)

**एकीकृत्यानेकशरीरस्थमिमं ज्ञं**
**यं विज्ञायेहैव स एवाशु भवन्ति ।**
**यस्मिँल्लीना नेह पुनर्जन्म लभन्ते**
**तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ २९ ॥**

*ஏகீக்ருத்யாநேகஶரீரஸ்த்தமிமம் ஞம்*
*யம் விக்ஞாயேஹைவ ஸ ஏவாஶு பவந்தி ।*
*யஸ்மின் லீநா நேஹ புநர்ஜந்ம லபந்தே*
*தம் ஸம்ஸாரத்வாந்தவிநாஶம் ஹரிமீடே ॥*

**अनेकशरीरस्थं**–பல சரீரங்களில இருக்கிற, **इमं ज्ञं**–இந்த சேதனனான ஜீவனை, **एकीकृत्य**–ஒன்றாகச் செய்து (அவனை) **यं**–எந்த பரமாத்மஸவரூபமாக. **विज्ञाय**–அறிந்து, **इहैव**–இங்கேயே, **आशु**–விரைவில், **स एव**–அந்த பரமாத்மாவாகவே, **भवन्ति**–ஆகிறார்களோ, **यस्मिन्**–எந்த பரமாத்மஸ்வரூபத்தில், **लीना:**–மறைந்தவர்கள், **इह**–இங்கு, **पुन:**–மறுபடியும, **जन्म**–பிறவியை, **न लभन्ते**–அடைகிறார்கள இல்லையோ, **तं**–அந்த, **संसारध्वान्तविनाशं**–ஸம்ஸார இருளைப்போக்கும் **हरिं**–ஹரியை, **ईडे**–

பல சரீரங்களில் அதன் அபிமானியாக அநேகமாக விளங்கும் இந்த சேதனனுன (அறிந்துகொண்டிருக்கிற) ஜீவனை ஜடப் பொருள் சரீரம் முதலிய உபாதிகளை விலக்கி ஒன்ருக செய்து (அறிந்து) அந்த ஒரே ஜீவசைதன்யத்தை பரமாத்ம ஸ்வரூபமாக அறிந்தவர்கள் இந்த சரீரத்திலேயே, இந்த ஜன்மாவிலேயே, அந்த ஹரிஸ்வரூப ப்ரம்மமாகவே ஆகிவிடுகிருர்கள். பல கண்ணுடிகளில் அவைகளின் நிறபேதத்தால் பலவகைகளாகத் தோன்றும் ப்ரகாசம், உபாதிகளான கண்ணுடிகளை நீக்கிய பிறகு பேதமற்று ஒரே ப்ரகாசமாக தெரிவது போலும், பல குடமட உபாதிகளால் பிரித்து பலவாக சொல்லப்படும் குடாகாசம் மடாகாசம் முதலியன, அக்குட மட உபாதிகள் நீங்கியவுடன் பேதமற்ற ஒரே ஆகாசமென அறியப்படுவதுபோலும் ஈசுவர ரூபமான பரப்ரம்மம் பல சரீர உபாதி பேதத்தினுல் பல ஜீவபேதத்தை அடைந்து இருப்பதுபோல் தோன்றினுலும் அவ்வுபாதி சரீர சம்பந்தங்களை விலக்கிப் பார்ப்போருக்கு ஒரே ஆன்மப் பொருளாக விளங்கும் என்பது வேதாந்த ஸித்தாந்தம். இவ்விதம் அறிந்து எந்த ஹரிப்ரம்மத்தினிடம் ஐக்யமுற்று மறைந்தவர்கள் முக்தியடைந்தவர்கள் மறுபடியும் பிறப்பது என்னும் ஸம்ஸாரபந்தத்தை அடைவதில்லையோ, அவ்வித மானவரும் சம்ஸார காரிருளை அகற்றுபவருமான ஸ்ரீஹரியை துதிக்கிறேன். (29)

द्वन्द्वैकत्वं यच्च मधुब्राह्मणवाक्यैः
कृत्वा शक्रोपासनमासाद्य विभूत्या ।
योऽसौ सोऽहं सोऽस्म्यहमेवेति विदुर्यं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ३० ॥

த்வந்த்வைகத்வம் யச்ச மதுப்ராஹ்மணவாக்யை:
க்ருத்வா ஶக்ரோபாஸநமாஸாத்ய விபூத்யா ।
யோऽஸெள ஸோऽஹம் ஸோऽஸ்ம்யஹமேவேதி
விதுர் யம்
தம் ஸம்ஸாரத்வாந்த விநாஶம் ஹரிமீடே ॥

**मधुब्राह्मणवाक्यैः**:—பிருஹதாரண்ய உபநிஷத்தில் மதுபிராம்மண பாகத்திலுள்ள வாக்யங்களால, **यच्च**—எந்த பரபிரம்மவஸ்துவை, **द्वन्द्वै-कत्वं**-அதிபூதங்களான ப்ருதிவீ ஜலம் முதலானவை அத்யாத்மமான சரீரம்

இவ்விரண்டிலுமுள்ள ஒரே ஆத்மாவாக, **कृत्वा**-விசாரம் செய்து அறிந்து **विभूत्या**-மஹிமையோடு, **शक्रोपासनं**-இந்திரன் எனப்படும் பரமாத்மாவின் உபாஸனத்தை, **आसाद्य**-அடைந்து **योऽसौ**-எந்த பரப்பிரும்ம ஆத்மா ப்ருதிவி ஜலம் முதலியவற்றில் விளங்குகிறாரோ, **सोऽहं**-அவனே நான், இங்கு சரீரத்தில் **सोऽस्म्यहमेवेति**-அவனாக நானே இருக்கிறேன் என்று, **यं**-எந்த ஈசுவர ஹரியை, **विदुः**-அறிகிறார்களோ **तं**-அந்தவிதமானவரும், **संसारध्वान्तविनाशं**-ஸம்ஸார இருளைப் போக்குகிறவருமான, **हरिं**-ஸ்ரீஹரியை, **ईडे**-துதிக்கிறேன்.

*பிருஹதாரண்யக உபநிஷத்தில் 2-வது அத்யாயத்தின் கடைசியில்*

**'इयं पृथिवी सर्वेषां भूतानां मधु अस्यै पृथिव्यै सर्वाणि भूतानि मधु यश्चायमस्यां पृथिव्यां तेजोमयोऽमृतमयः पुरुषो यश्चायमध्यात्मं शारीरस्तेजोमयोऽमृतमयः पुरुषोऽयमेव स योऽयमात्मा इदममृतमिदं ब्रह्म इदꣳ सर्वम्'**

*என்று ஆரம்பிக்கும் பாகத்திற்கு 'மதுப்ராஹ்மணம்' என்று பெயர். இதில் திருப்பித் திருப்பி '**मधु**' என்ற சொல்வருவதால் இப்பெயர் ஏற்பட்டுள்ளது. இதில் **द्वन्द्वैकत्वं** இரண்டிரண்டாக தோன்றும் பொருள்களில் உள்ள தத்வம் ஒன்றுதான் என்று நிருபணம் செய்யப்பட்டிருக்கிறது. உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் ஒன்றுக்கொன்று உதவி செய்துகொள்ளும் நிலையிலிருக்கின்றன. அதாவது பிருதிவியினால் மற்றவையெல்லாம் உதவியை அடைகின்றன. ஆகவே எல்லாம் சேர்ந்து தங்களின் நன்மைக்காக பிருதிவியைத் தயாரித்திருக்கிறது என்று சொல்லலாம். அவைகளுக்காக பிருதிவி ஏற்பட்டுள்ளது. இதுபோலவே பிருதிவியும் மற்றவைகளிலிருந்து உதவியைப் பெறுகிறது. இதுபோலவே பிருதிவியிலுள்ள அதிபூதசேதன புருஷனும் சரீரத்திலுள்ள அத்யாத்ம சேதன புருஷனும் மற்றவைகளுக்கு உபகாரம் செய்கின்றனர். அவைகளிலிருந்தும் உதவி பெறுகின்றனர். இவ்வாறு ஒன்றிற்கொன்று உதவி செய்து கொண்டு கார்யகாரண பாவத்தை அடைந்துள்ள இவைகள் எல்லாவற்றிற்கும் பொதுவான ஓர் காரணப்பொருள் இருக்க வேண்டும் அதுதான் அமிருதமான ப்ரஹ்மம். அவரே ஆத்மா, அவரே எல்லா பிரபஞ்சமாகத் தோன்றுகிறார். இவ்விதம் பிரபஞ்சம் முழுவதும் எல்லாவற்றிலும் ஒரே பொருளாக*

விளங்கும் பரப்ரஹ்ம ஸ்வரூபத்தை அறிந்து இந்திரனால் உபாஸிக்கப்பட்டபடி இந்திரனெனபபடும் பரமேசுவரனின் லீலாவிபூதிகளை உபாஸித்து பரப்ரஹ்மஸ்வரூபமே நான் நானே பரப்ரஹ்மம் என்று எந்த பரமாத்மாவை அறிந்துகொள்கிறார்களோ அந்த ஹரிஸ்வருபத்தை ஸம்ஸாரபந்தம் நீங்க துதிக்கிறேன். (30)

योऽयं देहे चेष्टयितान्त करणस्थः
सूर्ये चासौ तापयिता सोऽस्म्यहमेव ।
इत्यात्मैक्योपासनया यं विदुरीशं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ३१ ॥

*யோऽயம் தேஹே சேஷ்டயிதாऽந்தக்கரணஸ்த்த:*
*ஸூர்யே சாஸௌ தாபயிதா ஸோऽஸ்ம்யஹமேவ ।*
*இத்யாத்மைக்யோபாஸநயா யம் விதுரீஶம்*
*தம் ஸம்ஸாரத்வாந்த விநாஶம் ஹரிமீடே ॥*

**योऽयं**—எந்த பரபரம்மம, **देहे**—சரீரத்தில, **अन्तःकरणस्थः**—மனதில் இருந்துகொண்டே, **चेष्टयिता**—இயக்குகின்றுனே, **सूर्ये च**—சூர்யனிடத்திலிருந்துகொண்டும, **असौ**—அந்த பரபிரும்ம ஆத்மா, **तापयिता**—உலகததிற்கு உஷணததை அடையும்படி செய்துகொண்டு இருககிறுனே, **सः**—அநத இரண்டிலும விளங்கும் பரமாத்மஸ்வரூபமாக **अहमेवास्मि**—நானே இருககிறேன. **इति**-என்று, **आत्मैक्योपासनया**—ஜீவாதமபரமாத்ம ஐகய உபாஸனத்தால், **यं ईशं**—எந்த பரமாத்மாவை, **विदुः**-அறிகிறார்களோ, **तं**—அவ்விதமான, **संसारध्वान्तविनाशं**—ஸம்ஸார காரிருளை போக்கும் **हरिं**—ஸ்ரீஹரியை, **ईडे**-துதிக்கிறேன்

நம் சரீரத்தில் மனதிற்குள் இருந்துகொண்டு ஜடங்களான மனம், இந்திரியங்கள், பிராணன் முதலியவற்றிற்கு சக்தியைக் கொடுத்து அவைகளை அதனதன் காரியங்களைச் செய்யும்படி இயக்கிக்கொண்டிருக்கும் ஜீவாத்மா, ஸூர்யனுக்குள் இருந்துகொண்டு அவனுக்கு உஷ்ணத்தைக்கொடுத்து அதன் மூலம் உலகையே தாபமடையும்படி செய்கிற பரமாத்மா. இவ்விரண்டும் ஒன்றுதான். நானேதான் அந்தப் பரமாத்மா. நம் சரீரம், ஸூரியன் என்ற உபாதிகளால் தான் ஒரே சைதன்யம் வெவ்வேறாகக் காணப்படுகிறது. இந்த உபாதிகளை நீக்கி

*இரண்டிலும் மிஞ்சியுள்ள சைதன்ய ஸ்வரூபத்தை அறிந்து நானே அந்த பரமாத்மா என்று தியானம் செய்து வந்தால் அத்வைத ப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படும்.* '**स यश्चायं पुरुषे यश्चासावादित्ये स एकः**' *என்ற தைத்திரீய உபநிஷத்து இக்கருத்தை உபதேசிக்கிறது. அந்த ஹரிஸ்வரூபத்தை ஸம்ஸார இருள் நீங்க போற்றுகிறேன்.* (31)

**विज्ञानांशो यस्य सतः शक्त्यधिरूढो**
**बुद्धिर्बुध्यत्यत्र बहिर्बोध्यपदार्थान् ।**
**नैवान्तःस्थं बुध्यति यं बोधयितारं**
**तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ३२ ॥**

*விக்ஞாநாம்ஶோ யஸ்ய ஸத: ஶக்த்யதிரூடோ*
*புத்திர் புத்யத்யத்ர பஹிர் போத்ய பதார்த்தான் ।*
*நைவாந்தஸ்த்தம் புத்யதி யம் போதயிதாரம்*
*தம் ஸம்ஸாரத்வாந்த விநாஶம் ஹரிமீடே ॥*

**सतः**–உண்மைப் பொருளாக இருக்கும், **यस्य**–எந்த பிருமமத்தினுடைய, **विज्ञानांशः**–விஞானமென்னும ஓர் அமசமே, **शक्त्यधिरूढः (सन्)**–மாயாசக்தியுடன சேர்ந்து, **बुद्धिः**–புத்தியெனப் பெயர் உடையதாய், **अत्र**–இந்த சரீரத்தில, **बहिर्बोध्यपदार्थान्**–வெளியில் உள்ள, அறியபபடவேண்டிய விஷயப் பொருளகளை, **बुध्यति**–அறிகிறதோ. **अन्तःस्थं**–உளளில சர்வ ஆதாரமாயுளள, **यं बोधयितारं**–அறிந்துகொண்டிருக்கும, சாக்ஷிபூத ஆன்மவஸ்துவான எந்த பரமாத்மாவை, **नैव बुध्यति**–அறிவதிலலையோ, **तं**–அவவிதமாயும், **संसारध्वान्तविनाशं**–ஸம்ஸார இருளைபபோக்குகிறவராயுமுள்ள, **हरिं**–ஸ்ரீ ஹரியை, **ईडे**–துதிக்கிறேன்.

*கேனோபநிஷத் கருத்தை விளக்குகிறார். ஸத், சித், ஆனந்தம் என மூன்று அம்சங்களுள்ளது ப்ரஹ்மம். இதில் சித் என்னும விக்ஞானம்சம் மாயையுடன் சேர்ந்துதான் புத்தியாக ஆகிறது. அதாவது மனோவிருத்திகளில் பிரதிபலிக்கும் சைதன்யம் தான் புத்தி. அதனால் தான் புத்திக்கு அறியும் சக்தி ஏற்பட்டிருக்கிறது. இந்த புத்திக்கு வெளியிலுள்ள ஜடமான விஷயங்களைத்*

தான் அறியும் திறமை உண்டு இந்த புத்திக்கு அறியும் சக்தியை கொடுத்துக்கொண்டு தான் ஒன்றிலும் ஸம்பந்தப்படாமல் இந்த புத்தியையும் மற்றும் யாவற்றையும் ஸாக்ஷியாகப் பார்த்துக் கொண்டு உள்ளே இருக்கும் சுத்த சைதன்ய ஸ்வரூபியான ஆத்மஸ்வரூபத்தை அறியும் சக்தி புத்திக்குக் கிடையாது. அந்த ஆத்மாதான் ஹரிஸ்வரூபம்

'यन्मनसा न मनुते येनाहुर्मनो मतम् ।
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते ' ॥

'न विज्ञातेर्विज्ञातारं विजानीयाः '

அந்த ஹரியை ஸம்ஸார இருள் நீங்க துதிக்கிறேன். (32)

कोऽयं देहे देव इतीत्थं सुविचार्य
ज्ञाता श्रोता मन्तयिता चैष हि देवः ।
इत्यालोच्य ज्ञांश इहास्मीति विदुर्यं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ३३ ॥

கோऽயம் தேஹே தேவ இதீத்தம் ஸுவிசார்ய
ஞாதா ச்ரோதா மந்தயிதா சைஷ ஹி தேவ: ।
இத்யாலோச்ய ஞாம்ச இஹாஸ்மீதி விதுர்யம்
தம் ஸம்ஸாரத்வாந்த விநாசம் ஹரிமீடே ॥

देहे–சரீரத்தில், देवः–பிரகாசிக்கிறவனாக (அறிகிறவனாக), விளங்கும், अयं–இந்த ஆத்மா, कः–யார். इति–என்று, इत्थं–இவ்வாறு सुविचार्य–நன்கு ஆராய்ந்து, ज्ञाता–அறிகிறவனும், श्रोता–கேட்கிறவனும், मन्तयिता च–எண்ணுகிறவனுமுள்ளவன், एष देवः–இந்த ஆத்மா, इत्यालोच्य–என்று ஆலோசித்து, इह–இந்த சரீரத்தில், ज्ञांशः–அறிவு (சைதன்ய) ஸ்வரூபமாக, अस्मि इति–இருக்கிறேன என்று, यं–எந்த பரமாத்மாவை, विदुः–அறிகிறார்களோ, तं–அந்த, संसार-ध्वान्तविनाशं–ஸம்ஸார இருளைப்போக்கும், हरिं–ஹரியை, ईडे–துதிக்கிறேன்.

ப்ரச்னோபஷத்தில் நான்காவது ப்ரச்ன ப்ரதிவசன ஸந்தர்ப்பத்தில் கூறியுள்ளபடி இந்த சரீரத்தில் ப்ரகாசிக்கும் சேதனனை

ஆத்மா யார் என்று நன்கு விசாரம் செய்து ப்ராணன் புத்தி விருத்தி இவைகள் ஜடப்பொருள்கள். ஆதலால் இவைகள் யாவும் 'தேவன்' என்று சொல்லத்தக்க சேதன ஆத்மாவல்ல, எவன் புத்தியால் அறிகிறவனோ, காது முதலிய புலன்களால் சப்தம் முதலியவற்றை அறிகிறவனோ மனதினால் ஆலோசிக்கிறவனோ, இவன் தான் நமது சரீரத்தில் உள்ள தேவன் சேதன ஆத்மா 'अहं ज्ञाता, अहं श्रोता, अहं मन्ता' நான் அறிகிறேன் நான் கேட்கிறேன், நான் ஆலோசிக்கிறேன் என்ற அனுபவத்தில் நான் என்னும் பொருளே கேட்கிறவனாகவும் அறிகிறவனாகவும் ஆலோசிப்பவனாகவும் விளங்குவதால் அந்த நான் என்னும் பதத்திற்கு விஷயமான ஜீவனே தேவன், சேதனப்பொருளான நித்ய ப்ரகாசமான ஸ்வதந்திரனை பரமாத்மா என்று விமர்சம் செய்து இந்த சரீரத்தில் சேதனமும் அசேதனமும் கலந்திருப்பதில் அறிகிறவனாக இருக்கும் சேதனம்சமாகவே நான் இருக்கிறேன் என்று எந்த பரமாத்மாவை அறிகிறார்களோ ப்ரம்மவிசாரம் செய்கிறவர்கள் அவ்விதமான ஸம்ஸாரம் என்னும் காரிருளைப் போக்கும் ஸ்ரீ ஹரியை துதிக்கிறேன். (33)

को ह्येवान्यादात्मनि न स्यादयमेष
ह्येवानन्दः प्राणिति चापानिति चेति ।
इत्यस्तित्वं वक्त्युपपत्त्या श्रुतिरेषा
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ३४ ॥

கோ ஹ்யேவாந்யாதாத்மநி ந ஸ்யாதயமேஷ
ஹ்யேவாநந்த: ப்ராணிதி சாபாநிதி சேதி ।
இத்யஸ்தித்வம் வக்த்யுபபத்த்யா ச்ருதிரேஷா
தம் ஸம்ஸாரத்வாந்த விநாசம் ஹரிமீடே ॥

**आत्मनि**—இச்சரீரத்தில், **अयं**—இவ்வான்ம வஸ்து, **न स्यात् यदि**-இல்லாது இருக்குமேயானால் (அப்பொழுது), **को ह्येवान्यात्**—எவன்தான் மூச்சுவிடமுடியும், (ஜீவிக்க முடியும்) **आनन्दः**—ஆனந்தரூபியான, **एष ह्येव**-இந்த ஆன்மாவே, **प्राणिति च**-மூச்சுவிடும்படி செய்கிறது. **अपानिति च**-அபான வாயுவை கீழ்நோக்கிவிடவும் செய்கிறது. **इति**—என்று, **एषा श्रुतिः** – இந்த தைத்திரீயோபநிஷத், **उपपत्त्या**—யுக்தியுடன், **अस्तित्वं**-

ஆத்மா இருக்கிறுன் என்பதை, **वक्ति**—கூறுகிறதோ, **तं**—அவ்வித பிரம்மரூபமாயும், **संसारध्वान्तविनाशं**— ஸம்ஸார இருளைப் போக்குபவருமான, **हरिं**—ஸ்ரீஹரியை, **ईडे**—துதிக்கிறேன்.

*தைத்திரீயோபநிஷத்தில் 2-வது ப்ரஹ்மாநந்தவல்லியில் புலன்களுக்கு எட்டாததாகச் சொல்லப்படும் பிரஹ்மம் உண்மையில் இருக்கிறதா இல்லையா என்ற கேள்வியைக்கேட்டுக் கொண்டு ப்ரஹ்மம் உண்டு என்பதற்குப் பல யுக்திகள் சொல்லப் பட்டிருக்கின்றன. நம் சரீரத்தில் பிராணுபாநவாயுக்கள் உச்வாஸ நிச்வாஸ கார்யங்களைச் செய்கின்றன. இதுபோல மற்ற புலன்களும் தம் தம் காரியங்களைச் செய்கின்றன. சேதனன் ஒருவன் இருந்தால்தான் ஜடமான இவை இயங்கும். மேலும் இச்சரீரத்தில் பலர் கூட்டமாக இருந்துகொண்டு வெவ்வேறு தொழில்களை நடத்துவதால் இதன் பலனையடையும் ஒருவன் இக்கூட்டத்தில் சேராதவனுக தனித்து இருக்கவேண்டும். அதனுலும் இவைகளுக்கு யஜமானனுக ஆத்மா ஒருவன் இருக்கிறுன் என்று தெரிகிறது. உலகிலுள்ள ஒரு பொருளுக்கும் ஆனந்தத்தைக்கொடுக்கும் சக்தி கிடையாது. உலகில் பலர் ஆனந்தமடைவதைக் காண்கிறேம். ஸமாதியில் உள்ள யோகிகள் வெளிப்பொருள் ஒன்றுமில்லாமலே ஆனந்தமடைகிறுர்கள். நாமும் ஸுஷுப்தியில் ஆனந்தமடைகிறேம். ஆகையால் பிராணிகள் ஆனந்தமடைவதற்குக்காரணமாக தான் ஆனந்தஸ்வரூபமாயும் பிறரை ஆநந்தமடையச்செய்கிறதாயுமுள்ள ஆத்மா ஒருவர் இருக்கிறுர் என்பது நிச்சயமாகத் தெரிகிறது* **'को ह्येवान्यात्कः प्राण्यात् । यदेष आकाश आनन्दो न स्यात् । एष ह्येवानन्दयाति'** *இவ்வாறு பல யுக்திகளைக்கொண்டு எந்த ஆத்மா உள்ளது என்பதை தைத்திரீயோபநிஷத் தீர்மானித்துக் கூறுகிறதோ, அந்த ஆத்மாவே ஹரி. அவரை துதிக்கிறேன். (34)*

**प्राणो वाहं वाक्छ्रवणादीनि मनो वा**
**बुद्धिर्वाहं व्यस्त उताहोऽपि समस्तः ।**
**इत्यालोच्य ज्ञप्तिरिहास्मीति विदुर्यं**
**तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ३५ ॥**

*ப்ராணோ வா஽ஹம் வாக்ச்ரவணாதீநி மநோ வா*
*புத்திர்வா஽ஹம் வ்யஸ்த உதாஹோபி ஸமஸ்த: ।*

*ரித்யாலோச்ய ஞப்திரிஹாஸ்மீதி விதுர் யம்*
*தம் ஸம்ஸாரத்வாந்த விநாசம் ஹரிமீடே ||*

**अहं**-நான், **प्राणो वा**-ப்ராணனு? **वाक्छ्रवणादीनि**-வாக்கு, காது முதலான இந்திரியங்களா, **मनो वा**-அல்லது மனமா, **अहं**-நான, **बुद्धिर्वा** -அல்லது புத்தியா, **व्यस्तः**-இவைகள தனித்தனியான ஆத்மாவா, **उताहोऽपि**-அல்லது, **समस्तः**-எல்லாம் சேர்ந்து ஆத்மாவா, **इति**-என்று, **आलोच्य**-ஆராய்ந்து, **इह**-இச்சரீரத்தில், **ज्ञप्तिः**-அறிவு ஸ்வரூபமாக, **अस्मि**-இருக்கிறேன, **इति**-என்று, **यं**-எவரை, **विदुः**-அறிகிறார்களோ, **तं**-அந்த, **संसारध्वान्तविनाशं**-ஸம்ஸார இருளைப் போக்கும், **हरिं**-ஹரியை, **ईडे**-துதிக்கிறேன்.

*இச் சரீரத்தில் காணப்படும் பல வஸ்துக்களில் (अहं) நான் என்று சொல்லப்படும ஆன்மா பிராணவாயு ரூபமா? அல்லது வாக் முதலிய கர்மேந்திரிய ரூபமா? அல்லது காது முதலிய ஞானேந்திரிய ரூபமா? அல்லது அந்தரிந்திரியமான மனோ ரூபமா? அல்லது புத்தியென்னும் மனோவிருத்தி ரூபமா? (சங்கல்ப விகல்ப ரூபமாக சாமான்யமாக இருக்கும்போது மனது என்றும் அதுவே இவ்விதம் தான் என நிச்சய ரூபத்தை அடையும்போது புத்தியென்றும் கூறப்படுகிறது) மேலும் இவைகள் தனித் தனியாகவே நான் என்று சொல்லப்படும் பல ஆன்ம வஸ்துக் களா? அல்லது இவைகள் கூட்டாகக் கூடி இவைகளின் கூட்டம் நான் என்னும் ஆன்ம வஸ்துவா என்று நன்கு விசாரித்து இந்த சரீரத்தில் காணப்படும் பல வஸ்துக்களில் உள்ள தனித்த அறிவு ஒன்றே ஆத்மா அதுவே நான் மற்ற முன் கூறப்பட்டபொருள்கள் யாவும் தனித்தோ கூட்டமாகவோ ஆன்மப்பொருளாக இல்லை அவை யாவும் ஜடப்பொருள்கள் ஆதலால், சேதன ஆத்மா ஆகாது என்று, எந்த பிரும்மத்தை அறிகிறார்களோ அவ்விதமாயும் ஸம்ஸார இருளை அழிப்பவரு மான ஸ்ரீ ஹரியை துதிக்கிறேன்.* (35)

**नाहं प्राणो नैव शरीरं न मनोऽहं**
**नाहं बुद्धिर्नाहमहंकारधियौ च ।**
**योऽत्र ज्ञांशः सोऽस्म्यहमेवेति विदुर्यं**
**तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ३६ ॥**

*நாஹம் ப்ராணோ நைவ ஶரீரம் ந மனோऽஹம்*
*நாஹம் புத்திர் நாஹமஹங்கார திஷௌ ச ।*
*யோऽத்ர ஜ்ஞாம்ஶ: ஸோऽஸ்ம்யஹமேவேதி விதுர் யம்*
*தம் ஸம்ஸாரத்வாந்த விநாஶம் ஹரிமீடே ॥*

**अहं**–நான், **न प्राणः**–பிராணன் அல்ல, **नैव शरीरं**–சரீரமல்ல, **अहं**–நான், **न मनः**–மனமல்ல, **अहं**–நான், **न बुद्धिः**–புத்தியல்ல, **अहं**–நான், **न अहंकारधियौ च** அஹங்காரமும் சித்தமுமல்ல, **अत्र**–இவற்றில் **यः**–எந்த, **ज्ञांशः**–அறிவு அம்சம உண்டோ, **स एव**–அதுவாகவே, **अहं**–நான், **अस्मि**–இருக்கிறேன், **इति**–என்று, **यं**–எவரை, **विदुः**–அறிகிறார்களோ, **तं**–அந்த, **संसारध्वान्तविनाशं**–ஸம்ஸார இருளை அழிக்கும், **हरिं**–ஹரியை, **ईडे**–துதிக்கிறேன்.

*நான் இச்சரீரத்தில் காணப்படும் பொருள்களுள் பிராணன் என்னும் வாயுவாக இல்லை. அன்னரஸவிகாரமான சரீரமாகவும் இல்லை. உட்கொள்ளப்படும் ஆஹாரங்களின் சூக்ஷ்மாம்ச பௌதிக பதார்த்தமான மனோரூபமாயும் இல்லை. நான் மனதின் விகாரமான புத்தியெனப்படும் விருத்தியாகவும் இல்லை. நான் அஹங்காரம் சித்தமெனப்படும் அந்தக்கரண பேதங்களாகவுமில்லை இவைகள் யாவும் ஜடப்பொருள்கள். ஆதலால் சேதனப் பொருளான அஹம் என்று சொல்லப்படும் ஆன்மப்பொருளாக ஆகமுடியாது. மேலும் என்னுடைய வீடு என்பதுபோல் என்னுடைய பிராணன், என்னுடைய சரீரம், என்னுடைய மனது என்றவாறு அனுபவம் இருப்பதால் அவைகள் நானல்ல. வீட்டைக்காட்டிலும் நான் வேறாக இருப்பதுபோல் என்னுடையவைகளான இந்த சரீரம் முதலியவைகளைக்காட்டிலும் நான் வேறானவன். இந்த சரீரம் முதலான கூட்டுவஸ்துக்களில் அறியும் பொருளாக விளங்கும் அம்சமே நான், என்று எந்த பரமாத்மாவை அறிகிறார்களோ அப்பொருளாயும் ஸம்ஸார இருளை அகற்றுகிறவராயுமுள்ள ஸ்ரீ ஹரியை துதிக்கிறேன். (முன் சுலோகத்தில் விசாரம் செய்யும் முறை கூறப்பட்டது. இந்த சுலோகத்தில் விசாரத்தினால் ஏற்படும் முடிவு கூறப்படுகிறது.)*
(36)

**सत्तामात्रं केवलविज्ञानमजं स-**
**त्सूक्ष्मं नित्यं तत्त्वमसीत्यात्मसुताय ।**

साम्नामन्ते प्राह पिता यं विभुमाद्यं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ३७ ॥

*ஸத்தாமாத்ரம் கேவலவிஜ்ஞாநமஜம் ஸத்*
*ஸூக்ஷ்மம் நித்யம் தத்த்வமஸீத்யாத்மஸுதாய ।*
*ஸாம்நாமந்தே ப்ராஹ பிதா யம் விபுமாத்யம்*
*தம் ஸம்ஸாரத்வாந்த விநாசம் ஹரிமீடே ॥*

**साम्नामन्ते**-ஸாமவேதத்தின கடைசியில சாந்தோக்ய உபநிஷத்தில் **सत्तामात्रं**–ஸத்தை (இருப்பு) எனபதாக மட்டும உள்ளதும், **केवल-विज्ञानं**–தனித்த சேதனப் பொருளாக இருப்பதும், **अजं**–பிறப்பற்றதும், **सत्**–ஸத்தானதும, **सूक्ष्मं**–ஸூக்ஷமமானதும், **नित्यं**–அழிவற்றதுமான **तत्**–அந்தப்பரம்பொருளாக, **त्वं**–நீ, **असि**–இருக்கிறுய், **इति**-என்று, **आत्मसुताय**–தன பிள்ளைககு, **पिता**–தநதை, **विभुं**–வியாபகமாயும, **आद्यं**–முதன்மையானதுமான, **यं**–எநதப் பரமாதமாவை, **प्राह**–உபதேசித்தாரோ, **तं**–அநத, **संसारध्वान्तविनाशं**–ஸமஸார இருளைப் போககும், **हरिं**–ஹரியை, **ईडे**–துதிககிறேன.

*ஸாமவேத முடிவாக விளங்கும் சாந்தோக்ய உபநிஷத்தில் தந்தையான உத்தாலகர் தனது புத்ரனை சுவேதகேதுவின் பொருட்டு ஜகத்திற்கு முதல் பொருளாயும் எங்கும் வியாபித்து ஸர்வவல்லமையுடன் இருக்கும் பரமாதமாவின் தத்வத்தை இவ்வாறு உபதேசிக்கிருர். இருப்பது என்ற உண்மை ஸத்தை ரூபமாயும் வேறு பொருளின்றி தனித்து ஒரே பொருளாக இருப்பதும், ஜடப்பொருளாக இல்லாமல் அறிவுப்பொருளாக விளங்குவதும், உத்பத்தி முதலிய விகாரங்களற்றதாயும், 'ஸத்' ஸாரமானது, சாதுவானது, ப்ரசஸ்தமானது என்று சொல்லப் படுவதும் எவ்வித குணக்ரியைகளுமின்றியிருப்பதால் புலன் களால் அறியமுடியாது, சூக்ஷ்ம புத்தியுடையவர்களாலும் அறிய முடியாததுபற்றி சூக்ஷ்மப் பொருளாகவும் என்றும் அழிவின்றி இருக்கிறதாயும் உள்ள தத் என்று பராமர்சம் செய்யப்பட்ட ஸத்பத வாச்ய ஈசுவர ரூபப்பொருளாக ஹே சுவேதகேதோ, நீ இருக்கிருய். இவ்வாறு நன்கு பதியும்படி ஒன்பது தடவை பல வித உதாஹரணங்களுடன் பரமாத்மாவை உபதேசித்தார். அவ்வித பரமாத்மாவான ஸம்ஸார இருளைப்போக்கும் ஸ்ரீஹரியை ன்.* (37)

मूर्तामूर्ते पूर्वमपोह्याथ समाधौ
दृश्यं सर्वं नेति च नेतीति विहाय ।
चैतन्यांशे स्वात्मनि सन्तं च विदुर्यं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ३८ ॥

*மூர்த்தாமூர்த்தே பூர்வமபோஹ்யாத ஸமாதௌ*
*த்ருச்யம் ஸர்வம் நேதி ச நேதீதி விஹாய ।*
*சைதந்யாம்சே ஸ்வாத்மநி ஸந்தம் ச விதுர் யம்*
*தம் ஸம்ஸாரத்வாந்த விநாசம் ஹரிமீடே ॥*

**पूर्वं**—முதலில், **मूर्तामूर्ते**—உருவமுள்ளதும உருவமற்றதுமான இருவிதப் பொருள்களை, **अपोह्य**—விலக்கி, **अथ**—பிறகு, **समाधौ**-ஸமாதியில், **दृश्यं सर्वं**—அறியப்படும் எல்லாப் பொருளகளும், **नेति-नेतीति च**—ப்ரஹ்மம் அலல பரஹமம் அல்ல என்று, **विहाय**—விட்டு விட்டு, **स्वात्मनि**—தன்னிடம், **चैतन्यांशे**—சிதமசததில, **सन्तं**—உளள, **यं**—எந்த பரமாத்மாவை, **विदुः**—அறிகிறார்களோ, **तं**—அந்த, **संसारध्वान्तविनाशं**—ஸம்ஸார இருளைப்போககும், **हरिं**—ஹரியை, **ईडे**-துதிககிறேன்.

*முதலில் பிரம்ம விசாரத்தொடக்கத்தில் கண்ணுக்கு புலப்படும் உருவங்கொண்ட ப்ருதிவீ, ஜலம் தேஜஸ் முதலிய மூர்த்தப் பொருள்கள் கண்ணிற்குப் புலப்படாத காற்று ஆகாயம் முதலிய உருவமற்ற அமூர்த்தப் பொருள்கள் இவை இரண்டையும் ஜடங்கள் அசித்யங்கள், விஷயங்கள் திக்காலங்களினால் பரிச்சின்ன வஸ்துக்கள் என்ற காரணங்களால் ஆன்மாவல்ல என்று விலக்கி, ஸம்ப்ரஜ்ஞாத ஸமாதியெனும் ஸவிகல்ப சமாதியிலும் தியானம் செய்யப்படும் சமயத்திலும் பூமி ருபமல்ல ஜலருபமல்ல தேஜோ ருபமல்ல வாயுருபமல்ல ஆகாயமல்ல ப்ராணன் அல்ல மனஸ் அல்ல புத்தி ஸ்வரூபமல்ல சப்தாதி குணமல்ல சலனாதி க்ரியா ருபமல்ல என்று அறியப்படும் எல்லா பொருள்களையும் அதன் ஸ்வரூபமாக ஆன்மாவான நான் இல்லையென்று அப்பொருள்களில் ஏற்பட்டிருந்த அவைகளின் ருபம் நான் என்ற ப்ரமம் என்னும் அத்யாஸத்தை விலக்கிக்கொண்டு அந்தக்கரணம் என்னும் உபாதி ஜடப்பொருளுடன் கூடி ஜீவனாக விளங்கும் தன்னிடம் ஜடப்பொருளான அந்தக்கரண உபாதி அம்சத்தை*

*விலக்கி அறிவு என்னும் சைதன்ய அம்சத்தில் (ஜடவஸ்துவான அந்தக்கரணத்துடன் அத்யாசத்தினல் நான் என்று அபிமானங் கொண்ட சைதன்யப்பொருள், ஜீவன் எனப்படும், அதில் ஜடப் பொருள் உபாதி அந்தக்கரணத்தை விலக்கினல் எஞ்சி நிற்கும் சைதன்யம் ஜீவத் தன்மையை விட்டதாக ஆகி சுத்த ஞானமய பரபிரும்மமாக ஆகிறது என்பது சித்தாந்தம்) நிலைத்து நிற்கிற ப்ரம்மப் பொருளாக எந்த ஹரியை அறிகிருர்களோ அப் பொருளான ஸம்ஸார இருளை போக்குபவரான ஸ்ரீ ஹரியை துதிக்கிறேன். (38)*

**ओतं प्रोतं यत्र च सर्वं गगनान्तं**
**योऽस्थूलानण्वादिषु सिद्धोऽक्षरसंज्ञः ।**
**ज्ञातातोऽन्यो नेत्युपलभ्यो न च वेद्य-**
**स्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ३९ ॥**

*ஓதம் ப்ரோதம் யத்ர ச ஸர்வம் ககநாந்தம்*
*யோ஽ஸ்தூலாநண்வாதிஷு ஸித்தோऽக்ஷரஸம்ஜ்ஞ:।*
*ஞாதாऽதோऽந்யோ நேத்யுபலப்யோ ந ச வேத்ய:*
*தம் ஸம்ஸாரத்வாந்த விநாசம் ஹரிமீடே ॥*

**यत्र**–எந்தப் பரமாத்மாவில், **गगनान्तं**–அவ்யாக்ருதாகாசம என்னும் மாயை வரையிலுமுளள, **सर्वं**–எலலாம், **ओतं प्रोतं च**– நெடுகிலும் குறுக்கிலும் இணைககப்பட்டுள்ளதோ, **यः**–எவர், **अस्थूलानण्वादिषु**–'அஸ்தூலம் அநணு' முதலான வாக்கியங்களில, **अक्षरसंज्ञः** அக்ஷரம் எனற பெயருளளவராக, **सिद्धः**–தீாமானிக்கப்பட்டுள்ளாரோ, **अतः**–இவரைக்காட்டிலும், **अन्यः**–வேருக, **ज्ञाता**–அறிகிறவர், **न**–இல்லை **वेद्यः च**–அறியப்படும வஸ்துவும், **न**–(வேறு) இல்லை. **इति**–என்று, **उपलभ्यः**–(எவர்) அறியத்தக்கவரோ. **तं**–அந்த, **संसारध्वान्तविनाशं**– ஸம்ஸார இருளைப்போக்கும், **हरिं**–ஹரியை, **ईडे**-துதிக்கிறேன்.

*பிருஹதாரண்யகோபநிஷத்தில் மூன்ருவது அத்தியாயத்தில்* **"कस्मिन्नु खल्वाकाश ओतश्च प्रोतश्च"** *என்ற கார்க்கியின் கேள்விக்கு யாஜ்ஞவல்க்யர் பதில் கூறுகிருர். அவ்யாக்ருதா காசம் என்று கூறப்படும் ப்ரக்ருதி வரையிலுள்ள உலகிலுள்ள எல்லாப்பொருள்களும் அக்ஷர ப்ரஹ்மத்தில் ஓதமாகவும் ப்ரோத*

மாகவும் இணைக்கப்பட்டிருக்கிறது. வஸ்திரமானது நூல்களில் நெடுகிலும் குறுக்கிலும் இணைக்கப்பட்டு அதிலிருந்து பிரிக்க முடியாதபடியும் அதைக்காட்டிலும் வேருக இல்லாதபடியும் அமைந்திருப்பதுபோல் அக்ஷர ஸ்வரூபத்தில் பிரபஞ்சம் உள்ளது. பிரபஞ்சத்திற்கு ஆதாரம் பிரஹ்மம் அதிலிருந்து பிரபஞ்சத்தை தனியாக பிரிக்கமுடியாது. நூலே ஆடையாக காக்ஷியளிப்பதுபோல் ப்ரஹ்மமே பிரபஞ்சமாக காக்ஷி அளிக்கிறது. பிரபஞ்சம் தனிபபொருளல்ல நூலை எடுத்துவிட்டால் ஆடை மறைவதுபோல பிரபஞ்சமும் மறைந்துவிடும். இந்த பிரஹ்மம் பெரியது அல்ல சிறியது அல்ல அளவற்றது அழியாத எங்குமுள்ள பொருளானதால அக்ஷரம் என்ற பெயருள்ளது இந்த அக்ஷர பரஹ்மம்தான் ஞாதா அறிகிறவர் இவரைக் காட்டிலும் வேறு அறிபவர் ஒருவரும கிடையாது இவர் வேருென்ருலும் அறியப்படுபவர் அலல. என்றிவ்வாறு பிராஹ்மணர்கள் அக்ஷர ப்ரஹ்மத்தை உபதேசிக்கிருர்கள்.

"एतद्वै तदक्षरं गार्गि ब्राह्मणा अभिवदन्ति अस्थूलं अनणु ...... अविज्ञातं विज्ञातृ ...... नान्यदतोऽस्ति विज्ञातृ"

*இந்த அக்ஷர ப்ரஹ்ம ஸ்வரூபமான ஹரியை ஸம்ஸார இருள் ...ுதிக்கிறேன்.*

(39)

तावत्सर्वं सत्यमिवाभाति यदेत-
द्यावत्सोऽस्मीत्यात्मनि यो ज्ञो न हि दृष्टः ।
दृष्टे यस्मिन्सर्वमसत्यं भवतीदं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ४० ॥

தாவத் ஸர்வம் ஸத்யமிவாபாதி யதேதத்
யாவத் ஸோऽஸ்மீத்யாத்மநி யோ ஞோ ந ஹி த்ருஷ்ட:।
த்ருஷ்டே யஸ்மின் ஸர்வமஸத்யம் பவதீதம்
தம் ஸம்ஸாரத்வாந்த விநாஸம் ஹரிமீடே ॥

**यावत्**–எதுவரை, **आत्मनि**–மனதில, **सोऽस्मीति**–அவராக நான் இருக்கிறேன் எனறு, **यः ज्ञः**–எந்த சைதனயம், **न हि दृष्टः**–அறியப் படவிலலையோ, **तावत्**–அதுவரை, **यत् एतत् सर्वं**–எநத இந்த பிரபஞச மெலலாம், **सत्यमिव**–உண்மைப பொருளபோல, **आभाति**–தோனறு

கிறதோ, **यस्मिन् दृष्टे**-எவர் அறியப்பட்டவுடன், **इदं सर्वं**-இது எல்லாம், **असत्यं**-பொய்யாக, **भवति**-ஆய்விடுகிறதோ,, **तं**-அந்த **संसारध्वान्तविनाशं**-ஸம்ஸார இருளை அழிக்கும், **हरिं**-ஹரியை, **ईडे**-துதிக்கிறேன்.

*பிரபஞ்சம் முழுவதும் பொய் என்று உபநிஷத்மூலமாக நாம் தெரிந்துகொண்டபோதிலும் வியவஹார காலத்தில் பொருள்களைப் பார்க்கும்பொழுது நமக்குப் பொய் என்பது தெரிவதில்லை உண்மை என்றே நினைக்கிறோம். இதற்கு என்ன காரணம்? இப்பிரபஞ்சம் தோன்றுவதற்கு அதிஷ்டானமாக இருந்து கொண்டு இதற்கு ஸத்தையைக் கொடுக்கும் பரமார்த்தப் பொருளான ப்ரஹ்மத்தை அறியாததுதான். பிராந்தியினால் கயிற்றைப்பாம்பாக பார்ப்பவன் அதை உண்மை என்றே எண்ணுகிறான். பொய் என்று நினைபபதில்லை. உண்மைப் பாம்பு என்று எண்ணுவதால்தான் பயந்து நடுங்குகிறான். எபபொழுது நண்பன் உதவியால் விளக்கைக்கொண்டுவந்து நன்கு கவனித்துப் பார்த்தவுடன் இது கயிறுதான் என்று தெரிந்துகொள்கிறானோ. அதன் பின் பாம்பு உண்மையாகத தோன்றுவதில்லை இதுபோல் பரமார்த்த ஸத்யமான பரஹ்மத்தை அறிந்து அதுவே நான் என்ற உறுதியான ஸாக்ஷாத்காரம் ஏற்படும் வரையில் இப் பிரபஞ்சம் உண்மையாகத் தோன்றிக்கொணடிருக்கும். அந்த பிரஹ்மத்தை அறிந்தபிறகு எல்லாம பொய் என்பது நன்கு தெரிந்துவிடும். அந்த ப்ரஹ்ம ரூபியான ஸ்ரீ ஹரியை துதிக்கிறேன்.* (40)

रागामुक्तं लोहयुतं हेम यथाग्नौ
योगाष्टाङ्गैरुज्ज्वलितज्ञानमयाग्नौ ।
दग्ध्वात्मानं ज्ञं परिशिष्टं च विदुर्यं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ४१ ॥

*ராகாமுக்தம் லோஹயுதம் ஹேம யதாக்னௌ*
*யோகாஷ்டாங்கைருஜ்ஜ்வலித ஞான மயாக்னௌ ।*
*தக்த்வாத்மானம் ஞம் பரிஶிஷ்டம் ச விதுர் யம்*
*தம் ஸம்ஸாரத்வாந்த விநாஶம் ஹரிமீடே ॥*

**लोहयुतं**-மற்ற உலோஹங்களுடன் கலந்துள்ள, **हेम**-தங்கத்தை **अग्नौ यथा**-நெருப்பில்போல, **रागामुक्तं**-ஆசைகளிலிருந்து விடுபடாத

**आत्मानं**-மனதை, **योगाष्टाङ्गैः**-அஷ்டாங்க யோகங்களால், **उज्ज्वलित-ज्ञानमयाग्नौ**-கொழுந்துவிட்டு எரியும் ஞானரூபமான அக்னியில், **दग्ध्वा** - எரித்து, **परिशिष्टं**-மிஞ்சிய, **यं**-எந்த, **ज्ञं**-சைதன்ய ஸ்வரூபத்தை, **विदुः**-அறிகிறார்களோ, **तं**-அந்த, **संसारध्वान्तविनाशं** ஸம்ஸார இருளைப்போக்கும், **हरिं**-ஹரியை, **ईडे**-துதிக்கிறேன்.

*சுரங்கத்தில் தங்கத்தை வெட்டியெடுக்கும்பொழுது சுத்தத் தங்கமாக கிடைப்பதில்லை. மற்ற லோஹம் அதனுடன் பிரிக்க முடியாமல் கலந்திருக்கிறது. அதை நீக்கி சுத்தத் தங்கம் கிடைப்பதற்காக நெருப்பில் புடம் செய்கிறார்கள். அதனால் மற்ற லோஹம் முழுவதும் நீங்கி சுத்தமான தங்கம் கிடைக்கிறது. இது போல அந்தக்கரணமும் ஆத்மாவும் பிரிக்கமுடியாதபடி ஜீவ ஸ்வரூபமாகச் சேர்ந்திருக்கிறது. மனதிலோ ராகம் முதலிய தோஷங்கள் நிறைந்திருக்கின்றன. இதனால் சுத்தமான ஆத்மாவை அடையமுடியவில்லை. யோக சாஸ்திரத்தில் கூறப் பட்டபடி யமம், நியமம், ஆஸநம், பிராணாயாமம், பிரத்யாஹாரம், தாரணை, த்யானம், ஸமாதி என்ற அஷ்டாங்க யோகத்தை தீவ்ர வைராக்யத்துடன் அனுஷ்டித்து ஆத்ம விசாரம் செய்தால் அகண்டாகாரவிருத்தி என்ற அக்னி ஏற்படும். அஷ்டாங்க யோகத்தால் இந்த அக்னி கொழுந்துவிட்டு எரியும்பொழுது ஜீவஸ்வரூபம் அதில் பொசுங்கி உபாதிகளான அந்தக்கரணம் முதலான அம்சம் நீங்கி சுத்தத் தங்கம்போல சுத்த சைதன்ய ஸ்வரூபமான ஆத்ம வஸ்து எஞ்சி நன்கு பிரகாசிக்கும். அதைத் தெரிந்துகொண்டுவிட்டால் எல்லா ஸம்ஸார பந்தமும் நீங்கும். அதுவே ஹரியின் ஸ்வரூபம. அதைப்போற்றுகிறேன்.* (41)

यं विज्ञानज्योतिषमाद्यं सुविभान्तं
हृद्यर्केन्द्वग्न्योकसमीड्यं तटिदाभम् ।
भक्त्याराध्येहैव विशन्त्यात्मनि सन्तं
तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ४२ ॥

*யம் விஜ்ஞாந ஜ்யோதிஷமாத்யம் ஸுவிபாந்தம்*
*ஹ்ருத்யர்கேந்த்வக்ந்யோகஸமீட்யம் தடிதாபம் ।*
*பக்த்யாராத்யேஹைவ விஶந்த்யாத்மநி ஸந்தம்*
*தம் ஸம்ஸாரத்வாந்தவிநாஶம் ஹரிமீடே ॥*

**आद्यं**-முதல் பொருளாக இருப்பவரும், **विज्ञानज्योतिषं**-அறிவு பிரகாசமாயிருப்பவரும், **हृदि**-ஹிருதயத்தில், **सुविभान्तं**-நன்கு பிரகாசிப்பவரும், **अर्केन्द्वग्न्योकसं**-சூரியன், சந்திரன், அக்னி இவைகளை இருப்பிடமாகக் கொண்டவரும், **ईड्यं**-துதிக்கத்தக்கவரும், **तटिदाभं**-மின்னல்போல காந்தியுள்ளவருமான, **यं**-எந்தப் பரமாத்மாவை, **भक्त्या** பக்தியோடு, **आराध्य**-ஆராதித்து, **इहैव**-இங்கேயே, **आत्मनि**-தனது ஆத்மாவில, **सन्तं**-அபின்னமாக இருக்கும் பரமாத்மாவிடம, **विशन्ति**-பிரவேசிக்கிறார்களோ,, **तं**-அந்த, **संसारध्वान्तविनाशं**-ஸம்ஸார இருளை அழிக்கும், **हरिं**-ஹரியை, **ईडे**-துதிக்கிறேன்.

*பரமாத்மா சைதன்யரூபமான ஞானபிரகாசத்தை ஸ்வரூபமாகக்கொண்டவர். எல்லாவற்றிற்கும் காரணமானதால் இவரே முதன்மையானவர். எல்லா பிராணிகளின் ஹிருதயத்திலும் விளங்குபவர். '**ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति**' இது மட்டுமல்ல, சூரியன், சந்திரன், அக்னி ஆகிய ஒளிப்பொருள்களில் வஸிப்பவர். மின்னல்போல் காந்தியுள்ளவர். இந்தப் பரமாத்மாவை தனது ஹிருதயத்திலோ சூரியன், சந்திரன், அக்னி ஆகிய ஒளிப்பொருள்களிலோ மின்னல் போல் காந்தி உள்ளவராக பக்தியுடன் தியானித்து வந்தால் அவருடைய அருளால் தத்வஞானம் ஏற்பட்டு உபாதிகளெல்லாம் நீங்கிவிடும். அந்தக்கரணத்தை உபாதியாகக் கொண்ட சைதன்யம்தான் ஜீவன் என்பது இதில் உபாதி நீங்கிவிட்டால் சுத்த சைதன்ய ஸ்வரூபம் தான் மிஞ்சி நின்று பிரகாசிக்கும் இதுவே பரமாத்ம ஸ்வரூபம். பக்தர்கள் தமது ஜீவாத்ம ஸ்வரூபத்திலேயே ஆதாரமாக விளங்கும் அதாவது ப்ரத்யகபின்னமான பரமாத்ம ஸ்வரூபத்தில் பிரவேசித்து அதனுடன் ஒன்றாகக்கலந்து விடுகிறார்கள். பரப்ரஹ்ம ஸ்வரூபமாக ஆய்விடுகிறார்கள். அந்த பரமாத்மா ஹரியை துதிக்கிறேன.* (42)

पायाद्भक्तं स्वात्मनि सन्तं पुरुषं यो
भक्त्या स्तौतीत्याङ्गिरसं विष्णुरिमं माम् ।
इत्यात्मानं स्वात्मनि संहृत्य सदैक-
स्तं संसारध्वान्तविनाशं हरिमीडे ॥ ४३ ॥

*பாயாத் பக்தம் ஸ்வாத்மநி ஸந்தம் புருஷம் யோ*
*பக்த்யா ஸ்தௌதீத்யாங்கிரஸம் விஷ்ணுரிமம் மாம் ।*
*இத்யாத்மாநம் ஸ்வாத்மநி ஸம்ஹ்ருத்ய ஸதைக-*
*ஸ்தம் ஸம்ஸாரத்வாந்த விநாஶம் ஹரிமீடே ॥*

**आत्मानं**-மனதை, **स्वात्मनि**-தனது ஆத்மஸ்வரூபத்தில், **संहृत्य** லயிக்கச்செய்து, **स्वात्मनि**-தன் மனதில் அல்லது தனது ஆத்மாவில், **सन्तं**-இருக்கிற, **पुरुषं**-பரமாத்மாவை, **सदा**-எப்பொழுதும், **इति**-இவ்வாறு, **भक्त्या**-பக்தியோடு, **स्तौति**-ஸ்துதிக்கிறான், **इति**-என்ற காரணத்தால், **एकः**-ஒருவரான, **यः विष्णुः**-எந்த விஷ்ணு, **आङ्गिरसं**-ஆங்கிரஸ கோத்ரத்திலுதித்த, **भक्तं**-பக்தனை, **इमं मां**-இந்த என்னை, **पायात्**-காப்பாற்றுவாரோ, **तं**-அந்த, **संसारध्वान्तविनाशं**-ஸம்ஸார இருளைப்போக்கும், **हरिं**-ஹரியை, **ईडे**-துதிக்கிறேன்.

*மனதை வேறு இடங்களில் செலுத்தாமல் வேறு ஒன்றையும் நினைக்காமல் தனது ஆத்ம வஸ்துவிலேயே லயிக்கச்செய்து நிலை நிறுத்தி தன் மனதில் விளங்குபவரும் ஜீவஸ்வரூபத்திற்கும் ஆதாரமாக சைதன்ய ஸ்வரூபமாக பிரகாசிப்பவரும் சரீரத்தி லிருப்பதாலும் எங்கும் நிறைந்திருப்பதாலும் புருஷன் என்ற பெயருள்ளவருமான பரமாத்மாவை இவ்வாறு நான் பக்தியுடன் ஸ்தோத்ரம் செய்கிறேன் என்ற காரணத்தால் பக்தனை என்னை நிச்சயம் அந்த விஷ்ணு காப்பாற்றுவார். அவரையே ஸம்ஸாரத் திற்கு காரணமான அக்ஞான இருள் நீங்க பிரார்த்திக்கிறேன்.*

*சமாதி காலங்களில் பேதமற்று அறிகிறவன் அறிவு, அறியப் படும் பொருள் என்ற த்ரிபுடி விலகியதால் அச்சமயம் துதிக் கிறவன் துதி செய்யப்படும் கர்ம பொருள் துதி செய்வது என்ற கிரியை இவை சம்பவிக்க இடமில்லை. ஆகையால் அப்பொழுது ஜீவப்ரஹ்ம ஐக்யத்தை அனுபவித்து பிராரப்தகர்ம விசேஷத் தின் பயனாக ஜீவிக்கவேண்டிய காலத்தின் மத்தியில் சமாதியி னின்றும் எழுந்த காலங்களில் வேறொன்றில் பற்றுக்கொள்ளாது ஹரியை ஸ்துதி செய்வதில் ஈடுபடுகிறேன் என்பது கருத்து. இதைப்போலவே ஹரியின் அருளை விரும்புகிறவர்களும் எக்காலத் திலும் ஹரியை துதி செய்யவேண்டுமென உபதேசம் செய்யப் படுகிறது.* **(43)**

ஹரிஸ்துதி முற்றும்

|| श्रीः ||

# || श्रीलक्ष्मीनृसिंहकरुणारसस्तोत्रम् ||

# ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ கருணாரஸ ஸ்தோத்ரம்

[ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசார்யார் மண்டனமிச்ரரின் பார்யையும் ஸரஸ்வதீ தேவியின் அம்சமுமான உபயபாரதியால் காம சாஸ்திர விஷயமாய் பிரச்னம செய்யப்பட்டபோது ஒரு மாதம் அவகாசம் கேட்டுக்கொண்டு அமருக ராஜனின் சரீரத்தில் பிரவேசிக்க நினைத்து தன் உடலை ஒரு ஏகாந்த பிரதேசத்தில் சிஷ்யர்களுடைய பாதுகாப்பில் வைத்துவிட்டு பரகாயப் பிரவேசம் செய்து ராஜ்யபாரம் செய்துவருகையில் அவ்வரசனின் ஸ்திரீகளும் மந்திரிகளும் முன்னிருந்த அரசனுக்கும் இப்பொழு திருக்கும் அரசனுக்கும் உள்ள வித்யாஸத்தை உணர்ந்து "இவர் யாரோ யோகி இங்கே வந்திருக்கிறார், இவரை இங்கேயே நிறுத்திவிடவேண்டும்" என்ற எண்ணத்துடன் அவருடைய வாஸ்தவ சரீரத்தைத் தேடி அதை அழித்துவிடுவதே நல்ல தென்று நினைத்து மனிதர்களையனுப்பினார்கள்.

ஒருமாத காலம் ஆகியும் ஆசார்யாள் வராததால் சிஷ்யர்கள் கவலை கொண்டு சிலர் மட்டும் கிளம்பி ஆசார்யாளைத் தேடிச் சென்று நகரம் வந்து ஜனங்கள் மூலம் விருத்தாந்தம் அறிந்து ராஜஸபை சென்று மறைமுகமாக ஒருமாத காலமாகிவிட்டதைத் தெரியப்படுத்தினார்கள். ஆசார்யாளும் கேட்டு ராஜ சரீரத்தை விட்டுக் கிளம்பி தனது சரீரத்தில் பிரவேசித்தார். இதற்குள்ளாகவே மந்திரிகளால் அனுபபப்பட்ட பிருதயர்கள் எங்கும் தேடி சிஷ்யர்கள் இல்லாத சமயம் பார்த்து ஆசார் யாளின் சரீரத்தில் நெருப்பை வைத்துவிட்டார்கள். ஸ்ரீமத் ஆசார்யார் அந்த சரீரத்தை விட்டு தன் சரீரத்திற்கு திரும்பி வந்தபோது அக்னியினால் பீடிக்கப்படுவதைக் கண்டு, தனக்கு எவ்வித சிரமமுமில்லாமல் கைதூக்கி விடவேண்டுமென்று ஸ்ரீ லக்ஷ்மீ நரஸிம்ஹரை ஸ்துதி செய்து அவருடைய அநுக்ரஹத் தினால் அக்னி பாதை நீங்கி சிஷ்யர்களுடன் புறப்பட்டுச்சென்று

உபயபாரதியை ஜயித்தார் என்ற விபரம் மாதவீயாதி சங்கர விஜயங்களில் விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அப்பொழுது ஸ்ரீமத் ஆசார்யார் ஸ்ரீ லக்ஷ்மீ நரஸிம்ஹரை ஸ்துதி செய்தது இந்த ஸ்தோத்திரம்தான் என்று பிரஸித்தி.

பகவானிடம் கைதூக்கி விடவேண்டுமென்று கேட்கும்போது இந்த சரீரத்தை ரக்ஷித்துக்கொள்வதற்காக நெருப்பிலிருந்து காப்பாற்றிக் கொடுக்கவேண்டுமென்று கேட்பது கேட்பவரின் பக்திக்கோ கேட்கப்படுபவரின் பெருமைக்கோ ஒத்ததில்லையென்று ஸ்ரீமத் ஆசார்யார் ஸம்ஸாரமாகிற காட்டுத்தீயிலிருந்தே தன்னை விடுவிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க ஆரம்பித்து ஸம்ஸாரத்தைக் காட்டுத்தீயாகவும், வலையாகவும், தூண்டிலாகவும், பாழும் கிணறாகவும், மதயானையாகவும், விஷப்பாம்பாகவும், விஷ விருக்ஷமாகவும் ஸாகரமாகவும் அரண்யமாகவும் வர்ணித்து இதனால் ஏற்படும் துன்பங்களை விளக்கிக் காட்டி, இத்துன்பங்களால் பீடிக்கப்பட்டிருக்கும் தன்னைக் காப்பாற்றவேண்டுமென்று பிரார்த்திக்கிறார். ஸ்ரீமத் ஆசார்யாருக்கு அவ்வித துன்பங்கள் இருந்துவந்தனவா வென்பது பிரகிருதமில்லை. ஸம்ஸார வாழ்க்கையில் ஸாமான்யமாய் எல்லோருக்கும் இருக்கக்கூடியவைகளையே அவர் வர்ணித்திருக்கிறபடியால், எந்த மனிதனும் இந்த ஸ்தோத்திரத்தை வாசிப்பதினால் பரமமான சிரேயஸ்ஸை அடைவான் என்பதை கடைசி சுலோகத்தில் எடுத்துக் காட்டுகிறார். க்ஷீராப்தியில் சேஷசாயியாகவும் ப்ரஹ்மாதி வந்த்யராகவும் உள்ள ஸ்ரீ நாராயணரை ஸ்தோத்ர ஆரம்பத்தில் வர்ணித்து கடைசியில் தியானம் செய்வதற்காக லக்ஷ்மீந்ருஸிம்ஹ மூர்த்தியையும் வர்ணிக்கிறார்.]

श्रीमत्पयोनिधिनिकेतन चक्रपाणे
भोगीन्द्रभोगमणिराजितपुण्यमूर्ते ।
योगीश शाश्वत शरण्य भवाब्धिपोत
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ १ ॥

ஸ்ரீமத் பயோநிதி நிகேதந சக்ரபாணே
[illegible] ஜித புண்யமூர்த்தே ।
யோகீஶ ஶாச்வத ஶரண்ய பவாப்திபோத
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம் ॥

**श्रीमत्पयोनिधिनिकेतन**–மிகவும் சோபிக்கிற க்ஷீராபதியை இருப்பிடமாகக்கொண்டவரே, **चक्रपाणे**–ஸுதர்சன சக்கிரம் ஏந்திய கையை உடையவரே, **भोगीन्द्रभोगमणिराजितपुण्यमूर्ते**–ஸர்ப்பராஜனன ஆதிசேஷனுடைய படத்திலுள்ள நாகரத்தினத்தினல் நன்கு விளங்கும் புண்ணியமான சரீரத்தோடு கூடியவரே, **योगीश**–யோகிகளுக்கெல்லாம் ஈசனே, **शाश्वत**–என்றுமிருப்பவரே, **शरण्य**–சரணமடையத் தகுந்தவரே **भवाब्धिपोत**–ஸம்ஸாரக் கடலைத் தாண்டிவிட ஓடமாயிருப்பவரே, **लक्ष्मीनृसिंह**–ஹே லக்ஷ்மீ ஸமேதரான நரஸிம்ஹரே, **मम**–எனக்கு, **करावलम्बं**–கைப்பிடிப்பை, **देहि**–தாரும்.

*மாபெரும் பாற்கடலை தனது வாஸஸ்தலமாகக் கொண்டவ! கையில் சுதர்சனம் என்னும் சக்ராயுதம் தரித்தவ! படுக்கையாக அமைந்த ஆதிசேஷனின் படத்திலுள்ள திவ்ய ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்டதும், பிராணிகளின் புண்யக் கூட்டத்தினுல் அனுக்ரஹிக்க இச்சையினுல் ஏற்றுக்கொண்டதுமான திவ்ய உருவமுடையவ! நாரதாதி யோகிகளுக்குத் தலைவனாக விளங்குபவ! எப்பொழுதும் நித்யமாக விளங்குபவ! தீனர்களை ரக்ஷிப்பவ! சம்ஸாரக் கடலைத் தாண்ட உதவும் தோணியாக இருப்பவ, ஹே! லக்ஷ்மீ நரஸிம்ஹ! எனக்கு இந்த ஆபத் சமயத்தில் கைகொடுத்து உதவவேண்டும்.* (1)

ब्रह्मेन्द्ररुद्रमरुदर्ककिरीटकोटि-
संघट्टिताङ्घ्रिकमलामलकान्तिकान्त ।
लक्ष्मीलसत्कुचसरोरुहराजहंस
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ २ ॥

*ப்ரஹ்மேந்த்ர ருத்ர மருதர்க்க கிரீடகோடி*
*ஸங்கட்டிதாங்க்ரி கமலாமலகாந்தி காந்த* ।
*லக்ஷ்மீலஸத் குசஸரோருஹ ராஜஹம்ஸ*
*லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம்* ॥

**ब्रह्मेन्द्ररुद्रमरुदर्ककिरीटकोटिसंघट्टिताङ्घ्रिकमल** — பிரஹ்மா, தேவேந்திரன், ருத்திரர், வாயு, ஸூர்யன் இவர்களுடைய கிரீடங்களின் நுனிகளால் உரசப்பட்ட பாதபத்மங்களோடு கூடியவரே, **अमलकान्ति-**

**कान्त**-நிர்மலமான தேஜஸ்ஸினால் ரமணீயமாயிருப்பவரே, **लक्ष्मीलस-त्कुचसरोरुहराजहंस**-லக்ஷ்மியின் அழகிய ஸ்தன பத்மங்களில் விளையாடும் உத்தமமான ஹம்ஸமாயிருப்பவரே, **लक्ष्मीनृसिंह**-ஹே லக்ஷ்மீ ஸமேதரான நரஸிம்ஹரே, **मम**-எனக்கு, **करावलम्बं**-கைப் பிடிப்பை **देहि**-தாரும்.

*உன்னை நமஸ்கரித்து உன் அருள் பெறக் கூட்டமாகக் கூடிய பிரும்மா, ருத்ரன், இந்திரன், வாயு, சூர்யன் முதலிய தேவர்கள் வணங்கும் சமயம் சூர்யன்போல் ஒளிக்கும் ரத்னங்கள் பதித்த அவர்களின் கிரீடங்களின் ஓரங்கள் உறைந்த திருவடிக் கமலங்களுள்ளவரே, சிறந்த காந்திகளால் மிக்க அழகிய உருவமுடையவ, ஸ்ரீ லக்ஷ்மீதேவியின் அழகிய தாமரை மொட்டு போன்ற ஸ்தனங்களில் க்ரீடிக்கும் ராஜஹம்ஸம் போன்றவரே! ஹே லக்ஷ்மீ நரஸிம்ஹ! இச்சமயம் எனக்கு கைகொடுத்து உதவ வேண்டும்.* (2)

संसारदावदहनाकरभीकरोरु-
ज्वालावलीभिरतिदग्धतनूरुहस्य ।
त्वत्पादपद्मसरसीं शरणागतस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ ३ ॥

*ஸம்ஸாரதாவ தஹநாகர பீகரோரு*
*ஜ்வாலாவளீபிரதி தக்த தனூருஹஸ்ய ।*
*த்வத்பாதபத்ம ஸரஸீருஹமாகதஸ்ய*
*லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம் ॥*

**संसारदावदहनाकरभीकरोरुज्वालावलीभिः**-ஸம்ஸாரமாகிற காட்டுத்தீயின் ஏராளமான பயங்கரமான பெரிதான ஜ்வாலைகளின் தொடர்ச்சிகளால், **अतिदग्धतनूरुहस्य**-நன்கு எரிக்கப்பட்ட ரோமங்களோடு கூடியவனும், **त्वत्पादपद्मसरसीं**-தங்களுடைய பாதங்களாகிய தாமரைக் குளத்தை (அத்தீயை அணைத்து விட), **शरणागतस्य**-சரணமாக அடைந்திருக்கிறவனுமான, **मम**-எனக்கு, **लक्ष्मीनृसिंह**-ஹே லக்ஷ்மீ ஸமேதரான நரஸிம்ஹரே, **करावलम्बं**-கைப்பிடிப்பை, **देहि**-தாரும்.

*ஸம்ஸாரம் என்னும் காட்டுத்தீக் கூட்டத்தின் மிக்க பயங்கர நீண்ட ஜ்வாலைக் கூட்டங்களால் மிக்க எரிக்கப்பட்ட சரீரத்தை (சரீர லோமாக்களை) உடையவனாய் அதிலிருந்து தப்ப, உன் திருவடிகளாகிய தாமரைத் தடாகத்தைச் சரண மடைந்த எனக்கு கைகொடுத்து உதவுவாய்.*

*இந்த சுலோகத்தில் ஸம்ஸாரத்தைக் காட்டுத்தீயாக வர்ணிக்கிறார் உடலில் நெருப்புப் பிடித்தால் அதை அணைக்க நீர் நிலையை அணுகி அதில் அமிழவேண்டும். அதுபோலவே ஆத்யாத்மிகம், ஆதி தைவிகம், ஆதி பௌதிகம் என்னும் தாபத்ரயங்கள் நீங்க வேண்டுமானால் பகவானின் திருவடித் தாமரைகளைப் பற்றிக் கொள்ளவேண்டும். தண்ணீர் நெருப்பை அணைப்பது போல் பகவானின் திருவடிகள்தான் ஸம்ஸார தாபத்தைப் போக்கும்.*

**संसारजालपतितस्य जगन्निवास**
**सर्वेन्द्रियार्थबडिशाग्रझषोपमस्य ।**
**प्रोत्कम्पितप्रचुरतालुकमस्तकस्य**
**लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ ४ ॥**

*ஸம்ஸாரஜாலபதிதஸ்ய ஜகந்நிவாஸ*
*ஸர்வேந்த்ரியார்த்த படிஶாக்ர ஜஷோபமஸ்ய ।*
*ப்ரோத்கம்பித ப்ரசுரதாலுக மஸ்தகஸ்ய*
*லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்படம் ॥*

**जगन्निवास**–உலகத்தில் அந்தர்யாமியாக இருந்துவரும், **लक्ष्मीनृसिंह**-ஹே, லக்ஷ்மீ ஸமேதரான நரஸிம்ஹரே, **संसारजालपतितस्य**-ஸம்ஸாரமாகிற வலையில சிக்கிக்கொண்டு, **प्रोत्कम्पितप्रचुरतालुकमस्तकस्य**-பெரும்பாகம் தாடையும் தலையும் மிகவும் ஆட்டம் கொடுத்திருக்கும், **सर्वेन्द्रियार्थबडिशाग्रझषोपमस्य** - எலலாவித இந்திரிய விஷயங்களாகிற தூண்டில நுனியிலுள்ள மீனபோல் உள்ள, **मम**– எனக்கு, **करावलम्बं**–கைப்பிடிப்பை, **देहि**–தாரும்.

*ஹே ஜகந்நிவாஸ, உலகமனைத்தும் உனது உதரத்தில் வசிக்கிறது. உலகமனைத்திலும் வியாபித்து இருக்கிறாய். அதனால் நீ ஜகந்நிவாஸன். ஸம்ஸார பந்தம் என்னும் வீசப்பட்டிருக்கும்*

வலையில் விழுந்திருப்பவனும், எல்லா புலன்களுக்கும் இலக்காகும் எல்லா விஷயங்களாகிற தூண்டில் முள்ளின் நுனியில் சிக்கிக் கொண்ட மீன் போன்றவனும் பயத்தினால் மிக்க அசைகிற தாவாய்க்கட்டை தலைகளையுடையவனாகவும் இருக்கிற எனக்கு, ஹே லக்ஷ்மீ நரஸிம்ஹ! உனது கரம் கொடுத்து உதவவேண்டும்.

பிரபஞ்சம் என்பது ஆற்றில் மீன்களைப் பிடிக்க வலைஞன் வீசும் வலைபோன்றது. வலையில் அகப்பட்ட மீன் தப்பமுடியாது. உயிரை விடவேண்டியதுதான். பகவானால் விரிக்கப்பட்ட பிரபஞ்சமாகிற வலையில் அகப்பட்டுத் தவிக்கிறோம். மேலும் தூண்டில் முள்ளின் நுனியிலுள்ள உணவிற்கு ஆசைப்பட்டு நாக்கைக் கொடுத்து மீன் உயிர்விடுகிறது. சப்தம் முதலான இந்திரிய விஷயங்கள் தூண்டில் முள் போன்றவை. அவைகளில் ஆசை வைத்து விஷயங்களைச் சேகரித்து அனுபவிப்பதால் சரீரத்தில் மூப்பு உண்டாகி தலையாட்டம் ஏற்படுகிறது. துன்பங்களையே அடைகிறோம்.

(4)

संसारकूपमतिघोरमगाधमूलं
संप्राप्य दुःखशतसर्पसमाकुलस्य ।
दीनस्य देव कृपया पदमागतस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ ५ ॥

ஸம்ஸாரகூபமதி கோரமகாத மூலம்
ஸம்ப்ராப்ய துக்கஶத ஸர்ப்பஸமாகுலஸ்ய ।
தீநஸ்ய தேவ க்ருபயா பதமாகதஸ்ய
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம் ॥

**अतिघोरं**-மிக பயங்கரமான, **अगाधमूलं**-தரை வெகு ஆழத்திலுள்ள, **संसारकूपं**-ஸம்ஸாரமாகிற கிணற்றில், **संप्राप्य**-நன்கு விழுந்து, **दुःखशतसर्पसमाकुलस्य**-நூற்றுக்கணக்கான துக்கங்களாகிற ஸர்ப்பங்களால் பீடிக்கப்பட்டு, **दीनस्य**-தீனனாய், **पदं**-தங்களுடைய பாதத்தை, **आगतस्य**-அண்டி வந்திருக்கிற, **मम**-எனக்கு, **देव**-ஸ்வயம் பிரகாசஸ்வரூபரான, **लक्ष्मीनृसिंह**-லக்ஷ்மீ ஸமேதரான நரஸிம்ஹரே, **कृपया**-தயவினால், **करावलम्बं**-கைப்பிடிப்பை, **देहि**-தாரும்,

*மிக்க பயங்கரமாயும் அதிக ஆழமாயும் உள்ள ஸம்ஸாரம் என்னும் ஓர் பாழும் கிணற்றில் விழுந்து, அங்கு அனுபவிக்கப் படும் பலவித துன்பங்களாகிற சர்ப்பங்களால் சூழப்பட்டவனாக வும், அதிலிருந்து கரையேறி தப்ப, உனது திருவடியை சரண மடைந்தவனையும் தீனனையும் உள்ள எனக்கு ஹே தேவ! கருணை கொண்டு ஹே லக்ஷ்மீ நரஸிம்ஹ! கரமளித்து அருளவேண்டும். ஸம்ஸாரத்தை பாழும் கிணறாகக் காட்டுகிறார் ஜனஸஞ்சார மில்லாத இடத்தில் செடி கொடிகளால் சூழப்பட்ட பாழுங்கிணறு பார்க்கவே பயங்கரமாக இருக்கும். மிக்க ஆழமுள்ளதும் பாம்புகள் வாழுகின்றதுமான அந்த கிணற்றில் விழுந்தவனைப் போல நானும் ஸம்ஸார கூபத்தில் விழுந்து பலவிதத் துன்பங் களால் அவதிப்படுகிறேன். ஏதோ அதிருஷ்ட வசமாக தங்கள் திருவடிகளை சரணமடைந்துவிட்டேன். கிருபை கூர்ந்து கை தூக்கி விடவேண்டும்.* (5)

**संसारभीकरकरीन्द्रकराभिघात-**
**निष्पीड्यमानवपुषः सकलार्तिनाश ।**
**प्राणप्रयाणभवभीतिसमाकुलस्य**
**लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ ६ ॥**

*ஸம்ஸார பீகர கரீந்த்ர கராபிகாத*
*நிஷ்பீட்யமானவபுஷ: ஸகலார்த்திநாஶ ।*
*ப்ராணப்ரயாண பவபீதி ஸமாகுலஸ்ய*
*லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம் ॥*

**संसारभीकरकरीन्द्रकराभिघातनिष्पीड्यमानवपुषः**—ஸம்ஸார மாகிற பயங்கரமான பெரிய யானையின் துதிக்கையினால் நன்கு அடிக்கப் பட்டு நசுக்கப்படும் சரீரத்தோடு கூடியவனையும், **प्राणप्रयाणभवभीति-समाकुलस्य**—பிராணன் போவதினால் ஏற்படும் பயத்தினால் மிகவும் கலங்கியவனையுமுள்ள, **मम**—எனக்கு, **सकलार्तिनाश**-எல்லாவித துன்பங் களையும் நாசம் செய்யும் **लक्ष्मीनृसिंह**—ஹே லக்ஷ்மீ ஸமேதரான நரஸிம்ஹரே, **करावलम्बं**—கைப்பிடிப்பை, **देहि**—தாரும்.

*எல்லாவிதக் கஷ்டங்களையும் போக்கடிக்கக்கூடியவா! இச் சம்ஸாரமென்னும் மதங்கொண்ட பயங்கர யானையினால் தனது*

துதிக்கையினால் சுழற்றி அடிக்கப்பட்டு நசுக்கப்படுகிற உடலை யுடையவனாகவும், உயிர் போகும் தருவாயில் ஏற்படும் பல பயங்களினால் கலங்கினவனாகவும் இருக்கிற எனக்கு கைகொடுத்து உதவுவதை அளிக்கவேண்டும் ஹே லக்ஷ்மீ நரஸிம்ஹ! இதில் ஸம்ஸாரத்தை மதம் பிடித்த யானைக்கு ஒப்பிடுகிறார். பிறந்தவர் யாவருக்கும் ஒரு நாள் சாவு உண்டு. பிராணன் சரீரத்தை விட்டுப் பிரியும் தறுவாயில் ஏற்படும் துன்பங்களோ சொல்லத் தரமன்று. ஆயிரம் தேள்கள் ஒரே சமயத்தில் கடித்ததுபோல் இருக்குமாம். அதை நினைத்தாலே இப்பொழுதும் மிகுந்த பயமேற்பட்டு மனம் கலங்குகிறது, எல்லாத் துன்பங்களையும் போக்கும் ஸ்வபாவமுள்ள நீதான் கைதூக்கி விடவேண்டும். (6)

संसारसर्पविषदिग्धमहोग्रतीव्र-
दंष्ट्राग्रकोटिपरिदष्टविनष्टमूर्तेः ।
नागारिवाहन सुधाब्धिनिवास शौरे
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ ७ ॥

ஸம்ஸார ஸர்ப்ப விஷ திக்த மஹோக்ர தீவ்ர
தம்ஷ்ட்ராக்ர கோடிபரிதஷ்ட விநஷ்டமூர்த்தே: ।
நாகாரிவாஹந ஸுதாப்தி நிவாஸ ஶௌரே
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம் ॥

**संसारसर्पविषदिग्धमहोग्रतीव्रदंष्ट्राग्रकोटिपरिदष्टविनष्टमूर्तेः** — ஸம்ஸாரமாகிற ஸர்ப்பத்தின் விஷத்தினால பூசப்பட்டு மிக பயங்கரமாயும் கடுமையாயுமுள்ள பற்களின் கூர்மையான நுனிகளால் நாலா பக்கங்களிலும் கடிக்கப்பட்டு விநாசமடைந்திருக்கும் சரீரத்தோடுகூடிய, **मम**- எனக்கு, **नागारिवाहन**—ஸர்ப்பங்களுக்கு சத்ருவான கருடனை வாஹனமாக உடையவரே, **सुधाब्धिनिवास**—(விஷத்தைப் போக்கடிக்கக்கூடிய) அமிருதக் கடலில் வாஸம் செய்பவரே, **शौरे**—சூரஸேனர் என்பவரின் ஸந்ததியாக (கிருஷ்ணாவதாரத்தில்) அவதரித்தவரே, **लक्ष्मीनृसिंह**-ஹே லக்ஷ்மீ ஸமேதரான நரஸிம்ஹரே, **मम**—எனக்கு, **करावलम्बं**—கைப்பிடிப்பை, **देहि**--தாரும்.

ஹே கருடவாஹனா! அமிருதக் கடலில் பள்ளிகொண்டவ! ஹே சௌரே! ஹே லக்ஷ்மீ நரஸிம்ஹ! இச் சம்ஸாரம் என்னும்

ஸர்ப்பத்தின் விஷமுள்ள மிகக் கடுமையான கூர்மையான பற்களினால் கடிக்கப்பட்டு அழியும் தருவாயிலிருக்கும் சரீரத்தை உடையவனான எனக்கு கைகொடுத்து உதவுவதை செய்ய வேண்டும். ஸம்ஸாரத்தை கொடிய பாம்பின் விஷப்பல்லாக வர்ணிக்கிறார். பாம்பின் சத்ரு கருடன். கருடனைக் கண்டாலே பாம்பு நடுநடுங்கும். காருட மந்திர ஜபத்தினாலேயே விஷம் நீங்கிவிடும். அப்பேற்பட்ட கருடன் உனக்கு வாஹனமாக இருந்து ஸேவை செய்கிறார். மேலும் அமிருதம் சிறிது உட்கொண்டால்கூட அவர்களை விஷம் ஒன்றும் செய்யாது. நீயோ அமிருதக் கடலில் வாஸம் செய்கிறாய். ஆதலால் ஸம்ஸார விஷத்தை நீதான் போக்கவேண்டும். கருட வாஹனராகவும் ஸுதா ஸமுத்ரவாஸியாகவும் பகவானை த்யானித்தால் விஷபாதை நிவர்த்தியாகும்.

संसारवृक्षमघवीजमनन्तकर्म-
शाखायुतं करणपत्रमनङ्गपुष्पम् ।
आरुह्य दुःखफलिनं चकितं दयालो
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ ८ ॥

ஸம்ஸாரவ்ருக்ஷமகபீஜமனந்தகர்ம
ஶாகாயுதம் கரணபத்ரமநங்கபுஷ்பம் ।
ஆருஹ்ய துக்கபலிநம் சகிதம் தயாளோ
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம் ॥

**अघवीजं**-பாபத்தையே விதையாயுடையதும், **अनन्तकर्मशाखायुतं**-எல்லையற்ற கர்மாக்களாகிற கிளைகளோடுகூடியதும், **करणपत्रं**-இந்திரியங்களை இலைகளாகக் கொண்டதும், **अनङ्गपुष्पं**-காமமாகிற புஷ்பத்தையுடையதும், **दुःखफलिनं**-துக்கத்தையே பழமாக உடையதுமான, **संसारवृक्षं**-ஸம்ஸாரமாகிற மரத்தில், **आरुह्य**-ஏறிவிட்டு **चकितं**-நடுங்குகிற, **मम**-எனக்கு, **दयालो**-ஹே தயாளுவான, **लक्ष्मीनृसिंह**-லக்ஷ்மீ ஸமேதரான நரஸிம்ஹரே, **करावलम्बं**-கைப் பிடிப்பை, **देहि**-கொடும்.

ஹே லக்ஷ்மீநரஸிம்ஹ! பாபம் என்னும் விதையிலிருந்து எண்ணற்ற கருமாக்களாகும் பல கிளைகளை

*யுடையதாயும், இந்திரியங்களாகும் இலைகள் கொண்டதாயும் பெண்ணாசை (காமம்) என்னும் புஷ்பம் புஷ்பிப்பதாயும் துன்பங்கள் என்னும பழங்களைத் தருவதாயும் உள்ள இச் சம்ஸாரம் என்னும் விஷ விருக்ஷத்தில் ஏறி, பயந்து பரிதபிக்கும் எனக்குக் கைகொடுத்து உதவுவதை செய்வாய் ஹே கருணைக் கடலே. இதில் ஸமஸாரததை விருக்ஷமாக வர்ணிக்கிறார். கடோபநிஷத்திலும கீதையிலும் அச்வத்த விருக்ஷமாக கூறப் பட்டிருக்கிறது நாளை இருப்பது நிச்சயமில்லையல்லவா. ஜன்ம மரணத் துன்பங்களுக்குக் காரணமான பாபம்தான் விதை. மேலும் மேலும் நாம் செய்யும் எண்ணற்ற கர்மாக்கள் கிளைகள், இந்திரியங்கள் இலைகள், காமம் புஷ்பம், துன்பமே பழம். இம் மரத்தில் ஏறி துன்பப்படும் என்னைக் காப்பாற்றவேண்டும். (8)*

**संसारसागरविशालकरालकाल-**
**नक्रग्रहग्रसितनिग्रहविग्रहस्य ।**
**व्यग्रस्य रागनिचयोर्मिनिपीडितस्य**
**लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ ९ ॥**

*ஸம்ஸாரஸாகர விசால கராள கால*
*நக்ரக்ரஹ க்ரஸித நிக்ரஹ விக்ரஹஸ்ய 1*
*வ்யக்ரஸ்ய ராகநிசயோர்மி நிபீடிதஸ்ய*
*லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம் 11*

**संसारसागरविशालकरालकालनक्रग्रहग्रसित निग्रह विग्रहस्य —** ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்திலுள்ள மிகவும பெரிதும் பயங்கரமுமான காலம் (யமன்) என்கிற முதலையால பலாத்காரமாய் கவ்விப்பிடித்துக் கொண்டிருக்கிற சரீரத்தோடு கூடியவனும, **रागनिचयोर्मिनिपीडितस्य-** ஆசைகளின் கூட்டமாகிற அலைகளால் மிகவும பீடிக்கப்பட்டவனும், **व्यग्रस्य-**என்ன செய்வதென்று தெரியாமல் திணறிக்கொண்டு இருப்பவனுமான, **मम-**எனக்கு, **लक्ष्मीनृसिंह-**லக்ஷ்மீ ஸமேதரான ஹே நரஸிம்ஹரே, **करावलम्बं-**கைப்பிடிப்பை, **देहि-**கொடும்.

*ஹே லக்ஷ்மீநரஸிம்ஹ! இச் சம்ஸாரமென்னும் அகன்ற சமுத்திரத்தில் பயங்கர யமன் என்னும் முதலையினால் பிடிபட்டு*

விழுங்கப்படும் பலவின சரீரத்தையுடையவனும், பலவித பற்றுதல் என சொல்லப்படும் அலைகளினால் உந்தப்பட்டு கஷ்டப் படுகிறவனும், கவலை கொண்டவனுமான எனக்கு ஹஸ்தா வலம்பன உதவியை அளிக்கவேண்டும். இதில் ஸமுத்திரமாகக் கூறுகிறார். கடலில் அலைகளில் அகப்பட்டவன் முன்னாலும் பின்னாலும் தள்ளப்பட்டுத் தவிப்பதுபோல் ஆசைகளால் உந்தப் பட்டு விஷயங்களைத் தேடிச்செல்வதும், அது கிடைக்காததாலும் கிடைத்தாலும் துன்பமே ஏற்படுவதாலும், செய்வதறியாது தவிக்கிறேன். கடைசியில் காலன் என்னும் முதலை தனது அகன்ற வாயைப் பிளந்து என்னை விழுங்கிவிடுகிறான். கஜேந்திரனைக் காப்பாற்றியது போல் என்னையும் காப்பாற்ற வேண்டும். (9)

संसारसागरनिमज्जनमुह्यमानं
दीनं विलोकय विभो करुणानिधे माम् ।
प्रह्लादखेदपरिहारकृतावतार
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ १० ॥

ஸம்ஸாரஸாகர நிமஜ்ஜநமுஹ்யமாநம்
தீநம் விலோகய விபோ கருணாநிதே மாம் ।
ப்ரஹ்லாத கேதபரிஹார க்ருதாவதார
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம் ॥

**संसारसागरनिमज्जनमुह्यमानं** – ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தில் நன்கு மூழ்கி மோஹமடைந்து, **दीनं**–தீனனாயிருக்கிற, **मां**–என்னை, **करुणानिधे**–கருணாநிதியே, **विभो**–ஸர்வ வியாபகராக இருக்கிறவரே, **विलोकय**–பாரும். **प्रह्लादखेदपरिहारकृतावतार**–பிரஹ்லாதனுடைய துன்பங்களை நிவிருத்திசெய்து கொடுப்பதற்காகவே அவதாரம் செய்தவரே, **लक्ष्मीनृसिंह**–லக்ஷ்மீ ஸமேதரான ஹே நரஸிம்ஹரே, **मम**-எனக்கு, **करावलम्बं**–கைப்பிடிப்பை, **देहि**–கொடும்.

ஹே கருணாநிதியே! பிரஹ்லாத பக்தனின் துயரத்தை நீக்க அவதரித்தவ! ஹே ப்ரபோ! ஹே லக்ஷ்மீ நரஸிம்ஹ! இச் சம்ஸார சாகரத்தில் மூழ்கி மூர்ச்சித்து தத்தளிப்பவனும இரங்கத் தக்கவனுமான என்னை காண்பாய்! அதிலிருந்து தப்ப எனக்கு ஹஸ்தாவலம்பன உதவியளிக்கவேண்டும்.

[ஹிரண்யகசிபுவினால் பிரஹ்லாதனுக்கு ஏற்பட்ட பலவித இன்னல்களிலிருந்தும் காப்பாற்றிக் கொடுதது கடைசியில் ஹிரண்ய கசிபுவை நிக்ரஹித்து பிரஹ்லாதனை அனுக்ரஹித்த மூர்த்தி நரஸிம்ஹரல்லவா? அவருடைய உக்கிரமான ரூபத்தைக் கண்டு லக்ஷ்மீதேவி கூட நெருங்குவதற்கு பயப்பட்ட சமயத்தில் அவரை சாந்த ரூபமாக ஆகும்படி பிரஹ்லாதன் பிரார்த்தித்த தின் பேரில் அப்படியே சாந்தமாகி லக்ஷ்மியை அங்கீகரித்து லக்ஷ்மீ ஸமேதராகப் பிரகாசித்த லக்ஷ்மீ நரஸிம்ஹரே ஸகல விதமான கஷ்டங்களிலிருந்தும் விடுவித்து அனுக்ரஹம் செய்யத் தகுந்தவரென்று அவரையே இந்த ஸ்தோத்திரத்தில் பிரார்த் திப்பது நியாயமென்று இந்த சுலோகத்தில் ஸ்ரீமத் ஆசார்யாா எடுத்துக்காட்டுகிறார். பிரஹ்லாதனை நெருப்பில் போட்டார்கள், யானைகளை விட்டு நசுக்கச் சொன்னார்கள், விஷப்பாம்புகளை விட்டுக் கடிக்கச் செய்தார்கள், கல்லைக்கட்டி ஸமுத்திரத்தில் அமுக்கினார்கள். என்ன செய்தும் பிரயோஜனப் படாமல் பகவான் காப்பாற்றிக் கொடுத்தார். அதைவிடக் கொடுமை யான அக்னி போலும், யானை போலும், ஸர்ப்பம் போலும், ஸமுத்திரம் போலும் என்னை அழித்துவிட யத்தனிக்கும் ஸம்ஸார மாகிற மிகவும் பெரிய ஆபத்திலிருந்து விடுவித்து நீர்தான் கைதூக்கிவிட்டு ரக்ஷிக்கவேண்டுமென்று பலமுறை பலவிதமாக ஸ்ரீமத் ஆசார்யார் பிரார்த்திக்கிறார். அவர் ஈசுவராவதாரமா யிருப்பதுடன் உலக ரீதியாய் ஆத்ம ஞானியாயிருந்தபடியால் அவருக்கு இவ்வித ஆபத்துக்கள் இருந்தனவென்று நினைபபதற் கில்லை. பகவானிடம் எவ்விதம் பிரார்த்திப்பதென்று நமக்குப் போதிக்கவே அவரும் நம்மைப்போலிருப்பதாகச் சொல்லிக் கொண்டு பிரார்த்தித்துக் காட்டுகிறார்.] (10)

संसारघोरगहने चरतो मुरारे
मारोग्रभीकरमृगप्रचुरार्दितस्य ।
आर्तस्य मत्सरनिदाघसुदुःखितस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ ११ ॥

ஸம்ஸாரகோரகஹநே சரதோ முராரே
மாரோக்ரபீகரம்ருகப்ரசுரார்திதஸ்ய ।
ஆர்த்தஸ்ய மத்ஸரநிதாகஸுதுக்கிதஸ்ய
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம் ॥

**संसारघोरगहने**—ஸம்ஸாரமாகிற கோரமான காட்டில், **चरतः**—ஸஞ்சரித்துக்கொண்டு, **मारोग्रभीकरमृगप्रचुरार्दितस्य**—காமமாகிற உக்கிரமான பயங்கரமான ஏராளமான காட்டு மிருகங்களால் துன்பப் படுத்தப்பட்டு, **मत्सरनिदाघसुदुःखितस्य**—பொறுமையென்ற கோடை வெய்யிலால் மிகவும் துக்கத்தையடைந்து, **आर्तस्य**—வருந்துகிற, **मम**—எனக்கு, **मुरारे**—முரனென்ற அஸுரனுக்கு சத்ருவான, **लक्ष्मीनृसिंह**—லக்ஷ்மீ நரஸிம்ஹரே, **करावलम्बं**-கைப்பிடிப்பை, **देहि**—கொடும்.

*ஹே லக்ஷ்மீ நரஸிம்ஹ! ஹே முராரே! இச்சம்ஸார மென்னும் பயங்கர அரண்யத்தில் செல்லுகிறவனும், பொறுமை என்னும் கோடை வெப்பத்தால் பெருந்துயரமடைகிறவனும், காமம் என்னும் பயங்கர துஷ்ட வேங்கை முதலிய விலங்கினத் தால் ஹிம்ஸிக்கப் படுகிறவனும் இவ்வாறு பலவித துன்பத்தை அனுபவிக்கும் எனக்கு கைகொடுத்து உதவுவதை அளித்துக் காப்பாற்றவேண்டும்.*

*இந்த சுலோகத்தில் ஸம்ஸாரத்தை அரண்யமாக வர்ணிக் கிறார். மரங்களும் செடி கொடிகளும் அடர்ந்து சிங்கம், புலி முதலிய துஷ்ட மிருகங்கள் வாழும் காடு போன்றது இந்த ஸம்ஸாரம். மழை, வெய்யில், குளிர், காட்டுத்தீ முதலியவை களுடன் மிக பயங்கரமான காட்டில் தற்செயலாய் அகப்பட்டவன் வெளியில் செல்ல வழி புலப்படாமல் திசை தெரியாமல் கொடிய மிருகங்களுக்குப் பயந்து தவிப்பது போலவே பிறவி மரண ரூப மான ஸம்ஸாரத்தில் அகப்பட்டுத் தவிக்கிறோம். விஷயங்களைக் கண்டதும் அதில் ஏற்படும் ஆசைதான் கொடிய மிருகம். ஆசைப்பட்ட பொருள் நமக்குக் கிடைக்காமல் பிறருக்குக் கிடைத்துவிட்டால் பொறுமை ஏற்படுகிறது. இது கடும் கோடை வெய்யில். இவ்வாறே கோபம் முதலியவையும் நம்மைத் துன்புறுத்துகின்றன. இந்தக் காமம் முதலான தோஷங்களை அடியோடு விலக்கிவிட்டு பகவானை அண்டினே மானால் முனிவர் போல் ஸம்ஸாராரண்யத்தில் சுகமாக வாழலாம். பின்னால் பகவத் பதத்தையும் அடையலாம்.* (11)

**बद्ध्वा गले यमभटा बहु तर्जयन्तः**
**कर्षन्ति यत्र भवपाशशतैर्युतं माम्**

एकाकिनं परवशं चकितं दयालो
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ १२ ॥

*பத்த்வா களே யமபடா பஹு தர்ஜயந்த:*
*கர்ஷந்தி யத்ர பவபாசசதைர் யுதம் மாம் ।*
*ஏகாகிநம் பரவசம் சகிதம் தயாளோ*
*லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம் ॥*

**गले**–கழுத்தில், **बद्ध्वा**–கட்டி, **यमभटाः**–யமனுடைய கிங்கரர்கள், **बहु**–வெகுவாக, **तर्जयन्तः**–அதட்டிக்கொண்டு, **भवपाशशतैः**–ஸம்ஸாரத்திலுள்ள நூற்றுக்கணக்கான பாசங்களோடு, **युतं**–கூடினவனாய், **एकाकिनं**–ஸஹாயமற்று தனித்தவனாய், **परवशं**–ஸ்வாதீனமற்று பிறருக்கு அதீனனாய், **चकितं**–நடுங்கிக் கொண்டிருக்கிற, **मां**–என்னை, **यत्र**–எங்கேயோ, **कर्षन्ति**–இழுத்துச் செல்கிறார்கள். **दयालो**–தயாளுவாயிருக்கிற, **लक्ष्मीनृसिंह**–ஹே லக்ஷ்மீநரஸிம்ஹரே, **मम**–எனக்கு, **करावलम्बं**–கைப்பிடிப்பை, **देहि**–கொடும.

*ஹே தயாளோ! ஹே லக்ஷ்மீநரஸிம்ஹ! ஸம்ஸார வாழ்க்கையில் பலவித ஆசைகள் என்னும் கயிறுகளால் ஏற்கனவே இறுகக் கட்டுண்டு கிடக்கும் என்னை எந்த ஸமயம் யம கிங்கரர்கள் கழுத்தில் சுருக்கிட்டு மிக்க மிரட்டி இழுத்துச் செல்வார்களோ அச்சமயம், பராதீனனாயும் உதவியற்று தனித்து இருப்பவனாயும், மிக்க பயம் கொண்டவனாயும் உள்ள என்னைக் காப்பாற்றக் கைகொடுத்து உதவி புரிவாய். மற்ற ஆபத்துக்களை பிறர் உதவியினால் போக்கிக்கொள்ளலாம். யம பாதையை பகவானைத் தவிர வேறு யாரும் போக்கமுடியாது. (12)*

लक्ष्मीपते कमलनाभ सुरेश विष्णो
यज्ञेश यज्ञ मधुसूदन विश्वरूप ।
ब्रह्मण्य केशव जनार्दन वासुदेव
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ १३ ॥

*லக்ஷ்மீபதே கமலநாப ஸுரேச விஷ்ணோ*
*யக்ஞேச யக்ஞ மதுஸூதந விச்வரூப ।*

*ப்ரஹ்மண்ய கேஶவ ஜநார்தந வாஸுதேவ*
*லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம் ॥*

**लक्ष्मीपते**-லக்ஷ்மீ தேவியின் பதியே, **कमलनाभ**-நாபியில் பத்மத்தையுடையவரே, **सुरेश**-தேவர்களுக் கெல்லாம் ஈசனே, **विष्णो**-ஸர்வ வியாபகரே, **यज्ञेश**-யாகங்களுக்கு அதிபதியே, **यज्ञ**-யாக ஸ்வரூபரே, **मधुसूदन**-மது என்ற அஸுரனைக் கொன்றவரே, **विश्वरूप**-எல்லா ரூபத்தையுமுடையவரே, **ब्रह्मण्य**-பிராமணர்களுக்கு ஹிதமானவரே, **केशव**-அழகிய கேசங்களுள்ளவரே, கேசி என்ற அஸுரனைக் கொன்றவரே, **जनार्दन**-துஷ்டஜனங்களை அழிப்பவரே, ஸாது ஜனங்களால் வேண்டப்படுபவரே, **वासुदेव**-எல்லாப்பதார்த்தங் களிலும் இருந்து கொண்டு அவைகளையும் இருக்கும்படி செய்து கொண்டு பிரகாசிப்பவரே. **लक्ष्मीनृसिंह**-லக்ஷ்மீ ஸமேதரான நரஸிம்ஹரே, **मम**-எனக்கு, **करावलम्बं**-கைப்பிடிப்பை, **देहि**-கொடும்.

*ஹே லக்ஷ்மீபதே! நாபியில் தாமரையுடன் விளங்குபவரே ஹே தேவேச! ஹே விஷ்ணோ! எல்லா யாகங்களிலும் ஆராதிக்கப்படும் தேவ! எல்லா யாகஸ்வரூபனாகவும் உள்ளவா! ஹே மதுசூதன! ஹே விசுவரூப! எல்லா ரூபமாகவும் இருப்ப வனே! எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்பவனே! வேதங் களினாலும் அந்தணர்களாலும் போற்றப்படுபவ! ஹே கேசவ! அழகிய கூந்தலையுடையவனே, ஹே ஜனார்த்தன! துஷ்ட ஜனங் களை நிக்ரஹிப்பவனே ஹே வாசுதேவ! ஹே லக்ஷ்மீநரஸிம்ஹ! எனக்கு ஹஸ்தாவலம்பனம் கொடுத்து ஆபத்தினின்றும் காப்பாய். இந்த ச்லோகத்தில் பகவானுடைய பல நாமாக்கள் மூலம் அவருடைய மஹிமை அநுஸந்தானம் செய்யப்படுகிறது.*

**एकेन चक्रमपरेण करेण शङ्खं**
**अन्येन सिन्धुतनयामवलम्ब्य तिष्ठन् ।**
**वामेतरेण वरदाभयपद्मचिन्हं**
**लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ १४ ॥**

*ஏகேந சக்ரமபரேண கரேண ஶங்கம்*
*அந்யேந ஸிந்துதநயாமவலம்ப்ய திஷ்டன் ।*

*வாமேதரேண வரதாபயபத்மசிஹ்நம்*
*லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம் ॥*

**एकेन**–ஒரு, **करेण**-கையினால், **चक्रं**-சக்கிராயுதத்தையும், **अपरेण**-வேறொன்றினால், **शङ्खं**-சங்கத்தையும், **अन्येन**-மற்றொன்றினால், **सिन्धुतनयां**–ஸமுத்திரராஜ புத்திரியான, லக்ஷ்மீ தேவியையும், **वामेतरेण**-வலதுகையினால், **वरदाभयपद्मचिन्हं**–அனுக்ரஹம் செய்யும் வரத முத்திரை, அபயப்பிரதானம் செய்யும அபயமுத்திரை, பத்மம், ஆகிய அடையாளங்களையும், **अवलम्ब्य**–தாங்கிக் கொண்டு, **तिष्ठन्**-நிற்கிற, **लक्ष्मीनृसिंह**–லக்ஷ்மீ நரஸிம்ஹரே, **मम**–எனக்கு, **करावलम्बं**–கைப் பிடிப்பை, **देहि**–கொடும்.

*ஒரு கையில் சக்ராயுதம் ஏந்தியும், மற்றொரு கையில் சங்க மேந்தியும், வேறொரு கையினால் ஸமுத்ர ராஜன் பெண்ணை லக்ஷ்மீ தேவியின் கரத்தைப் பற்றியும் வலது கையில் வரத அபய முத்ரைகளையும் பத்மத்தையும் தரிக்கும் ஹே லக்ஷ்மீ நரஸிம்ஹ எனக்கு ஹஸ்தாவலம்பன உதவியை அருள்வாய் தியானம் செய்வதற்காக லக்ஷ்மீந்ருஸிம்ஹ மூர்த்தி வர்ணிக்கப் படுகிறது.* (14)

**अन्धस्य मे हृतविवेकमहाधनस्य**
**चोरैर्महाबलिभिरिन्द्रियनामधेयैः ।**
**मोहान्धकारकुहरे विनिपातितस्य**
**लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ १५ ॥**

*அந்தஸ்ய மே ஹ்ருதவிவேகமஹாதநஸ்ய*
*சோரைர் மஹாபலிபிரிந்த்ரியநாமதேயை: ।*
*மோஹாந்தகாரகுஹரே விநிபாதிதஸ்ய*
*லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம் ॥*

**अन्धस्य**–குருடனும், **महाबलिभिः**–மிகவும் பலசாலிகளான, **इन्द्रियनामधेयैः**-இந்திரியங்களென்ற பெயர்களையுடைய, **चोरैः**-திருடர்களால், **हृतविवेकमहाधनस्य**-திருடப்பட்ட விவேகமாகிற உத்தமமான செல்வமுள்ளவனுமான **मे**–எனக்கு, **मोहान्धकारकुहरे**–மோஹமாகிற இருட்டடர்ந்த பள்ளத்தில், **विनिपातितस्य**–நன்கு கீழே தள்ளப்பட்ட

**मम**-எனக்கு, **लक्ष्मीनृसिंह**-லக்ஷ்மீ நரஸிம்ஹரே, **करावलम्बं**-கைப்பிடிப்பை, **देहि**-கொடும்.

*பிறவியிலேயே குருடன் அவனுடைய சிறந்த செல்வங்களை எல்லாம் திருடர்கள் அபகரித்துக்கொண்டு அவனையும் நடுக் காட்டில் இருளடர்ந்த பெரிய பள்ளத்தில் தள்ளிவிட்டுப் போய் விட்டார்கள். உதவிக்கு ஆள்கிடையாது. அவன் எப்படி மீண்டுவரமுடியும்? கடவுளின் அருள் ஒன்றால் தான் தப்ப முடியும். நமது ஆத்ம ஸ்வரூபத்தை அறியாத நாம் கண்ணிருந்தும் குருடர்களே. மிக பலிஷ்டர்களான புலன்களுக்குக் கட்டுப்பட்டு அவைகளால் இழுக்கப்பட்டு விஷயங்களை நோக்கி ஓடுகிறோம். எது உண்மை, எது பொய், எது அழியாதது, எது அழிவுள்ளது, எது ஹிதம், எது அஹிதம் என்ற விவேகத்தை விஷய ஆசை மூலம் இழந்துவிட்டோம். மேலும் மோஹம், விபரீத ஞானம் ஏற்பட்டுள்ளது. இந்த நிலையில் லெக்ஷ்மீ நரஸிம்ஹர் தான் தத்வ ஞானத்தைக் கொடுத்துக் கைதூக்கி விடவேணும்.* (15)

**प्रह्लादनारदपराशरपुण्डरीक-**
**व्यासादिभागवतपुङ्गवहृन्निवास ।**
**भक्तानुरक्तपरिपालनपारिजात**
**लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥ १६ ॥**

*ப்ரஹ்லாத நாரத பராசர புண்டரீக*
*வ்யாஸாதி பாகவத புங்கவஹ்ருந்நிவாஸ* ।
*பக்தாநுரக்த பரிபாலந பாரிஜாத*
*லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம்* ॥

**प्रह्लाद नारदपराशरपुण्डरीक व्यासादि भागवत पुङ्गव हृन्निवास-** ப்ரஹ்லாதர், நாரதர், பராசரர், புண்டரீகர், வியாஸர், முதலான பகவத் பக்த சிரேஷ்டர்களின் ஹ்ருதயத்தில் எப்பொழுதுமிருப்பவரே, **भक्तानुरक्तपरिपालनपारिजात**-பக்தர்களிடத்தில அனுராகமுளளவர்களையும் பரிபாலனம் செய்வதில பாரிஜாத மென்ற கல்பவிருக்ஷம் போலுள்ளவரே **लक्ष्मीनृसिंह**-ஹே லக்ஷ்மீ நரஸிம்ஹரே, **मम**-எனக்கு, **करावलम्बं**-கைப்பிடிப்பை, **देहि**-கொடும்.

ப்ரஹ்லாதன் நாரதர், பராசரர், புண்டரீகர், வ்யாஸர் முதலிய சிறந்த பக்தர்களின் ஹ்ருதயத்தில் ஸதா வாஸம் செய்பவ! உனது பக்தர்களிடம் பக்திகொண்ட பக்த பக்தர்களையும் இஷ்ட சித்திகளைக் கொடுத்து கற்பக விருக்ஷமே! ஹே லக்ஷ்மீ நரஸிம்ஹ! எனக்கு உன் திருக்கை நீட்டி உதவி அளிக்கவேண்டும். (16)

लक्ष्मीनृसिंहचरणाब्जमधुव्रतेन
स्तोत्रं कृतं शुभकरं भुवि शंकरेण ।
ये तत् पठन्ति मनुजा हरिभक्तियुक्ताः
ते यान्ति तत्पदसरोजमखण्डरूपम् ॥ १७ ॥

லக்ஷ்மீந்ருஸிம்ஹ சரணாப்ஜமதுவ்ரதேந
ஸ்தோத்ரம் க்ருதம் ஶுபகரம் புவி சங்கரேண ।
யே தத் படந்தி மனுஜா ஹரிபக்தியுக்தா:
தே யாந்தி தத்பதஸரோஜமகண்டரூபம் ॥

**लक्ष्मीनृसिंहचरणाब्जमधुव्रतेन**–லக்ஷ்மீநரஸிம்ஹருடைய சரணமாகிற தாமரை மலரில் உள்ள தேனை அருந்துவதே கார்யமாயுள்ள வண்டு போலுள்ள, **शंकरेण**–சங்கரரால, **भुवि**–இப்பூலோகத்திலேயே **शुभकरं**–க்ஷேமத்தை செய்யக் கூடியதான, **स्तोत्रं**–இந்த ஸ்தோத்திரமானது, **कृतं**–செயயப்பட்டிருக்கிறது. **तत्**–அதை. **हरिभक्तियुक्ताः**–ஹரியினிடம் பக்தியோடு கூடின, **ये**–எந்த, **मनुजाः**–மனிதர்கள, **पठन्ति**–படிக்கிறார்களோ, **ते**–அவர்கள், **अखण्डरूपं**–வியாபகஸ்வரூபத்தோடு கூடிய, **तत्पदसरोजं**–அந்த லக்ஷ்மீ நரஸிம்ஹருடைய பாத கமலத்தை, **यान्ति**–அடைவார்கள்.

லக்ஷ்மீ நரஸிம்ஹ தேவதையின் திருவடித் தாமரைகளில் வண்டுபோல் பற்றுக்கொண்டுள்ள ஸ்ரீசங்கரர் என்னும் என்னால் உலகிற்கு மங்களகரமான இந்த ஸ்தோத்ரம் இயற்றப் பட்டுள்ளது. விஷ்ணு பக்தி நிறைந்த எந்த மனிதர்கள் இந்த ஸ்தோத்திரத்தைப் படிக்கிறார்களோ அவர்கள் அகண்ட சச்சிதானந்த ரூபமான அவனது திருவடி கமலத்தை அடைந்து இன்புறுகிறார்கள். (17)

ஸ்ரீ லக்ஷ்மீநரஸிம்ஹ கருணாரஸ ஸ்தோத்ரம் முற்றும்.

॥ श्रीः ॥

# ॥ श्रीलक्ष्मीनृसिंहपञ्चरत्नम् ॥

## ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ பஞ்சரத்னம்

*[ஸ்ரீமத் சங்கரபகவத் பாதாசார்யார் தன்னுடைய மனதையே ஸம்போதனம் செய்யும் வியாஜத்தினல் பரம சிரேயஸ் வேண்டுமென்று அபேக்ஷிக்கும் யாவரும் ஸ்ரீ பகவானுடைய பாதாரவிந்தத்தை பஜித்தேயாகவேண்டுமென்றும் அவ் விதம் பஜிப்பதில் எவ்வித காமனையும் இருக்கக் கூடாதென்றும் வாஸ்தவத்தில் கவனித்துப் பார்த்தால் உலகத்தில் காமனைக்கு உரித்ததான பதார்த்தமே கிடையாதென்றும் வற்புறுத்தி இந்த ஸ்தோத்ரத்தில் உபதேசிக்கிருர்.]*

**त्वत्प्रभुजीवप्रियमिच्छसि चेन्नरहरिपूजां कुरु सततं**
**प्रतिबिम्बालंकृतिधृतिकुशलो बिम्बालंकृतिमातनुते ।**
**चेतोभृङ्ग भ्रमसि वृथा भवमरुभूमौ विरसायां**
**भज भज लक्ष्मीनरसिंहानघपदसरसिजमकरन्दम् ॥ १ ॥**

*த்வத்ப்ரபுஜீவப்ரியமிச்சஸி சேத் நரஹரிபூஜாம் குரு ஸததம்*
*ப்ரதிபிம்பாலங்க்ருதித்ருதிகுஶலோ பிம்பாலங்க்ருதி மாதநுதே ।*
*சேதோப்ருங்க ப்ரமஸி வ்ருதா பவமருபூமௌ விரஸாயாம்*
*பஜ பஜ லக்ஷ்மீநரஸிம்ஹாநகபதஸரஸிஜமகரந்தம் ॥*

**चेतोभृङ्ग**-ஹே மனஸாகிற வண்டே, **विरसायां**-எவ்வித ஸாரமுமில்லாத, **भवमरुभूमौ**-ஸம்ஸாரமாகிற பாலைவனப் பிரதேசத்தில், **वृथा**-வீணுக, **भ्रमसि**-அலைகிருய், **लक्ष्मीनरसिंहानघपदसरसिज-मकरन्दं**-லக்ஷ்மீ தேவி ஸமேதரான ஸ்ரீ நரஸிம்ஹருடைய நிர்மலமான பாதமாகிற தாமரையிலிருந்து பெருகும் தேனை, **भज**-ஸேவி, **भज**-ஸேவி, **त्वत्प्रभुजीवप्रियं**-உனக்கு யஜமானனுயிருக்கும் ஜீவாத்மாவிற்கு **इच्छसि चेत्**-கோருகிருயானல், **सततं**-எப்பொழுதும், **नर-**

**हरिपूजां**–நரஸிம்ஹருடைய பூஜையை, **कुरु**–செய். **प्रतिबिम्बालंकृति-धृतिकुशलः**–பிரதிபிம்பத்திற்கு அலங்காரம் செய்வதில் ஸாமர்த்திய முள்ளவன், **बिम्बालंकृतिं**–பிம்பத்திற்கே அலங்காரத்தை, **आतनुते**–செய்வான்.

*வண்டு தேனை அருந்துவதற்காக தேன் சொரியும் புஷ்பங்களைத் தேடியலைவது ஸஹஜம். ஜலமில்லாமல் ஈரப்பசையே யில்லாமல் இருக்கும் பூமியில் செடியுமிராது, புஷ்பமும் இராது. அங்கே போய் சாதாரண வண்டு கூட அலையாது. அப்படி யிருக்க ஸர்வோத்கிருஷ்டமான மனுஷ்ய ஜன்மத்தையடைந்து பகுத்தறிவுடன் விளங்குகிறவன் அவ்விதம் அலைவது நியாய மாகுமா? ஆனால் ஸாமான்ய ஜனங்கள் தன் பகுத்தறிவை இழந்து தன் மனதை எவ்வித பிரயோஜனமுமில்லாத உலக வாழ்க்கையில் வீணாக அலையச்செய்து அதன் மூலமாக ஏதோ ஸுகத்தையடைந்துவிட யத்தனிக்கிறார்கள். அது ஒருநாளும் நடக்கப்போகிறதில்லை. பகவானுடைய பாதாரவிந்தமோ சாசுவதமாக இம்மை, மறுமை, மோக்ஷம் வரை ஸகலவிதமான ஸுகங்களையும் எப்பொழுதும் கொடுத்துக் கொண்டிருக்க ஸித்தமாகவிருப்பதால் மனதை அந்த பாதாரவிந்த ஸேவையில் நிரந்தரமாய் ஏவுவதுதான் வாஸ்தவமான வழி. தவிரவும் ஜீவனுடைய தத்வத்தை விசாரிக்கும்போது சுத்த சைதன்ய ரூபமான பிரஹ்மமே அந்தக்கரணம் என்கிற உபாதியில் பிரதி பிம்பிக்கும்போது ஜீவன் என்ற பெயரை அடைகிறதென்று சொல்லப்படுகிறபடியால், பிரஹ்மத்தைத் தவிர ஜீவனுக்கு தனி ஸத்தை கிடையாது. கண்ணாடியில் பிரதிபலிக்கும் முகத்திற்கு அலங்காரம் செய்ய நினைத்தால் அதற்கு ஒரே வழிதான் உண்டு அதாவது வாஸ்தவமான முகத்திற்கு அலங்காரம் செய்தால் உடனே அந்த அலங்காரம் பிரதிபிம்பத்திலும் தோன்றும். இதை விட்டு விட்டு பிரதிபிம்பத்திற்கே நேரே அலங்காரம் செய்துவிடலாமென்று நினைப்பது வெறும் அசட்டுத்தனம். ஒரு நாளும் ஸாத்தியமாகாது. ஆகையால் பிரதிபிம்பமான ஜீவனுக்கு ஏதேனும் பிரியத்தைச் செய்யவேண்டுமென்று நினைத்தால் பிம்பமாயிருக்கும் பிரஹ்மத்திற்குத்தான் செய்யவேண்டுமே தவிர நேராக ஜீவனுக்கு செய்து விடுவது ஸாத்தியமேயில்லை. பிம்பத் திற்கு அலங்காரம் செய்துவிட்டால் பிரதிபிம்பத்திற்கு அலங்காரம் வேண்டியதில்லையென்று செய்யவும் முடியாது. ஆகையால் பகவானுக்குச் செய்யும் ஸேவை மூலமாகத்தான்*

*ஜீவனுக்கு சிரேயஸ் ஏற்படவேண்டும். அதைவிட்டு ஜீவனுக்கென்று தனியாக பிரயத்தினம் செய்து ஸுகத்தை ஸம்பாதித்து விடலாமென்று நினைப்பது நடக்காத கார்யம். இவ்விதமாக ஜீவ தத்வமிருக்கிறதென்று உணர்ந்து பகவானுடைய பஜனத்திலேயே ஈடுபடவேண்டுமென்று ஸ்ரீமத் ஆசார்யார் உபதேசிக்கிறார். உலகத்தில் ஸகல ஜனங்களும் ஸுகத்தையடையக்கருதி ஸுக ஸாதனங்களைத் தேடி ஸம்பாதிப்பதற்கு பலவித பிரயத்தினங்கள் செய்து வருகிறார்களேயெனுல, அவர்கள் இந்த ஜீவ தத்வத்தை யறியாதவர்கள். தவிரவும் வெளியிலுள்ள பதார்த்தங்களை ஸுக ஸாதனங்களாக எண்ணுவதே பிசகு என்று அடுத்த சுலோகத்தில் காட்டுகிறார்.* (1)

शुक्तौ रजतप्रतिभा जाता कटकाद्यर्थसमर्था चेत्
दुःखमयी ते संसृतिरेषा निर्वृतिदाने निपुणा स्यात् ।
चेतोभृङ्ग भ्रमसि वृथा भवमरुभूमौ विरसायां
भज भज लक्ष्मीनरसिंहानघपदसरसिजमकरन्दम् ॥ २ ॥

*ஶுக்தௌ ரஜதப்ரதிபா ஜாதா கடகாத்யர்த்த ஸமர்த்தா சேத்*
*துக்கமயீ தே ஸம்ஸ்ருதிரேஷா நிர்வ்ருதிதானே நிபுணா ஸ்யாத் ।*
*சேதோப்ருங்க ப்ரமஸி வ்ருதா பவமருபூமௌ விரஸாயாம்*
*பஜ பஜ லக்ஷ்மீநரஸிம்ஹாநகபதஸரஸிஜமகரந்தம் ॥*

**चेतोभृङ्ग** மனமாகிற வண்டே, **विरसायां**-ஸாரமற்ற, **भवमरुभूमौ**-ஸம்ஸாரமென்ற பாலைவனப் பிரதேசத்தில, **वृथा**-வீணாக, **भ्रमसि**-அலைகிறாய். **लक्ष्मीनरसिंहानघपदसरसिजमकरन्दं**-லக்ஷ்மீ நரஸிம்ஹருடைய நிர்மலமான பாத பத்மத்திலிருந்து பெருகும தேனை, **भज**-ஸேவி, **भज**-ஸேவி. **शुक्तौ**-சிப்பியில, **जाता**-ஏற்படும், **रजतप्रतिभा**-வெள்ளி யென்ற தோற்றம், **कटकाद्यर्थसमर्था चेत्**-வளையல முதலான பதார்த்தங்களைச் செய்வதற்குத தகுதியுளளதாக இருககுமேயானுல், **दुःखमयी**-துக்கமயமாயிருக்கிற, **एषा**-இந்த, **संसृतिः**-ஸம்ஸாரமானது, **ते**-உனக்கு, **निर्वृतिदाने**-ஸுகத்தைக் கொடுக்கும் விஷயத்தில, **निपुणा**-சக்தியுள்ளதாக, **स्यात्**-ஏற்படலாம்.

வெளிப்பொருள்களிலிருந்து ஸுகம் கிடைப்பதாக நினைப்பதே வெறும் பிரமம். அவைகளுக்குத் தனித்து ஸத்தையும் பிரகாசமுமில்லாமலும் வெறும் தோற்றமாகவும் ஜடமாகவுமே அவைகள் வாஸ்தவத்தில் இருந்து வருவதால் அவைகளிலிருந்து ஆனந்தம் எப்படி ஏற்படமுடியும்? பிரஹ்மத்திலுள்ள ஸத்தைக்கும் பிரகாசத்திற்கும் நேர்மாறாக பிரபஞ்சத்தின் தத்வம் தோற்றமாகவும் ஜடமாகவும் இருப்பதுபோலவே பிரஹ்மத்திலுள்ள ஆனந்தத்திற்கு நேர்மாறான துக்கமேதான் பிரபஞ்சத்தின் தன்மையாகும் அப்படியிருக்க, அதிலுள்ள பதார்த்தங்களிலிருந்து ஸுகத்தை ஸம்பாதித்து விடலாமென்று நினைப்பது கொஞ்சமேனும் நியாயமில்லை. தரையில் உள்ள கிளிஞ்சலைப்பார்த்து நாம் எவ்வளவு திடமாக வெள்ளிதான் என்று நினைத்துக்கொண்டாலும், அது வெள்ளிதான் என்ற தீர்மானத்துடன் எவ்வளவு ஆவலுடன் அதைக் கைப்பற்றினாலும் அது தன் சொந்த ஸ்வரூபமான கிளிஞ்சல் என்ற தன்மையை விட்டு நமக்காக வெள்ளியாக ஆகிவிடுமா? அதில் தோன்றும் வெள்ளியைக்கொண்டு ஏதேனும் நகை செய்யமுடியுமா? அப்படிபேதான் வெறும் தோற்றமாயிருக்கிற பிரபஞ்சத்திலிருந்து ஸுகத்தையடையலாமென்று நினைப்பதும். மேலும் அவ்விதம் நினைத்து பிரவிருத்தி செய்தால் ஸுகத்தையடையவில்லை யென்பதுடன் நிற்காமல் துக்கத்தையும் அனுபவிக்கும்படி ஏற்படும். ஆகையால் வாஸ்தவமாக நித்யானந்த ஸ்வரூபியாயிருக்கிற பகவானை ஸேவிப்பதுதான் ஸுகத்தையடைவதற்கு ஸாதனம்.

(2)

आकृतिसाम्याच्छाल्मलिकुसुमे स्थलनलिनत्वभ्रममकरोः
गन्धरसाविह किमु विद्येते विफलं भ्राम्यसि भृशविरसेऽस्मिन् ।
चेतोभृङ्ग भ्रमसि वृथा भवमरुभूमौ विरसायां
भज भज लक्ष्मीनरसिंहानघपदसरसिजमकरन्दम् ॥ ३ ॥

ஆக்ருதிஸாம்யாத் சால்மலிகுஸுமே ஸ்தலநளிநத்வ
ப்ரமமகரோ:
கந்தரஸாவிஹ கிமு வித்யேதே விபலம் ப்ராம்யஸி
ப்ருசவிரஸேऽஸ்மின் ।
சேதோப்ருங்க ப்ரமஸி வ்ருதா பவமருபூமௌ
விரஸாயாம்
பஜ பஜ லக்ஷ்மீநரஸிம்ஹாநகபதஸரஸிஜமகரந்தம் ॥

-மனமாகிற வண்டே, **विरसायां**-ஸாரமில்லாத, **भवमरुभूमौ**-ஸம்ஸார மென்ற பாலைவனப் பிரதேசத்தில், **वृथा**-வீணுக, **भ्रमसि**-அலைகிருய், **लक्ष्मीनरसिंहानघपदसरसिजमकरन्दं** – லக்ஷ்மீ நரஸிம்ஹருடைய நிர்மலமான பாதாரவிந்தத்திலிருந்து பெருகும் தேனை, **भज**-ஸேவி, **भज**-ஸேவி. **शाल्मलिकुसुमे**-சால்மலி விருக்ஷத்தின் புஷ்பத்தில், **आकृतिसाम्यात्**-உருவம ஸமானமாயிருக்கும் காரணத்தினுல், **स्थलनलिनत्वभ्रमं**-தரையில் புஷ்பிக்கும் பத்மமென்ற பிரமத்தை, **अकरोः**-அடைந்தாய், **इह**-இந்த சாலமலி புஷ்பத்தில், **गन्धरसौ**-( பத்மததிற்கு ஏற்பட்ட ) வாஸனையாவது ருசியாவது, **विद्येते किमु**-இருக்குமோ ? , **भृशविरसे**-மிகவும் ஸாரமற்ற, **अस्मिन्**-இதில், **विफलं**-எவ்வித பிரயோஜனமுமன்னியில், **भ्राम्यसि**-சுற்றிச் சுற்றி வருகிருய்.

*நாம் ஒரு பொருளை வேறொரு பொருளாக நினைத்ததற்காக அப்பொருள் நாம் நினைக்கிற பொருளாக மாறிவிடாது நாம் நினைக்கிற பொருளிலுள்ள குணங்கள் இப்பொருளில் ஒருக்காலும் வராது என்பதற்கு வேறு திருஷ்டாந்தம் இங்கு கொடுக்கப்படுகிறது. சால்மலிப் பூவில் நறுமணமோ நல்ல ரஸமோ கிடையாது மிகவும் விரஸமானது. நிலத் தாமரை மலரில் நல்ல வாசனையும் நல்ல ரஸமும் உண்டு. இந்த சால்மலிப் பூவை நிலத்தாமரை என்று ப்ராந்தியால் எண்ணியதற்காக நல்ல ரஸமும் நல்ல வாஸனையும் சால்மலிப் பூவில் வந்து விடுமா? ஆகவே விரஸமான சால்மலி மலரை நிலத்தாமரை என்று எண்ணி அதைச் சுற்றிச் சுற்றி வரும் வண்டிற்கு கொஞ்சம்கூட மணமோ, வாஸனையோ கிடைக்காமல் முயற்சி எல்லாம் வீணுகத் தான் ஆகும் அதுபோல் இப்பிரபஞ்ச வாழ்க்கையிலும் நாம் கொஞ்சம்கூட உண்மையான ஸுகத்தைப் பெறமுடியாது. பகவத்சரணத்தைப்பற்றிக் கொண்டால்தான் நித்யானந்தத்தைப் பெறமுடியும்.* (3)

**स्रक्चन्दनवनितादीन्विषयान्सुखदान्मत्वा तत्र विहरसे**
**गन्धफलीसदृशा ननु तेऽमी भोगानन्तरदुःखकृतः स्युः ।**
**चेतोभृङ्ग भ्रमसि वृथा भवमरुभूमौ विरसायां**
**भज भज लक्ष्मीनरसिंहानघपदसरसिजमकरन्दम् ॥ ४ ॥**

*ஸ்ரக்சந்தனவநிதாதீன் விஷயான் ஸுகதான் மத்வா*
*தத்ர விஹரஸே*
*கந்தபலீஸத்ருஶா நநு தேऽமீ போகாநந்தரதுக்கக்ருத:*
*ஸ்யு:।*
*சேதோப்ருங்க ப்ரமஸி வ்ருதா பவமருபூமௌ*
*விரஸாயாம்*
*பஜ பஜ லக்ஷ்மீநரஸிம்ஹாநகபதஸரஸிஜமகரந்தம் ॥*

**चेतोभृङ्ग**-மனமாகிற வண்டே, **विरसायां**-ஸாரமற்ற, **भवमरुभूमौ**-ஸம்ஸாரமாகிற பாலைவனப் பிரதேசத்தில, **वृथा**-வீணாக, **भ्रमसि**-அலைகிறாய். **लक्ष्मीनरसिंहानघपदसरसिजमकरन्दं**-லக்ஷ்மீ நரஸிம்ஹருடைய நிர்மலமான பாதாரவிந்தத்தில் பெருகும் தேனை, **भज**-ஸேவி, **भज**-ஸேவி, **स्रक्चन्दनवनितादीन्**-புஷ்பமாலை, சந்தனம், ஸ்திரீ முதலான, **विषयान्**-விஷயங்களை, **सुखदान्**-ஸுகத்தைக்கொடுப்பவைகளாக, **मत्वा**-நினைத்து, **तत्र**-அவற்றில், **विहरसे**-சுற்றி வருகிறாய். **ते**-அந்த, **अमी**-இவைகள், **भोगानन्तरदुःखकृतः**-அனுபவித்த பிறகு துக்கத்தையே கொடுப்பவைகளாய், **गन्धफलीसदृशाः**-சம்பக புஷ்பம் மாதிரி, **ननु स्युः**-இருக்குமல்லவா ?

*விஷய போகங்களில் தாத்காலிகமாக ஏதோ ஸுகம் ஏற்படுவதாகத் தோன்றின போதிலும் அது கடைசியில் துக்கத்திலேயே கொண்டு விடுமென்பது அனுபவ ஸித்தம். வாஸனை நன்றாயிருக்கிறதென்று சம்பக புஷ்பத்தை வெகுநேரம் முகர்ந்து கொண்டிருந்தால் மூக்கில் ரக்தம் வந்து விடுமென்று சொல்வார்கள். மேலும் சம்பக புஷ்பத்தின் வாஸனையால் இழுக்கப்பட்டு அவ்விருக்ஷத்தின் ஸமீபத்தில் போனால் அதில் ஸாதாரணமாக வஸித்துவரும் ஸர்ப்பத்தினால் தீண்டப்படும்படியும ஏற்படலாம். விஷய போகத்தில் ஸுகமிருப்பதாக வைத்துக்கொண்டாலும் கூட கடைசியில் துக்கமே ஏற்படுவதால் அதைத் தேடுவது பிரயோஜனமற்றதென்பது மாத்திரமல்ல அனர்த்தகரமும்கூட. பகவத்ஸேவை ஒன்றுதான் துக்க ஸம்பந்தமன்னியில் சாசுவதமான ஸுகத்தைக் கொடுக்கும்.*

(4)

तव हितमेकं वचनं वक्ष्ये शृणु सुखकामो यदि सततं
स्वप्ने दृष्टं सकलं हि मृषा जाग्रति च स्मर तद्वदिति ।

चेतोभृङ्ग भ्रमसि वृथा भवमरुभूमौ विरसायां
भज भज लक्ष्मीनरसिंहानघपदसरसिजमकरन्दम् ॥ ५ ॥

*தவ ஹிதமேகம் வசநம் வக்ஷ்யே ச்ருணு ஸுககாமோ
யதி ஸததம்
ஸ்வப்நே த்ருஷ்டம் ஸகலம் ஹி ம்ருஷா ஜாக்ரதி ச ஸ்மர*

*சேதோப்ருங்க ப்ரமஸி வ்ருதா பவமருபூமௌ விரஸாயாம்
பஜ பஜ லக்ஷ்மீநரஸிம்ஹாநகபதஸரஸிஜமகரந்தம் ॥*

**चेतोभृङ्ग**–மனமாகிற வண்டே, **विरसायां**–எவ்வித ரஸமுமற்ற, **भवमरुभूमौ**–ஸம்ஸாரமாகிற பாலைவனப் பிரதேசத்தில, **वृथा**–வீணாக, **भ्रमसि**–அலைகிறாய். **लक्ष्मीनरसिंहानघपदसरसिजमकरन्दं**–லக்ஷ்மீ நரஸிம்ஹருடைய நிர்மலமான பாதபத்மங்களிலிருந்து பெருகும் தேனை, **भज**–ஸேவி. **भज**–ஸேவி. **तव**–உனக்கு, **हितं**–நன்மை பயக்கக்கூடியதாக, **एकं**–ஒரு, **वचनं**–வார்த்தையை, **वक्ष्ये**–சொல்கிறேன. **सततं**–எப்பொழுதும, **सुखकामो यदि**–ஸுகத்தில ஆசையுள்ளதாக நீ இருந்தால, **शृणु**–காதுகொடுத்துக்கேளு. **स्वप्ने**–ஸ்வப்னம் அனுபவிக்கும் ஸமயம், **दृष्टं**–பார்க்கப்பட்ட, **सकलं**–எல்லாமே, **मृषा हि**–பொய், என்பது பிரஸித்தம். அப்படியே, **जाग्रति च**–விழித்துக் கொண்டிருக்கும் போது கூட ( பார்க்கப்படும் எல்லாம் ), **तद्वत्**–அதேமாதிரி (பொய்) **इति**–என்று, **स्मर**–ஞாபகத்தில் வைத்துக்கொள.

*தூங்கும்போது ஸ்வப்னம் காண்பதில் நாம் நேரில் பார்ப்பதாகவே தோன்றும் பதார்த்தங்கள் வாஸ்தவத்தில் கிடையவே கிடையாது என்கிற விஷயம் யாவரும் அறிந்ததே. ஸ்வப்ன காலத்தில் அப்பதார்த்தங்கள் ஸுகத்தைக் கொடுத்தனவேயென்று நினைத்து யாரேனும் விழித்துக்கொண்ட பிற்பாடு அவைகளைத் தேடியலைவதுண்டா? அப்பதார்த்தங்கள் இருப்பதாகத் தோன்றும் காலத்திலும் வாஸ்தவமாக இருந்திருப்பதில்லை யென்ற உறுதி நமக்கிருப்பதினால் அவைகளை ஸம்பாதிக்கப் பிரயத்தினம் செய்கிறதில்லை. அப்படியேதான் ஜாக்கிரத் காலத்தில் நாம் நேரில பார்த்து அனுபவிப்பதாக நினைத்துக்கொண்டிருக்கும் பதார்த்தங்கள் யாவும நாம் அக்ஞான*

மாகிற பெரிய தூக்கத்திற்கு வசப்பட்[illegible]டிருக்கிற வரையில் தான் தோன்றும். அஞ்ஞானம் நிவ்ருத்தியாகி நாம் விழித்துக்கொண்டு நம் ஸ்வயம்பிரகாசமான ஆத்ம நிலையை அடைந்துவிட்டால் இத்தோற்றம் யாவற்றும் வாஸ்தவமில்லையென்ற உறுதியேற்பட்டு அத்தோற்றமுமே மறைந்துவிடும். இந்த தத்துவத்தை எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருந்தோமேயானல் உலகத்தில் எவ்வளவு ரமணீயமான பதார்த்தமாகவிருந்தாலும் அது நம் மனதை இழுக்காது. எவ்வளவு பயங்கரமான பதார்த்தமாகவிருந்தாலும் அது நம்மை பயமுறுத்தாது. உலகத்தில் விருப்பம், வெறுப்பு, இவைகளைக் கொடுக்கக்கூடிய பதார்த்தங்கள் எல்லாம் கொஞ்சமேனும் வாஸ்தவமல்லவென்ற எண்ணம் ஏற்பட்டவுடன் வண்டுபோல் அங்குமிங்கும் அலையும் மனஸ் நிச்சலமாகி சாசுவதமான ஆனந்த நிலையை அடைந்துவிடும். ஸதா அலைந்துகொண்டிருக்கும் மனதை நிச்சலமாகச் செய்யவேண்டுமானல் அதை ஓரிடத்தில் கட்டி வைக்கவேண்டும். அந்த கட்டி வைக்க வேண்டிய இடம் பகவானுடையபாதாரவிந்தமேயென்று ஸ்ரீமத் ஆசார்யார் நமக்கு உபதேசிக்கிறார். (5)

ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ பஞ்சரத்னம் முற்றிற்று.

॥ श्रीः

# ॥ श्रीरामभुजङ्गप्रयातस्तोत्रम् ॥

## ராமபுஜங்க ப்ரயாத ஸ்தோத்ரம்

[நாம் பூஜிக்கும் தேவதா மூர்த்திகள் எல்லாமே பரப்ரஹ்மத்தின் ரூபபேதங்கள் தான் என்பது அத்வைத சாஸ்திர ஸித்தாந்தம். ஒரே ப்ரஹ்மம் நிர்குணமாயிருந்தாலும் மாயையுடன் ஸம்பந்தப்படும்பொழுது அதன் குணங்களால் ப்ரஹ்மா விஷ்ணு, ருத்ரன் முதலான பல உருவங்களாக ஆகிறது. ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யாள் எந்த தேவதா மூர்த்தியை ஸ்தோத்ரம் செய்ய ஆரம்பித்தாலும் அதை பரப்ரஹ்மமாகவே வர்ணிப்பார்கள். அதிலுள்ள பரதத்வம் அவருக்கு விளங்கும் ஸாதகனுக்கு அவனுடைய ப்ராசீன ஸம்ஸ்காரத்தையனுஸரித்து ஏதாவது ஒரு இஷ்ட தேவதையினிடம் விசேஷ ஈடுபாடு ஏற்படுவதற்காக அந்த மூர்த்தியை பரப்ரஹ்மமாகவும் ஸர்வேச்வரனாகவும், ஸிருஷ்டி-ஸ்திதி-ஸம்ஹாரகாரணனாகவும், எல்லாம் அவருக்கு உட்பட்டதாகவும் வர்ணிப்பார்கள். இந்த ரீதியில் ஸ்ரீமந் நாராயணனுடைய அவதாரமான ஸ்ரீராமசந்திரமூர்த்தியை வர்ணிக்கும் 29 சுலோகங்கள் கொண்ட ராம புஜங்க ப்ரயாத ஸ்தோத்திரத்தில் ஆரம்பத்திலேயே ஸச்சிதானந்த பரப்ரஹ்மமாக ராமரை வர்ணிக்கிறார்.

"रमन्ते योगिनोऽनन्ते सदानन्दे चिदात्मनि ।
इति रामपदेनासौ परं ब्रह्माभिधीयते ॥"

என்ற ப்ரஸித்தமான சுலோகம் ராமனை அநந்தமான ஸச்சிதானந்த ப்ரஹ்மமாகக் கூறுகிறது "யோகிகள் அதாவது வெளி விஷயங்களில் போக விடாமல் மனதை அடக்கியவர்கள் ஸச்சிதானந்த ப்ரஹ்மத்தில் ரமிக்கிறார்கள் இன்புறுகிறார்கள். யோகிகள் ரமிப்பதால் ஸச்சிதானந்த ப்ரஹ்மத்திற்கு ராமன் என்று பெயர்" இது இந்த சுலோகத்தின் பொருள் பின்னால் சில சுலோகங்களிலும் ராமனை ப்ரஹ்மமாகவும் ஸர்வேசுவரனாகவும் வர்ணிக்கிறார். இந்த ஸ்தோத்திரத்தில் தீவ்ரராம பக்தராக ஆசார்யாள் காக்ஷியளிக்கிறார். ராம நாம மஹிமையையும் ராமாயண மகிமையையும் நடுவில் கூறுகிறார். கல்லாக அஹல்யை ஸ்ரீராமரின் பாத தூளிபட்டு பிழைத்

தெழுந்தாள் என்பதையும் காட்டுகிறு ராமபக்தன் ராமசந்த்ர மூர்த்தியில் ஐக்யமடைகிறுன் என்பதை பலச்ருதியில் சொல்கிறுர்.]

**विशुद्धं परं सच्चिदानन्दरूपं**
**गुणाधारमाधारहीनं वरेण्यम् ।**
**महान्तं विभान्तं गुहान्तं गुणान्तं**
**सुखान्तं स्वयं धाम रामं प्रपद्ये ॥ १ ॥**

*விசுத்தம் பரம் ஸச்சிதாநந்தரூபம்*
*குணுதாரமாதாரஹீநம் வரேண்யம் ।*
*மஹாந்தம் விபாந்தம் குஹாந்தம் குணுந்தம்*
*ஸுகாந்தம் ஸ்வயம்தாம ராமம் ப்ரபத்யே ॥*

**विशुद्धं**–மிகப்பரிசுத்தனும், **परं**–எல்லாவற்றிற்கும் மேலானவனும், **सच्चिदानन्दरूपं**–ஸச்சிதானந்த ஸ்வரூபனும், **गुणाधारं**–எல்லா குணங்களுக்கும் இருப்பிடமானவனும், **आधारहीनं**–தனக்கு வேறு ஆச்ரயமற்றவனும், **वरेण्यं**–போற்றத்தக்கவனும், **महान्तं**–மிகப் பெரியவனும், **गुहान्तं विभान्तं**–ஹிருதய குகைக்குள் விளங்குகிறவனும், **गुणान्तं**–குணங்களின் முடிவாக இருப்பவனும், **सुखान्तं**–ஆநந்தத்தின் எல்லையாக இருப்பவனும், **स्वयं धाम**–ஸ்வயம் ஜ்யோதி ஸ்வரூபனும் உள்ள, **रामं**–ராமனை, **प्रपद्ये**–சரணமடைகிறேன்.

*ஆணவம் முதலிய மும்மலங்களற்றதால் என்றும் அஸங்கனுக இருப்பதால் மிகத் தூய்மையுள்ளவனும் சிறந்தவனுகவும் பரபிரும்ம ரூபமாதலால் ஸச்சிதாநந்த (அழிவற்ற அறிவு ஆனந்த) மயனுகவும் அனந்த கல்யாண குணங்கள் நிரம்பியவனும் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணமயமான மூலபிரகிருதிக்கும் ஆதாரமாக இருப்பவனும் எல்லாவற்றிற்கும் மூல ஆதாரமாக தான் இருந்தும் தனக்கு வேருறு ஆதாரமற்றவனும் ஸர்வ வல்லமையுள்ளதால், யாவராலும் ஸேவிக்கத்தக்கவனும் ஸர்வ வியாபகனும் பிராணிகளின் ஹிருதய குகையில் ஆன்மாவாக விளங்குபவனும் முக்குணங்களுக்கும் விலகி அப்பால் நிற்பவனும் ஆனந்தத்தின் எல்லையாக இருப்பவனும் அறிவுச்சுடர் மயமாதலால் தானே என்றும் பிரகாசிப்பவனுமான ஸ்ரீராமனை சரணமடைகிறேன்.*

*ப்ரஹ்மம் ஸச்சிதாநந்தரூபம், சுத்தம் தோஷமற்றது வியாபகம் அதுவே அதிஷ்டானமாக எல்லாவற்றையும் தாங்கிக்கொண்டிருப்பதால் இதற்கு ஆதாரம் வேறொன்றுமில்லை. உண்மையில் ப்ருகிருதி குணங்களொன்றும் அதில் கிடையாது நாம் காணும் ஆனந்தங்களுக்கெல்லாம் எல்லையாக இருப்பது. அதற்குமேல் பட்ட ஆனந்தம் கிடையாது. பேரானந்த ரூபம். ஸ்வயம் ஜ்யோதி. தானே பிரகாசிக்கிறது. அதை பிரகாசப்படுத்த வேறு பொருளில்லை இந்த ப்ரஹ்மமேதான் ஸத்வரஜஸ்தமோ குண ரூபமான மாயையை அவலம்பித்து எல்லா குணங்களையும் கைக்கொண்டு ராமாவதாரம் செய்து யாவராலும் போற்றப்படுகிறார். எல்லா பிராணிகளுடைய ஹிருதயத்திலும் ஆத்மாவாக விளங்குவதும் ராமபிரஹ்மமே. இந்த ராமருடைய உண்மை தத்வம் விளங்க அவரை சரணமடைகிறேன்.* (1)

शिवं नित्यमेकं विभुं तारकाख्यं
सुखाकारमाकारशून्यं सुमान्यम् ।
महेशं कलेशं सुरेशं परेशं
नरेशं निरीशं महीशं प्रपद्ये ॥ २ ॥

*ஶிவம் நித்யமேகம் விபும் தாரகாக்யம்*
*ஸுகாகாரமாகாரஶூந்யம் ஸுமான்யம் ।*
*மஹேஶம் கலேஶம் ஸுரேஶம் பரேஶம்*
*நரேஶம் நிரீஶம் மஹீஶம் ப்ரபத்யே ॥*

**शिवं**–மங்களம் தருபவனும், **नित्यं**–அழிவற்றவனும், **एकं**–ஒருவனும், **विभुं**–எங்குமுள்ளவனும, **सुखाकारं**–ஆனந்தத்தையே வடிவமாகக்கொண்டவரும், **आकारशून्यं**-(வேறு) உருவமற்றவரும், **सुमान्यं** நன்கு கொண்டாடத்தககவரும, **महेशं**–மஹேசவரனும, **कलेशं**–கலைகளுக்கு அதிபதியும, **सुरेशं**–தேவர்களுக்குத்தலைவனும், **परेशं**–சிறந்த ஈசனும், **नरेशं**–மனிதர்களுக்கு ஈசனும், **निरीशं**–தனக்கு வேறு தலைவனற்றவனுமான, **तारकाख्यं**–ராமன என்று பெயருளள, **महीशं**–சக்ரவர்த்தியை, **प्रपद्ये**–சரணமடைகிறேன.

*மங்கள ஸ்வரூபனாகவும் அழிவற்றவனாகவும் ஒப்புயர்வற்றவனாகவும் ஸர்வவியாபகனாகவும் அழிவற்ற அகண்ட ஸுகஸ்வரூபி*

யாகவும் வேறு உருவமெதுவும் உண்மையில் இல்லாதவனாகவும் எல்லோராலும் நன்கு பூஜிக்கத்தக்கவனும் உலகம் யாவற்றிற்கும் உயர்ந்த அடக்கி ஆளும் ஈசுவரனாகவும் எல்லா கலைகள் வித்யைகளுக்கும் அதிபதியாயும் தேவர்களுக்கும் அதிபதியாயும் ஒப்புயர்வற்ற சிறந்த ஈசனாயும் எல்லா மனிதர்களுக்கும் அதிபதியும் தனக்கு மேற்பட்ட மற்றொரு ஈசனற்றவனாயும் ஸம்ஸாரத்தைத் தாண்டி வைப்பதால் தாரகமான ராமன் என்று பெயருள்ளவனுமான பூலோக சக்ரவர்த்தியை சரணம் அடைகிறேன்.

தாரகம் என்பது ப்ரணவத்தைக் குறிப்பதுபோல் ராம நாமத்தையும் குறிப்பதாக உபநிஷத்தில் கூறப்படுகிறது. (2)

यदावर्णयत्कर्णमूलेऽन्तकाले
शिवो राम रामेति रामेति काश्याम् ।
तदेकं परं तारकब्रह्मरूपं
भजेऽहं भजेऽहं भजेऽहं भजेऽहम् ॥ ३ ॥

யதாவர்ணயத் கர்ணமூலேऽந்தகாலே
ஶிவோ ராம ராமேதி ராமேதி காச்யாம் ।
ததேகம் பரம் தாரகப்ரஹ்மரூபம்
பஜேऽஹம் பஜேऽஹம் பஜேऽஹம் பஜேऽஹம் ॥

**काश्यां**-காசீக்ஷேத்திரத்தில, **अन्तकाले**-ஆயுள் முடியும் சமயத்தில், **कर्णमूले**-(பிராணிகளின) காதிற்குள, **शिवः**-பரமசிவன், **राम रामेति रामेति**-ராம ராம, ராம, என்று, **यत्**-எந்த தத்வததை, **आवर्णयत्**-உபதேசித்தாரோ, **तत् एकं**-அந்த ஒன்றான, **परं**-எல்லாவற்றிலும் மேலான, **तारकब्रह्मरूपं** - ஸமஸாரக்கடலைததாண்டுவிக்கும் ப்ரஹ்ம ஸ்வரூபமான ஸ்ரீ ராமரை, **अहं**-நான, **भजे**-ஸேவிக்கிறேன். **अहं**-நான், **भजे**-ஸேவிக்கிறேன், **अहं**-நான், **भजे**-ஸேவிக்கிறேன். **अहं**-நான், **भजे**-ஸேவிக்கிறேன.

காசியில் பிராணிகள் மரிக்கும் சமயம் அவைகளின் காதில் சிவபெருமான் ராம ராம ராம என்று எப்பொருளை உபதேசிக்கிறாரோ, அடபொருளாக சிறந்துவிளங்குபவரும் ஒப்புயர்வற்ற தனித்த ஒரே பொருளாக விளங்குபவரும் ஸம்ஸாரக்கடலி

விருந்து ஜீவராசிகளைக் கரையேற்றுவதால் துதிக்கப்படும் பரப்ரம்ம ஸ்வரூபருமான ஸ்ரீராமனை நான் ஸேவிக்கிறேன், நான் ஸேவிக்கிறேன், நான் ஸேவிக்கிறேன் நான் ஸேவிக்கிறேன் (பக்தியின் மேலீட்டால் பன்முறை கூறுகிறார் இடைவிடாது கட்டாயம் ஸேவிக்கிறேன் என்று கருத்து)

"अत्र हि जन्तोः प्राणेषूत्क्रममाणेषु रुद्रस्तारकं ब्रह्म व्याचष्टे"

मुमूर्षोर्दक्षिणे कर्णे यस्य कस्यापि वा स्वयम् ।
उपदेक्ष्यसि मन्मन्त्रं स मुक्तो भविता शिव ॥

என்று ராமதாபிந்யுபநிஷத்தில் "அவிமுக்தமென்னும் காசி க்ஷேத்ரத்தில் மரிக்கும் பிராணிகளுக்கு பரமசிவன் தாரக ப்ரஹ்மத்தையும் தாரகமான ஸ்ரீ ராமநாமத்தையும் உபதேசிக்கிறார்" என்று கூறப்பட்டிருக்கிறது. ராமமந்திரமே தாரகம் என்ற பெயருள்ளது. ஸம்ஸாரக்கடலைத்தாண்டும்படி செய்து அக்கரை சேர்ப்பதால் தாரகம் என்று பெயர். ராமமந்திரத்திற்கும் ப்ரணவம் என்ற பெயருண்டு. (3)

महारत्नपीठे शुभे कल्पमूले
सुखासीनमादित्यकोटिप्रकाशम् ।
सदा जानकीलक्ष्मणोपेतमेकं
सदा रामचन्द्रं भजेऽहं भजेऽहम् ॥ ४ ॥

மஹாரத்னபீடே ஶுபே கல்பமூலே
ஸுகாஸீநமாதித்யகோடிப்ரகாஶம் ।
ஸதா ஜானகீலக்ஷ்மணோபேதமேகம்
ஸதா ராமசந்த்ரம் பஜேऽஹம் பஜேऽஹம் ॥

**कल्पमूले**–கல்ப விருக்ஷத்தினடியில், **शुभे**–மங்கள கரமான, **महारत्नपीठे**–சிறந்த ரத்ன ஸிம்மாஸனத்தில், **सुखासीनं**–ஸுகமாக அமர்ந்திருப்பவரும், **आदित्यकोटिप्रकाशं**-ஒரே சமயத்தில உதித்தகோடி ஸூரியர்களின் காந்திபோல காந்தி உள்ளவரும், **सदा**–எப்பொழுதும், **जानकीलक्ष्मणोपेतं**–ஸீதை லக்ஷ்மணர் இவர்களுடன் கூடியவரும, **एकं**–ஒப்புயர்வற்று விளங்குபவருமான, **रामचन्द्रं**–ஸ்ரீ ராமசந்திரனை,

**सदा**-எப்பொழுதும், **अहं**-நான், **भजे**-ஸேவிக்கிறேன், **अहं**-நான், **भजे**

*கற்பக விருக்ஷத்தினடியில் அமைக்கப்பட்டுள்ள மங்களகரமான உயர்ந்த ரத்னபீடத்தில் ஸுகாஸனம் என்னும் யோகாஸனத்தில் அமர்ந்திருப்பவரும் கோடி சூரியர்களுக்கொப்பாக ப்ரகாசிப்பவனும் எப்பொழுதும் சீதாபிருட்டியோடும் லக்ஷ்மணனோடும் சேர்ந்து இருப்பவனும் ஒப்புயர்வற்ற தலைவனாக விளங்குபவனுமான ஸ்ரீ ராம சந்திரனை எக்காலமும் நான் சேவிக்கிறேன் நான் சேவிக்கிறேன் (பக்தியின் மேலீட்டால் பன்முறை ஆதரவுடன் கூறல்) "वैदेहीसहितं" என்ற பிரஸித்தமான சுலோகத்திலும் கல்பவிருக்ஷத்தினடியில் ரத்னாஸனத்தில் ஸீதையுடன் அமர்ந்திருப்பது வர்ணிக்கப்பட்டிருக்கிறது.* (4)

**क्वणद्रत्नमञ्जीरपादारविन्दं**
**लसन्मेखलाचारुपीताम्बराढ्यम् ।**
**महारत्नहारोल्लसत्कौस्तुभाङ्गं**
**नदच्चञ्चरीमञ्जरीलोलमालम् ॥ ५ ॥**

*க்வணத்ரத்னமஞ்ஜீரபாதாரவிந்தம்*
*லஸன்மேகலாசாருபீதாம்பராட்யம் ।*
*மஹாரத்னஹாரோல்லஸத்கௌஸ்துபாங்கம்*
*நதச்சஞ்சரீமஞ்ஜரீலோலமாலம் ॥*

**क्वणद्रत्नमञ्जीरपादारविन्दं** – ஒலிக்கின்ற ரத்னங்கள் பதித்த கொலுசுகளுடன் கூடிய தாமரைபோன்ற திருவடிகளை உடையவரும், **लसन्मेखला**–பிரகாசிக்கும் அரைஞாணிறல், **चारु**–அழகிய, **पीताम्बराढ्यं** – பீதாம்பரத்தோடு கூடியவரும், **महारत्नहारोल्लसत्कौस्तुभाङ्गम्** -சிறந்த ரத்னமாலையில் விளங்கும் கௌஸ்துப மணியுடன் கூடிய சரீரமுள்ளவரும், **नदच्चञ्चरी**-ரீங்காரம் செய்யும் வண்டுகளுடன் கூடிய, **मञ्जरी**–பூங்கொத்துக்களோடு, **लोल**–அசைந்தாடுகின்ற, **मालं**-மலர் மாலையணிந்தவருமான (ஸ்ரீ ராமரை நான் ஸேவிக்கிறேன்.)

*ஒலிக்கும், ரத்னங்கள் பதித்த தண்டைக் கொலுசுளால் அலங்கரிக்கப்பட்ட பாதகமலங்களை உடையவரும், ஒலிக்கும் ஸுவர்ணமய கச்சைப்பட்டையால் (ஒட்டியாணத்*

திஞல்) அழகிய, பீதாம்பரமணிந்தவரும் உயர்ந்த ரத்னஹாரத்தின் நடுநாயக மணியாக விளங்கும் கௌஸ்துப ரத்தினத்துடன் விளங்கும் திவ்ய உருவத்தை உடையவரும் தேனிற்குவந்து ரீங்காரம் செய்யும் வண்டுகள் கொண்ட பூங்கொத்துகளால் அமைக்கப்பட்ட, அகன்ற மார்பில் அசைந்தாடும் புஷ்பமாலை பூண்டவருமான ஸ்ரீ ராமரை சேவிக்கிறேன். (5)

**लसच्चन्द्रिकास्मेरशोणाधराभं**
**समुद्यत्पतङ्गेन्दुकोटिप्रकाशम् ।**
**नमद्ब्रह्मरुद्रादिकोटीररत्न-**
**स्फुरत्कान्तिनीराजनाराधिताङ्घ्रिम् ॥ ६ ॥**

லஸச்சந்த்ரிகாஸ்மேரசோணாதராபம்
ஸமுத்யத் பதங்கேந்துகோடிப்ரகாசம் ।
நமத்ப்ரும்மருத்ராதிகோடீரரத்ன-
ஸ்புரத்காந்திநீராஜனாராதிதாங்க்ரிம் ॥

**लसच्चन्द्रिका**–அழகிய நிலவு போன்ற, **स्मेर**–புனசிரிப்புடன்கூடி, **शोणाधराभं**–சிவந்த அதரகாந்தியுள்ளவரும், **समुद्यत्पतङ्गेन्दुकोटि**–உதிக்கின்ற கோடி சூரியசந்திரர்களின், **प्रकाशं**–ஒளியுள்ளவரும், **नमत्**–வணங்குகின்ற, **ब्रह्मरुद्रादि**–ப்ரஹ்மா, ருத்ரன் முதலானவர்களின், **कोटीर**-கிரீடத்திலுள்ள, **रत्नस्फुरत्कान्ति**–ரத்தினங்களிலிருந்து வீசும் ஒளிகளால், **नीराजनाराधिताङ्घ्रि**–நீராஜனம் செய்து பூஜிக்கப்பட்ட திருவடிகளை உடையவருமான ஸ்ரீராமரை ஸேவிக்கிறேன்.

சந்திரிகை போன்ற புன் சிரிப்புடன் விளங்கும் சிவந்த அழகிய உதடுகளையுடையவரும் உதிக்கும் கோடி சூர்ய சந்திரர்கள் போல் பிரகாசிப்பவரும், வணங்கும் பிரும்மதேவன் ருத்ரன் முதலியவர்களின் கிரீடத்தில பதித்த ரத்னங்களின் வீசும் ஒளிகளினுலேயே செய்யப்பட்ட நீராஜனமெனும் மங்கள ஆரத்தியினுல் பூஜிக்கப்பட்ட பாதகமலத்தையுடையவருமான ஸ்ரீராமரை ஸேவிக்கிறேன்.

சூரியன் மட்டும் இருந்தால் மிகுந்த வெளிச்சம் கிடைத்த போதிலும் சூடும் நிறைய இருக்கும். சந்திரன் மட்டும் இருந்தால் சூடு இல்லாமல் தண்மை இருந்தாலும் நல்ல வெளிச்சம்

ராமசந்திரனுடைய சரீரமோ மிகுந்த பிரகாசத்துடன் விளங்குகிறது, அத்துடன் நிலவுபோல் தர்சிப்பவர்களின் தாபங்களையும் நிவர்த்தி செய்கிறது. இதனால்தான் ஒரே காலத்தில் உதயமாகின்ற கோடி சூரியசந்திரர்கள் போல என்று கூறப்படுகிறது. தீப ஒளி படும்படி செய்யும் உபசாரத்திற்கு நீராஜனம் என்று பெயர். ப்ரஹ்மாதிதேவர்கள் ஸ்ரீராமரின் திருவடிகளில் வணங்கும்பொழுது அவர்களின் சிரஸிலுள்ள கிரீடத்தில் பதிக்கப்பட்ட சிறந்த ரத்னங்களின் ஒளி திருவடிகளில் விழுகிறது. இது ரத்னகாந்தியால் திருவடிக்கு நீராஜனம் செய்வதுபோல் காண்கிறது. (6)

पुरः प्राञ्जलीनाञ्जनेयादिभक्तान्
स्वचिन्मुद्रया भद्रया बोधयन्तम् ।
भजेऽहं भजेऽहं सदा रामचन्द्रं
त्वदन्यं न मन्ये न मन्ये न मन्ये ॥ ७ ॥

புர: ப்ராஞ்ஜலீந் ஆஞ்ஜநேயாதிபக்தாந்
ஸ்வசின்முத்ரயா பத்ரயா போதயந்தம் ।
பஜே ऽஹம் பஜே ऽஹம் ஸதா ராமசந்த்ரம்
த்வதன்யம் ந மன்யே ந மன்யே ந மன்யே ॥

**पुरः**-தன் எதிரில உள்ள, **प्राञ्जलीन्**-அஞ்ஜலி பந்தத்துடன்கூடிய, **आञ्जनेयादिभक्तान्**-ஹநுமார் முதலான பக்தர்களுக்கு, **भद्रया**-மங்களகரமான, **स्वचिन्मुद्रया**-தனது சின்முதரையால், **बोधयन्तं**-தத்வததை உபதேசிககின்ற, **रामचन्द्रं**-ஸ்ரீராமசந்திரனை, **सदा**-எப்பொழுதும், **अहं**-நான், **भजे**-ஸேவிக்கிறேன், **अहं**-நான், **भजे**-ஸேவிக்கிறேன், **त्वदन्यं**-உம்மைத்தவிற வேறு ஒருவரையும், **न मन्ये न मन्ये न मन्ये**-எண்ணுவதிலலை எண்ணுவதிலலை எண்ணுவதில்லை,

அஞ்ஜலி செய்து கொண்டு தன்னெதிரில் வீற்றிருக்கும் ஆஞ்ஜநேயர் முதலிய பக்த வர்க்கங்களுக்கு, மோக்ஷபர்யந்தம் எல்லாவித மங்களங்களையும் அளிக்கவல்ல தனது சின் முத்ரையினால் ஆன்ம தத்வத்தை உபதேசித்துக்கொண்டிருக்கும் ஸ்ரீ ராமசந்திரரை நான் எப்பொழுதும் ஸேவிக்கிறேன். உம்மைத்தவிற வேறு எந்த தெய்வத்தையும் மனதினாலும் நினையேன் நினையேன்

நினேயேன். "अग्रे वाचयति प्रभञ्जनसुते तत्वं मुनिभ्यः परं व्याख्यान्तं" என்று ஆஞ்ஜநேயருக்கும் முனிவர்களுக்கும் பரதத்வத்தை ராமன் உபதேசிப்பதாக கூறப்பட்டிருக்கிறது முக்தி கோபநிஷத்து எல்லா உபநிஷத்துக்களேயும் ராமர் உபதேசித்த தாகக் கூறுகிறது. கட்டைவிரல் நுனியையும் ஆள்காட்டி விரலின் நுனியையும் சேர்த்துக் காட்டுவதுதான் சின்முத்ரை என்பது இது ஜீவப்ரஹ்ம ஐக்யததைக் குறிக்கிறது. "स्वात्मानं प्रकटीकरोति भजतां यो मुद्रया भद्रया" என்று இதையே பத்ர முத்ரை என்று கூறுகிருர். அத்வைத தத்வத்தையே இதன் மூலம் காட்டுகிருர், இந்த சுலோகத்திலும் பின்னுலுள்ள சில சுலோகங்களிலும கூறப்படும் கருத்தைக்கொண்டு ஆசார் யாளுக்கு மற்ற தேவதைகளிடம் த்வேஷமுள்ளதாக எண்ணக் கூடாது. இதே கருத்தை மற்ற தேவதா ஸ்தோத்ரத்திலும் காணலாம். 'एकभक्तिर्विशिष्यते' என்ற கீதா வாக்யப்படி எல்லாவற்றையும் மறந்து இஷ்டமான ஒரே தெய்வத்திடம் முழுவதும் மனது ஈடுபடுவதற்காக இவ்வாறு வர்ணிக்கப் பட்டுளளது. மேலும் ப்ரஹ்ம ஸ்வரூபமான ராம தத்வத்தைக் காட்டிலும் வேருக வாஸ்தவத்தில பொருள் ஒன்றுமில்லே யாதலால் வேறு ஒன்றையும் நினேக்கவில்லேயென்று கூறுகிருர்.

यदा मत्समीपं कृतान्तः समेत्य
प्रचण्डप्रकोपैर्भटैर्भीषयेन्माम् ।
तदाविष्करोषि त्वदीयं स्वरूपं
सदापत्प्रणाशं सकोदण्डबाणम् ॥ ८ ॥

யதா மத்ஸமீபம் க்ருதாந்த: ஸமேத்ய
ப்ரசண்டப்ரகோபைர் படைர் பீஷயேன் மாம் ।
ததாவிஷ்கரோஷி த்வதீயம் ஸ்வரூபம்
ஸதாபத்ப்ரணசம் ஸகோதண்டபாணம் ॥

यदा–எப்பொழுது, कृतान्तः–யமன், मत्समीपं–எனது அருகில் समेत्य–வந்து, प्रचण्डप्रकोपैः–பயங்கரமான கோபததுடன்கூடிய, भटैः–கிங்கரர்கள் மூலம், मां–என்னே, भीषयेत्–பயமுறுத்துவாளுே, तदा–அப்பொழுது, सदा–எப்பொழுதும், आपत्प्रणाशं–ஆபத்துக்களே அழிக்

கின்றதும், **सकोदण्डबाणं**-வில அம்புகளுடன் கூடியதுமான, **त्वदीयं स्वरूपं**-உன்னுடையதான ஸ்வரூபத்தை, **आविष्करोषि**-வெளிப் பத் ா.

*யமன் தனது அதிபயங்கர கிங்கரர்களுடன் எப்பொழுது எனது சமீபம் அடைந்து என்னை மிரட்டுவானே, அச்சமயம், வில்லும் அம்பும் தரித்ததும் எப்பொழுதும் பக்தனுடைய எந்தவித ஆபத்தையும் போக்கக் கூடியதுமான உமது உண்மை ரூபத்தை வெளியிடுவீர் எனது அந்த்யகாலத்தில் என் உயிரைக்கொண்டு போக தனது கிங்கரர்களுடன் யமனே நேரில் வந்து பயமுறுத்த ஆரம்பிக்கும்பொழுதே நீ கோதண்டபாணியாக திடீரென்று எதிரில் வந்து நிற்கவேணும். உம்மைக்கண்ட மாத்திரத்தில் அவர்கள் எல்லோரும் பயந்து ஓடிச் செல்வார்கள் அந்த்ய காலத்தில் மட்டுமல்ல பக்தனது வாழ்க்கையில் ஏற்படும் ஒவ்வொருஆபத்தையும் பகவான்தான் போக்குகிறார்.* (8)

**निजे मानसे मन्दिरे संनिधेहि**
**प्रसीद प्रसीद प्रभो रामचन्द्र ।**
**ससौमित्रिणा कैकयीनन्दनेन**
**स्वशक्त्याऽनुभक्त्या च संसेव्यमान ॥ ९ ॥**

*நிஜே மானஸே மந்திரே ஸந்நிதேஹி*
*ப்ரஸீத ப்ரஸீத ப்ரபோ ராமசந்த்ர* ।
*ஸஸௌமித்ரிணா கைகயீநந்தனேன*
*ஸ்வஶக்த்யாऽனுபக்த்யா ச ஸம்ஸேவ்யமான* ॥

**ससौमित्रिणा**-லக்ஷ்மணனோடுகூடிய, **कैकयीनन्दनेन**-பரதனால், **स्वशक्त्या**-தங்களது சக்திக்குத் தக்கபடியும், **अनुभक्त्या च**-பக்தியை அநுஸரித்தும், **संसेव्यमान**-ஸேவிக்கப்படுகிற, **प्रभो**-ப்ரபுவான, **रामचन्द्र**-ஹே ராமசந்திரா, **निजे**-தனது, **मन्दिरे**-கிருஹமாக உள்ள, **मानसे**-என் மனதில், **सन्निधेहि**-ஸாந்நித்யம் அடையவேண்டும். **प्रसीद प्रसीद**-அருள்புரியவேணும் அருள்புரியவேணும்.

*லக்ஷ்மணனோடுகூட பரதனும் தங்களது சக்திகளுக்குத் தக்கவாறு பக்தியுடன் ஸேவிக்கப்படும் ஹே ராமசந்த்ர ப்ரபோ*

(உமது) அரண்மனைபோன்ற எனது மனதில் (உமது அரண்மனையாகக் கருதி) நேரில் வந்து விளங்குவாய். இங்ஙனம் அருள் புரிய தயைகொள்வாய் தயைகொள்வாய்.

என் மனதை உமக்கு அர்ப்பணம் செய்து விட்டேன். இது உம்மைச் சேர்ந்தது. ஆகையால் தாங்களாகவே உமது இருப்பிடமான இந்த மனதில் வந்து அமரவேண்டும். நான் சிறந்த ஸேவகனல்ல ஏதோ என் சக்திக்கேற்றவாறு பக்தியுடன் கொஞ்சம் ஸேவை செய்து வருகிறேன் எனக்கு தாங்கள்தான் யஜமானர். கிருபை புரிந்து பரத லக்ஷ்மணர்களுடன் மனதில் விளங்கி அருள் புரியவேண்டும் என்றும் பொருள் கூறலாம். (9)

**स्वभक्ताग्रगण्यैः कपीशैर्महीशै-**
**रनीकैरनेकैश्च राम प्रसीद ।**
**नमस्ते नमोऽस्त्वीश राम प्रसीद**
**प्रशाधि प्रशाधि प्रकाशं प्रभो माम् ॥ १० ॥**

ஸ்வபக்தாக்ரகண்யை: கபீசைர் மஹீசை:
அநீகைரநேகைச்ச ராம ப்ரஸீத ।
நமஸ்தே நமோஸ்த்வீச ராம ப்ரஸீத
ப்ரசாதி ப்ரசாதி ப்ரகாசம் ப்ரபோ மாம் ॥

**स्वभक्ताग्रगण्यैः**—தனது பக்தர்களில் சிறந்தவர்களான, **कपीशैः**—வானரத் தலைவர்களாலும், **महीशैः**—பூமியை ஆளும் அரசர்களாலும், **अनेकैः अनीकैश्च**—அநேகம் ஸைன்யங்களாலும் (போற்றப்படும்), **राम**—ஹே ராம, **प्रसीद**—அருள்புரிவாய், **ते**—உமக்கு, **नमः**—நமஸ்காரம். **ईश**—ஈசனே (உம்பொருட்டு,) **नमोऽस्तु**—நமஸ்காரமிருக்கட்டும், **राम**—ராம, **प्रसीद**—அருள்புரிவாய், **प्रभो**—ப்ரபுவே, **मां**—என்னை, **प्रकाशं**—வெளிப் படையாக, **प्रशाधि प्रशाधि**—சிக்ஷித்து அருள்வாய்.

தனது சிறந்த பக்தர்களான சுக்ரீவன் அங்கதன் முதலிய வானரத் தலைவர்களாலும் குஹன் விபீஷணன் முதலிய பூபால அரசர்களாலும் ரத கஜ துரகபதாதியென பலவகைப் படைகளாலும் சுற்றிலும் சேவிக்கப்படும் ஹே ராம என்னிடம் கருணை கொள்வாய். ஸர்வ வல்லமையுடைய ஹே ப்ரபோ என்னை

நன்கு சிக்ஷித்து ஆள்வாய் ஆளக்கடவாய் ஹே ஈச உன் பொருட்டு நமஸ்காரம். எனது நமஸ்காரங்கள் யாவும் உன்னையே அடையட்டும கருணை செய்வாய். (10)

त्वमेवासि दैवं परं मे यदेकं
सुचैतन्यमेतत्त्वदन्यं न मन्ये ।
यतोऽभूदमेयं वियद्वायुतेजो-
जलोर्व्यादिकार्यं चरं चाचरं च ॥ ११ ॥

த்வமேவாஸி தைவம் பரம் மே யதேகம்
ஸுசைதன்யமேதத்த்வதன்யம் ந மன்யே ।
யதோऽபூதமேயம் வியத்வாயுதேஜோ
ஜலோர்வ்யாதிகார்யம் சரம் சாசரம் ச ॥

यतः-எவ்விடமிருந்து, अमेयं-அளவிடமுடியாத, चरं च-ஜங்கமமாகவும், अचरं च-ஸ்தாவரமாகவும் உள்ள, वियद्वायुतेजोजलोर्व्यादि-कार्यं-ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம், பிருதிவி முதலான காரியங்கள் अभूत्-உண்டானதோ, यत्-எது, एकं-ஒன்றாகவும், सुचैतन्यं-சைதன்ய ஸ்வரூபமாகவும் உள்ளதோ, एतत्- இந்த, परं दैवं-மேலான தைவம், मे-எனக்கு, त्वमेवासि-நீயாகவே இருக்கிறாய், (ஆகையால) त्वदन्यं-உம்மைத்தவிற வேறு ஒருவரையும், न मन्ये-நினைக்கமாட்டேன

எந்தப் பரம்பொருளிலிருந்து, ஒருவராலும் மனதினாலும் நினைக்கமுடியாத ஆகாயம், வாயு, தேஜஸ், ஜலம், பூமி முதலிய இந்த ஸ்தாவரஜங்கம ரூபமான உலகம் என்னும் கார்யம் உண்டாயிற்றோ, எப்பொருள் எவ்விதபேதமுமின்றி ஒரே அறிவுமயமானதோ, அப்பொருளான பரமதைவம் எனக்கு நீயேதான். ஆதலால் அப்பொருளான உன்னையன்றி வேறு எவரையும் மனதினாலும் மதிக்கமாட்டேன். இங்கு ராமரை ஸகல ஜகத்காரணமாகவும் சைதன்ய ஸ்வரூபமாகவும் வர்ணிப்பதால் ஸச்சித்ரூபியான ப்ரஹ்மம்தான் ராமர் என்பதை காட்டுகிறார். 'यतो वा इमानि भूतानि जायन्ते' என்ற சுருதியிலும் 'जन्माद्यस्य यतः' என்ற ஸூத்ரத்திலும் ப்ரஹ்ம லக்ஷணமாகக் கூறப்பட்டிருக்கிறது. (11)

नमः सच्चिदानन्दरूपाय तस्मै
नमो देवदेवाय रामाय तुभ्यम् ।
नमो जानकीजीवितेशाय तुभ्यं
नमः पुण्डरीकायताक्षाय तुभ्यम् ॥ १२ ॥

*நம: ஸச்சிதாநந்தரூபாய தஸ்மை*
*நமோ தேவதேவாய ராமாய துப்யம் ।*
*நமோ ஜானகீஜீவிதேசாய துப்யம்*
*நம: புண்டரீகாயதாக்ஷாய துப்யம் ॥*

**सच्चिदानन्दरूपाय**–ஸச்சிதானந்த ஸ்வரூபமான, **तस्मै**–அந்த பரம்பொருளாக உள்ள உமக்கு, **नमः**–நமஸ்காரம், **देवदेवाय**–தேவர்களுக்கும் தேவனான, **रामाय**–ராமனாகிய, **तुभ्यं**–உமக்கு, **नमः**–நமஸ்காரம், **जानकीजीवितेशाय**–ஸீதையின் பிராணநாயகனான, **तुभ्यं**–உமக்கு, **नमः**–நமஸ்காரம். **पुण्डरीकायताक्षाय**–தாமரை மலர்போல் நீண்ட கண்களுள்ள, **तुभ्यं**–உமக்கு, **नमः**–நமஸ்காரம்.

*பரமார்த்த உண்மை நிலையில் உபநிடதங்களில் கூறப்படும் ஸச்சிதானந்தரூபனாக விளங்கும் அந்த ஸ்ரீராமனுக்கு எனது நமஸ்காரம் தேவர்களுக்கும் தேவனாக விளங்கும் ஸ்ரீ ராமன் என திவ்யநாமம் பூண்ட உனக்கு நமஸ்காரம். ஸ்ரீ ஜானகியின் ப்ராண வல்லபனான உனக்கு நமஸ்காரம். தாமரைபோன்ற அகன்ற கண்களையுடைய உனக்கு நமஸ்காரம். '*सत्यं ज्ञानमनन्तं ब्रह्म*' என்று உபநிஷத்துக்களில் கூறப்பட்ட பரப்ரஹ்மமே மாயையுடன் சேர்ந்து தேவதேவனாக நாராயணனாக ஆகி பிறகு அவரே பூமியில் ராமனாக அவதரித்து ஸீதாபதியாக விளங்கினார் என்பதைக் காட்டுகிறார். புண்டரீகாக்ஷன் என்று சாந்தோக்யத்தில் உபாஸனைக்காக ஈசுவரன் வர்ணிக்கப்பட்டுள்ளான். (12)*

नमो भक्तियुक्तानुरक्ताय तुभ्यं
नमः पुण्यपुञ्जैकलभ्याय तुभ्यम् ।
नमो वेदवेद्याय चाद्याय पुंसे
नमः सुन्दरायेन्दिरावल्लभाय ॥ १३ ॥

நமோ பக்தியுக்தானுரக்தாய துப்யம்
நம: புண்யபுஞ்ஜைகலப்யாய துப்யம் ।
நமோ வேதவேத்யாய சாத்யாய பும்ஸே
நம: ஸுந்தராயேந்திராவல்லபாய ॥

**भक्तियुक्तानुरक्ताय**-பக்தியுடன் கூடியவர்களிடம் பிரீதிகொண்ட, **तुभ्यं**-உமக்கு, **नमः**-நமஸ்காரம. **पुण्यपुञ्जैकलभ्याय**-புண்யஸமூஹங்களால் அடையத்தகுந்த, **तुभ्यं**-உமக்கு, **नमः**-நமஸ்காரம். **वेदवेद्याय**-வேதங்களால் அறியததக்கவரும், **आद्याय पुंसे च**-முதன்மையாக உள்ள புருஷனுமான (உமக்கு), **नमः**-நமஸ்காரம். **सुन्दराय**-அழகியவனும், **इन्दिरावल्लभाय**-லக்ஷ்மீகாந்தனுமான (உமக்கு) **नमः**-நமஸ்காரம்.

தன்னிடம் பக்தி கொண்டவர்களிடம் அன்பு கொண்டுள்ள உனக்கே எனது நமஸ்காரங்கள் பல பிறவிகளில் செய்த புண்யக் கூட்டத்தின் பயனை கிட்டக்கூடிய உந்தனுக்கு நமஸ்காரம். எல்லா வேதங்களினாலும் அறியப்படுத்தப்படுகிறவனை சிருஷ்டியின் முன் இருந்த முதல் புருஷனை விளங்கும் உந்தனுக்கு நமஸ்காரம். அழகிய திருவுருவம் படைத்தவனும் இலக்குமீ தேவியின் ப்ராண வல்லபனுமான உனக்கே எனது நமஸ்காரம். 'वेदवेद्ये परे पुंसि' 'तं त्वौपनिषदं पुरुषं पृच्छामि' 'वेदैश्च सर्वैरहमेव वेद्यः' இந்த வாக்யங்கள் பரமாத்மா வேதத்தினாலேயே அறியத்தக்கவன் என்பதைக் காட்டுகின்றன. ஸிருஷ்டிக்கு முன்னாலும் இருக்கும் ஆதி புருஷனை அவன் ஸ்வரூபத்தை அநாதியான வேதம் தான் எடுத்துக் கூறமுடியும் எத்தனையோ பிறவிகளில் ஏராளமான புண்யங்களைச் செய்தவர்களுக்கு ஈசுவரபக்தி ஏற்படும். பக்தர்களிடம் ஈசுவரன் பிரீதி கொள்வார். அவர்கள் தான் வேதப்ரதிபாத்யமான ஈசுவர ஸ்வரூபத்தை அறிந்து அவரையே அடைவார்கள் அந்த ஈசுவரனே லக்ஷ்மீபதியான ஸ்ரீமந்நாராயணன். அவரே 'पुंसां दृष्टिचित्तापहारिणं' என்றபடி அழகு வடிவம்கொண்ட ஸ்ரீராமனை அவதரித்தவர்.

(13)

नमो विश्वकर्त्रे नमो विश्वहर्त्रे
नमो विश्वभोक्त्रे नमो विश्वमात्रे ।

**नमो विश्वनेत्रे नमो विश्वजेत्रे**
**नमो विश्वपित्रे नमो विश्वमात्रे ॥ १४ ॥**

*நமோ விச்வகர்த்ரே நமோ விச்வஹர்த்ரே*
*நமோ விச்வபோக்த்ரே நமோ விச்வமாத்ரே ।*
*நமோ விச்வநேத்ரே நமோ விஸ்வஜேத்ரே*
*நமோ விச்வபித்ரே நமோ விச்வமாத்ரே ॥*

**विश्वकर्त्रे**–உலகைப் படைக்கிற உமக்கு, **नमः**–நமஸ்காரம். **विश्वहर्त्रे**–உலகை அழிக்கிறவனுக்கு, **नमः**–நமஸகாாம். **विश्वभोक्त्रे**–உலகைப் போஷிப்பவனுக்கு, **नमः**–நமஸ்காரம். **विश्वमात्रे**–உலகை அளந்தவனுக்கு, **नमः**–நமஸ்காரம். **विश्वनेत्रे**–உலகின் தலைவனுக்கு, **नमः**–நமஸகாரம். **विश्वजेत्रे**–உலகை ஜயிதத்தவனுக்கு, **नमः**–நமஸ்காரம். **विश्वपित्रे**–உலகின் பிதாவுக்கு, **नमः**–நமஸ்காரம். **विश्वमात्रे**–உலகின் மாதாவுக்கு, **नमः**–நமஸ்காரம்.

*உலகத்தைப் படைப்பவனான (உமக்கு ஸ்ரீ ராமனுக்கு) நமஸ்காரம் உலகத்தை அழிப்பவனான உனக்கு நமஸ்காரம் உலகத்தை போஷிப்பவனுக்கு நமஸ்காரம் உலகமளந்தவனுக்கு நமஸ்காரம் உலகத்திற்குத் தலைவனாக விளங்குபவனுக்கு நமஸ்காரம் உலகத்தை ஜெயித்தவனுக்கு நமஸ்காரம் உலகம் அனைத்தையும் அவ்யாஜ அன்புடன் பராமரிப்பதால் உலகமனைத்திற்கும் தந்தையாக விளங்கும் உமக்கு நமஸ்காரம் தாயாகவும் விளங்கும் உமக்கு நமஸ்காரம். உலகம் முழுவதையும் படைத்து வளர்த்துக் காப்பவன் ஈசுவரனே. முடிவில் எல்லாவற்றையும் அழிப்பவனும் அவனே தலைவனாக இருந்து நடத்திச் செல்பவனும் யுத்தத்தில் ஜயிப்பவனும் அவனே. அவனுடைய அருளால்தான் உலகில் மற்றவர்கள் ஜயம் பெறுகிறார்கள் தாய்போலும் தந்தைபோலும் இருந்து எல்லா நன்மைகளையும் நமக்குச் செய்கிறான்.* (14)

**नमस्ते नमस्ते समस्तप्रपञ्च-**
**प्रभोगप्रयोगप्रमाणप्रवीण ।**
**मदीयं मनस्त्वत्पदद्वन्द्वसेवां**
**विधातुं प्रवृत्तं सुचैतन्यसिद्ध्यै ॥ १५ ॥**

*நமஸ்தே நமஸ்தே ஸமஸ்தப்ரபஞ்ச*
*ப்ரபோகப்ரயோகப்ரமாணப்ரவீண ।*
*மதீயம் மனஸ்த்வத்பதத்வந்த்வஸேவாம்*
*விதாதும் ப்ரவ்ருத்தம் ஸுசைதன்யஸித்த்யை ॥*

**समस्तप्रपंच**-உலகிலுள்ள எல்லா பிராணிகளுக்கும் **प्रभोगप्रयोग-प्रमाणप्रवीण**-சுகதுக்க போகங்களை தக்க அளவில கொடுப்பதில திறமையுள்ளவரே, **ते**-உமக்கு **नमः**-நமஸ்காரம். **ते**-உமக்கு **नमः**-நமஸ்காரம். **मदीयं मनः**-என்னுடையதான மனது, **सुचैतन्यसिद्ध्यै**-சிறந்த ஆத்மஞானம் ஏற்படுவதற்காக **त्वत्पद्द्वन्द्वसेवां**-உமது இரு திருவடிஸேவையை, **विधातुं**-செய்வதற்கு, **प्रवृत्तं**-முனைந்துவிட்டது.

*பிரபஞ்சத்தின் கண் எல்லா ஜீவராசிகளுக்கும் அதகன் கர்மாவிற்குத் தகுந்தபடி சுக துக்க போகங்களை அளிக்க உரிய காலம் தேசம் அளவு இவைகளை நன்கு அறிந்து கர்ம பலன்களை அளிப்பதில் வல்லவனே (இதன் விளக்கம் “**फलमत उपपत्तेः**” என்ற பிரும்ம சூத்திர பாஷ்யத்தில் உள்ளது) உன் பொருட்டு நமஸ்காரம் உன் பொருட்டே நமஸ்காரம் (ஆதரவை விளக்க பன் முறை கூறல்) எனது மனம் உயர்ந்த ஆன்மஞான சித்தியின் பொருட்டு உனது இரு திருவடி ஸேவையை மேற் கொள்ள முனைந்துள்ளது.*

*உலகில் எல்லா பிராணிகளும் அவரவர் செய்யும் புண்ய பாபங்களின் பயனை ஸுக துக்கங்களை அனுபவித்தேயாக வேண்டும். யாரும் இதை மீற முடியாது. ஸர்வஜ்ஞனும் ஸர்வ சக்தனுமுள்ள ஈசுவரன் அவரவர் செய்யும் கர்மாவுக்குத் தக்கவாறு பலனைக் கொடுக்கின்றார். ஆனால் ஆத்மஞானிகள் மட்டும இதற்குக் கட்டுப்பட்டவர்கள் அல்ல. ஞானத்தால் அவர்களிடமுள்ள கர்மா வீர்யமிழந்துவிடுகிறபடியால் அவர் களுக்கு மட்டும் கர்மபலன் ஏற்படுவதில்லை பகவச் சரணஸேவை செய்பவர்களுக்கு அவர் அருளால் ஆத்மஞானம் உண்டாகும். ஆகையால் கர்மபந்தம் விலக ஈசுவர பாதஸேவையில் மனதைச் செலுத்தவேண்டும்.*

(15)

शिलापि त्वदङ्घ्रिक्षमासङ्गिरेणु-
प्रसादाद्धि चैतन्यमाधत्त राम ।

नरस्त्वत्पदद्वन्द्वसेवाविधाना-
त्सुचैतन्यमेतीति किं चित्रमत्र ॥ १६ ॥

*ஶிலாऽபி த்வதங்க்ரிக்ஷமாஸங்கிரேணு*
*ப்ரஸாதாத்தி சைதன்யமாதத்த ராம ॥*
*நரஸ்த்வத்பதத்வந்த்வஸேவாவிதாநாத்*
*ஸுசைதன்யமேதீதி கிம் சித்ரமத்ர ॥*

**शिलाऽपि**-கலலும் **त्वदङ्घ्रि**-உமது திருவடிகளிலுள்ள **क्षमा-सङ्गिरेणुप्रसादात्**-தரைப்புழுதியின அருளால **चैतन्यं**-அறிவை **आधत्त हि**-அடைந்தது அலலவா! **नरः**-மனிதன **त्वत्पदद्वन्द्व सेवाविधानात्**-உமது இரு திருவடிகளிலும் ஸேவை செய்வதால **सुचैतन्य**-நலலறிவை **एति**-அடைகிறுன் **इत्यत्र**-என்ற இவ்விஷயத்தில் **राम**-ஹே ராமா **किं** என்ன ஆச்சர்யம்?

*ஹே ராம! கற்பாறையும் உனது திருவடியில் ஒட்டிய மண்புழுதி தூளியின் அருளால் அறிவை அடைந்ததே! இயற்கையில் ஆறறிவையும் உடைய மனிதன் உனது இரு திருவடிகளின் வழிபாட்டினுல் சிறந்த ஞானத்தை அடைகிறுன் என்பதில் என்ன ஆச்சரியம்?*

*கௌதம முனிவருடைய ஆச்ரமத்தின் அருகில் ஸ்ரீ ராமன் நடந்து வரும்பொழுது அவர் காலில் ஒட்டிக்கொண்டுள்ள தரைப் புழுதியானது பட்டமாத்திரத்தில் ஜடமான அசேதனமான கல் அறிவு பெற்று சேதனமாக ஆகிவிட்டது. ராமசரண தூளி ப்ரபாவத்தால் கல் அஹல்யா உருவம் எடுத்துவிட்டது. இப்படி இருக்க சேதனனுன மனிதன் ஈசுவர சரண ஸேவா ப்ரபாவத்தால் ஆத்மஞான மடைவதில் ஆச்சர்யமொன்றுமில்லை. பகவச்சரண ஸேவை செய்தால் நிச்சயம் ஆத்மஞானமடையலாம்.*

पवित्रं चरित्रं विचित्रं त्वदीयं
नरा ये स्मरन्त्यन्वहं रामचन्द्र ।
भवन्तं भवान्तं भरन्तं भजन्तो
लभन्ते कृतान्तं न पश्यन्त्यतोऽन्ते ॥ १७ ॥

*பவித்ரம் சரித்ரம் விசித்ரம் த்வதீயம்*
*நரா யே ஸ்மரந்த்யன்வஹம் ராமசந்த்ர ।*
*பவந்தம் பவாந்தம் பரந்தம் பஜந்த:*
*லபந்தே க்ருதாந்தம் ந பச்யந்த்யதோऽந்தே ॥*

**रामचन्द्र**-ஹே ராமா, **ये नराः**-எந்த மனிதர்கள், **अन्वहं**-தினந்தோறும், **भवान्तं**-பிறப்பைப் போக்குகிறவரும், **भरन्तं**-போஷித்துக் காப்பாற்றுபவருமான, **भवन्तं**-உம்மை, **भजन्तः**-ஸேவிக்கிறவர்களாய், **पवित्रं**-தூய்மைப படுத்துகிறதும், **विचित्रं**-ஆச்சர்யகரமுமான, **त्वदीयं**-உன்னுடையதான, **चरित्रं**-சரித்திரத்தை (ஸ்ரீராமாயணத்தை), **स्मरन्ति**-நினைக்கிறார்களோ (அவர்கள்), **लभन्ते**-உம்மையே அடைகிறார்கள், **अतः**-இந்தக்காரணத்தால், **अन्ते**-ஆயுளின் முடிவு சமயத்தில், **कृतान्तं**-யமனை, **न पश्यन्ति**-பார்க்கிறார்களில்லை.

*ஹே ராமசந்திர! நவரஸங்கொண்டதால் மிக்க அற்புதமாயும் மிக்கத் தூய்மைவாய்ந்ததாயும் (ஆதல்பற்றி சகல பாபங்களையும் போக்க வல்லமையுடையதாயும்) உள்ள உனது திவ்ய வாழ்க்கை சரித்ரத்தை எந்த மனிதர்கள் ஒவ்வொரு நாளும் மனதில் கொள்ளுகிறார்களோ (படித்தோ, சிரவணம் செய்தோ) அவர்கள் சம்ஸார பந்தங்களை அகற்றுபவனும் ரக்ஷிப்பவனுமான உன்னை சேவிக்கிற பரம பக்தர்களாக விளங்கி இறுதியில் உன்னையே அடைகிறார்கள். மரண காலத்திலும் யமனைச் காணமாட்டார்கள் பக்தியுடன் பரம பாவனமான ஸ்ரீமத் ராமாயணத்தை தினமும் பாராயணம் செய்தும் சிரவணம் செய்தும் ராம சரித்திரத்தை ஸ்மரிப்பவர்களுக்கு யமபயம் கிடையாது. பகவத் பதத்தை அடைவார்கள்* "**संसारं स विहाय गच्छति पुमान् विष्णोः पदं शाश्वतं**" "**यः शृणोति सदा भक्त्या स गच्छेत् वैष्णवीं तनुम्**' (17)

**स पुण्यः स गण्यः शरण्यो ममायं**
**नरो वेद यो देवचूडामणिं त्वाम् ।**
**सदाकारमेकं चिदानन्दरूपं**
**मनोवागगम्यं परं धाम राम ॥ १८ ॥**

*ஸ புண்ய: ஸ கண்ய: சரண்யோ மமாऽயம்*
*நரோ வேத யோ தேவசூடாமணிம் த்வாம் ।*

*ஸதாகாரமேகம் சிதாநந்தரூபம்*
*மனோவாககம்யம் பரம்தாம ராம ||*

**राम**-ஹே ராமா! **यः नरः**-எந்த மனிதன் **सदाकारं**-ஸத் ஸ்வரூபனும், (முக்காலத்திலும் இருப்பவனும்), **एकं**-ஒருவனும், **चिदानन्दरूपं**-சைதன்யம், ஆனந்தம் இவைகளை ஸ்வரூபமாகக் கொண்டவனும், **मनोवागगम्यं**-மனம, வாககுகளால அடைய முடியாத வனும, **परं धाम**-பேரொளி ஸ்வரூபனும், **देवचूडामणिं**-தேவர்களில் சிறந்தவனுமான, **त्वां**-உன்னை, **वेद**-அறிகிறானோ, **सः**-அவர், **पुण्यः**-புண்யம் செய்தவன், **सः**-அவன், **गण्यः**-மதிக்கத்தக்கவன். **अयं**-இவன், **मम**-எனக்கு, **शरण्यः**-ரக்ஷகன்.

*ஹே ராம, முக்காலத்திலும் உண்மையாக விளங்கும் ஸத்ருபியாயும் ஒப்புயர்வற்ற ஒரே உண்மைப் பொருளாயும் பேரறிவு பேரானந்தமயமாயும் மனம் சொல் இவைகளுக்கு எட்டாததாயும் தேவர்களுக்குத் தலைவனாகவும் சிறந்த ஞான ஒளி ருபமாகவும் உள்ள உன்னை, எந்த மனிதன் அறிகிறானோ அவன் புண்யம் செய்தவன். அவன் எல்லோராலும் மதிக்கத்தக்கவன் அவனே எனக்கு சரணம். ஸ்ரீராமனை நம்மைப்போன்ற ஒரு மனிதனாகக் கருதாமல் உபநிஷத்துக்களில் கூறப்பட்டபடி மனோ வாக்குகளுக்கு எட்டாத அத்வைதமான பரப்ரஹ்மமாக நினைக்கவேண்டும். இவ்விதமறிந்தவன் குருஸ்தானத்தில் இருந்து மற்றவர்களுக்கும் இந்த தத்வத்தை உபதேசித்து கைதூக்கி விடமுடியும் ஆகையால்தான் ஞானியையும் தனது ரக்ஷகனாக வர்ணிக்கிறார்.*

**रमन्ते योगिनोऽनन्ते सदानन्दे चिदात्मनि ।**
**इति रामपदेनासौ परं ब्रह्माभिधीयते ॥**

*என்று ராமபதம் பரப்ரஹ்மத்தைக் குறிப்பதாகக் கூறப்பட்டிருக்* (18)

**प्रचण्डप्रतापप्रभावाभिभूत-**
**प्रभूतारिवीर प्रभो रामचन्द्र ।**
**बलं ते कथं वर्ण्यतेऽतीव बाल्ये**
**यतोऽखण्डि चण्डीशकोदण्डदण्डः ॥ १९ ॥**

*ப்ரசண்டப்ரதாபப்ரபாவாபிபூத*
*ப்ரபூதாரிவீர ப்ரபோ ராமசந்த்ர ।*
*பலம் தே கதம் வர்ண்யதேऽதீவ பால்யே*
*யதோऽகண்டி சண்டீசகோதண்டதண்ட: ॥*

**प्रचण्ड**-மிகக்கடுமையான, **प्रताप** – பராக்ரமத்தின், **प्रभाव**-பெருமையால், **अभिभूत**–அவமதிக்கப்பட்ட, **प्रभूतारिवीर**–ஏராளமான சத்ருவீரர்களையுடைய, **प्रभो**-ப்ரபுவான, **रामचन्द्र**–ஹே ராம சந்திர! **ते**-உம்முடைய, **बलं**-வீர்யம், **कथं**–எவ்வாறு, **वर्ण्यते**–வர்ணிக்கப் படக்கூடும்? **यतः**-ஏனெனில், **अतीव बाल्ये**–மிகச்சிறு வயதிலேயே, **चण्डीशकोदण्डदण्डः**–சண்டியின கணவனான பரமசிவனின் தண்டம் போன்ற விலலானது, **अखण्डि**- (உம்மால்) முறிக்கப்பட்டதோ.

*மிக்க சக்திவாய்ந்த பராக்ரம வலிமையினால் எண்ணற்ற சத்ருக்கள் அனைவரையும் அழித்த வீர ப்ரபோ ராமசந்திர, மிக்க இளமையிலேயே பரமசிவனின் வில் எவனால் முறிக்கப் பட்டதோ அந்த உன்னுடைய தோள் வலிமை எவ்வாறு புகழ்ப் படக்கூடும்? யுத்தத்தில் யாராலும் ஜயிக்க முடியாத எண்ணற்ற மஹா வீரர்களை தனது பராக்ரமத்தால் ராமன் ஜயித்ததுகூட ஆச்சர்யமல்ல. பயங்கர பராக்ரமமுள்ள சண்டியின் கணவனான மஹேசுவரனின் வில்லை பூமியில் எந்த வீரராலும் முறிக்க முடியாததைத் தனது சிறுவயதிலேயே மிகலாகவமாக முறித்தது மிக ஆச்சர்யமல்லவா. இதனால் ராமனே உத்தம வீரன் என்பது நன்கு புலனாகிறது.* (19)

दशग्रीवमुग्रं सपुत्रं समित्रं
सरिद्दुर्गमध्यस्थरक्षोगणेशम् ।
भवन्तं विना राम वीरो नरो वा-
ऽसुरो वाऽमरो वा जयेत्कस्त्रिलोक्याम् ॥ २० ॥

*தசக்ரீவமுக்ரம் ஸபுத்ரம் ஸமித்ரம்*
*ஸரித்துர்கமத்யஸ்தரக்ஷோகணேசம் ।*
*பவந்தம் விநா ராம வீரோ நரோ வா*
*ऽஸுரோ வாऽமரோ வா ஜயேத்கஸ்த்ரிலோக்யாம் ॥*

**सपुत्रं**–பிள்ளைகளோடு கூடியவனும், **समित्रं** – நண்பர்களுடன் கூடியவனும், **सरिद्दुर्गमध्यस्थरक्षोगणेशं**- துர்க்கமான ஸமுத்திரத்தின் நடுவில் லங்கையிலுள்ள ராக்ஷஸக்கூட்டங்களின் தலைவனும், **उग्रं**– பயங்கரமானவனுமான, **दशग्रीवं**–ராவணனை, **राम**–ஹே ராம! **त्रिलोक्यां**–மூவ்வுலகங்களிலும், **भवन्तं विना**–உம்மைத்தவிற, **नरो वा**– மனிதனோ, **असुरो वा**–அஸுரனோ, **अमरो वा**–தேவனோ, **को वीरः**– எந்த வீரன், **जयेत्**–ஜயிப்பான்?

*ஹே ராம! அக்ஷகுமாரன், இந்திரஜித முதலிய பல மிக்க புத்ரர்களுடையவனும் மாரீசன் மஹோதரன் மஹாபார்ச்வன் போன்ற பல, பலிஷ்ட நண்பாகளுடையவனும் நகரைச் சுற்றி கோட்டைகள் இருப்பதுபோல் ஸமுத்திரத்தால் நான்கு பக்கங்களிலும் சூழப்பட்ட லங்காத்வீபத்தில் இருக்கிற ராக்ஷஸக் கூட்டங்களுக்குத் தலைவனும் மிக க்ரூரனுயுமுள்ள ராவணனை இம் மூன்று உலகங்களிலும், உன்னைத் தவிற வேறு எந்த மனித வீரனோ, அசுர வீரனோ, தேவ வீரனோ, யார் ஜயித்திருக்க முடியும்?* *(20)*

सदा राम रामेति रामामृतं ते
सदाराममानन्दनिष्यन्दकन्दम् ।
पिबन्तं नमन्तं सुदन्तं हसन्तं
हनूमन्तमन्तर्भजे तं नितान्तम् ॥ २१ ॥

*ஸதா ராம ராமேதி ராமாம்ருதம் தே*
*ஸதாராமமானந்தநிஷ்யந்தகந்தம் ।*
*பிபந்தம் நமந்தம் ஸுதந்தம் ஹஸந்தம்*
*ஹனூமந்தமந்தர் பஜே தம் நிதாந்தம் ॥*

**सदारामं**–நல்லோர்களுக்கு ஆராமமாக, தாபத்தைப் போக்கி இன்பத்தைத்தரும உத்யானமாக உள்ளதும், **आनन्दनिष्यन्दकन्दं**– ஆனந்தத்தைப் பெருக்கும கிழங்காக இருப்பதுமான, **ते**–உமமுடைய, **रामामृतं**–ராம நாமாவாகிய அமிருதத்தை, **सदा**–எப்பொழுதும், **राम रामेति**–ராம ராம என்று, **पिबन्तं**–பருகுகின்றவரும், **नमन्तं**–வணங்கு

கின்றவரும், **सुदन्तं**-அழகிய பற்களுள்ளவரும், **हसन्तं** -
வருமான, **तं**-அந்த, **हनूमन्तं**-ஹனுமாரை, **अन्तः**-மனதில், **नितान्तं**-
மிகவும் **भजे**-பஜிக்கிறேன்.

*ஹே ராம! எப்பொழுதும், ஆனந்தரஸத்தைப் பெருக்கும் கிழங்காகவும் (வானரங்கள் காய் கனி கிழங்குகளை சுவைத்து உண்ணுவதால் ராம நாமம் இனிக்கும் கிழங்காகக் கூறப் படுகிறது) ஸாதுக்களுக்கு மனோ விஹாரத்திற்குரிய பூங்கா வாகவும் ("***रमन्ते योगिनोऽनन्ते सदानन्दे चिदात्मनि । इति रामपदेनासौ परं ब्रह्माभिधीयते ॥***" என்ற வாக்யப்படி) உள்ள உன்னுடைய ராம என்னும் திருநாம ருபமான அமிருதத்தை ராம ராம என்று எப்பொழுதும் பருகிக்கொண்டும் ஆனந்த பரவசமாவதால் சிரித்துக்கொண்டும் பல்லிளித்துக்கொண்டும் அடிக்கடி உன்னை நமஸ்கரித்துக்கொண்டும் விளங்கும் ஹனுமானை எனது உள்ளத்தில் நன்கு தியானித்து ஸேவிக்கிறேன்.*

*இந்த சுலோகத்தில் ராம பக்தர்களில் சிறந்த ஹனுமாரை பஜிப்பதாக ஸ்ரீ ராமரிடம் விக்ஞாபனம் செய்து கொள்கிறார். ராம நாம பஜனத்தால் தான் ஹனுமாருக்குச் சிறப்பு ஏற்பட்டு உள்ளது. ராம நாம ஸங்கீர்த்தனத்தால் அமிருதத்தை சாப்பிட் டால் போல மஹத்தான ஆனந்தம் ஏற்படுகிறது. ஆனந்த பரவசராக சிரிக்கிறார் அவர் மனதில் சிறிதும் தாபமேகிடையாது. இந்த பாக்யத்தைக்கொடுத்ததற்காக ஸ்ரீ ராமனை வணங்குகிறார். இது திகட்டாதது குறையாதது. பிறரை எதிர்பார்க்காமல் கிடைப்பது. ஆதலால் எப்பொழுதும் ராமாமிருதத்தைப் பருகியவண்ணமாக இருக்கிறார். இவர்மட்டுமல்ல ஸாதுக்கள் எல்லோருமே ஸ்ரீராம நாமத்தில் ஈடுபடுகிறார்கள். ஹநுமாருக்குக் கிடைத்த பாக்யம் தனக்கும் கிடைப்பதற்காக பக்தரை பஜித்து அவர் அருளை வேண்டுகிறார். ஹனுமார் மாதிரி தானுமிருக்கப் போவதை அடுத்த சுலோகத்தில் நன்கு காட்டுகிறார்.* (21)

सदा राम रामेति रामामृतं ते
सदाराममानन्दनिष्यन्दकन्दम् ।
पिबन्नन्वहं नन्वहं नैव मृत्यो-
र्बिभेमि प्रसादादसादात्तवैव ॥ २२ ॥

*ஸதா ராம ராமேதி ராமாம்ருதம் தே*
*ஸதாராமமானந்தநிஷ்யந்தகந்தம் ।*
*பிபந்நந்வஹம் நந்வஹம் நைவ ம்ருத்யோ:*
*பிபேமி ப்ரஸாதாதஸாதாத் தவைவ ॥*

**सदारामं**–ஸாதுக்களுக்கு இன்பமளிப்பதும், **आनन्दनिष्यन्दकन्दं**– ஆனந்தத்தைப் பெருக்கும் கிழங்காக இருப்பதுமான, **ते**-உம்முடைய, **रामामृतं**–ராம நாமாவாகிய அமிருதத்தை, **सदा**–எப்பொழுதும், **राम रामेति**–ராம ராம என்று, **अन्वहं**–தினந்தோறும், **पिबन्**–பருகிக் கொண்டு, **तव**–உம்முடைய, **असादात्**–முடிவில்லாத, **प्रसादादेव**– அருளினாலேயே, **अहं**–நான, **मृत्योः**-யமனிடமிருந்து, **नैव बिभेमि ननु**- நிச்சயமாக பயப்படவேமாட்டேன்.

*ஹே ராம! எப்பொழுதும் ஆனந்தரஸத்தைப் பெருக்கிக் கொண்டிருப்பதும் யோகிகளுக்கு இன்ப மளிக்கும் பூங்காவன மாயும் இருக்கிற உம்முடைய ராமநாம ரூபமான அமிருதத்தை ஒவ்வொரு நாளும் ராம ராம என்று சொல்லிப் பருகிக் கொண்டிருக்கிற நானும் குறைவில்லாத உன்னுடைய அருளி னாலேயே யமனிடமிருந்து பயப்படவே மாட்டேன். ராம நாம ப்ரபாவத்தால் ஹநுமார் மரணமடையாமல் சிரஞ்ஜீவியானார். இதேபோல யாருமே ராம நாம கீர்த்தனத்தால் யமபாதையை நீக்கிவிடலாம்.* (22)

**असीतासमेतैरकोदण्डभूषै-**
**रसौमित्रिवन्द्यैरचण्डप्रतापैः ।**
**अलङ्केशकालैरसुग्रीवमित्रै-**
**ररामाभिधेयैरलं दैवतैर्नः ॥ २३ ॥**

*அஸீதாஸமேதைரகோதண்டபூஷை:*
*அஸௌமித்ரிவந்த்யைரசண்டப்ரதாபை: ।*
*அலங்கேசகாலைரஸுக்ரீவமித்ரை:*
*அராமாபிதேயைரலம் தைவதைர் ந: ॥*

**असीतासमेतैः** – ஸீதையுடன் கூடியவராக இல்லாதவர்களும், **अकोदण्डभूषैः**–கோதண்ட மெனனும் வில்லை அணியாகக் கொள்ளாதவர்

களும், **असौमित्रिवन्द्यैः**–லக்ஷ்மணரால வணங்கத்தக்கவராக இல்லாதவர்களும, **अचण्डप्रतापैः**–பயங்கர பராக்ரமமற்றவாகளும, **अलंकेशकालैः**–லங்காதிபதியான ராவணனுக்கு மிருத்யுவாக இராதவர்களும, **असुग्रीवमित्रैः**–ஸுக்ரீவனை நண்பனுக்க கொள்ளாதவர்களும், **अरामाभिधेयैः**–ராமன என்ற பெயர் இல்லாதவர்களுமான, **दैवतैः**–தேவதைகளால, **नः**–எங்களுக்கு, **अलं** – போதும (ராமனைததவிர மற்ற தேவதைகள் வேண்டாம.)

*ஸ்ரீ ஸீதாபிருட்டியின் கணவனுக இல்லாதவர்களும், கோதண்டமென்னும் வில்லற்றவர்களும், இலக்ஷ்மணனுல் வணங்கப்படாதவர்களும் மிக்க உக்ர ப்ரதாபமற்றவர்களும் இலங்கேச ராவணனை ஸம்ஹரிக்காதவர்களும் சுக்ரீவன் என்னும் நண்பன் அற்றவர்களும் ராமன் என்ற பெயர் அற்றவர்களுமான இதர தைவங்களினுல் நமக்கு ஆகவேண்டிய காரியமொன்றுமில்லை. ஸீதாதேவியுடன் கூடியவர் கையில் கோதண்டம் ஏந்தியவர் லக்ஷ்மணன் வணங்கும் மூர்த்தி உக்ரபராக்ரமமுள்ளவர் ராவணனைக் கொன்றவர். சுக்ரீவனுக்கு நண்பர் ராமன் என்ற பெயருள்ள இந்த தேவதா மூர்த்திதான் எனக்குவேண்டும் வேறு ஒரு தேவதையும் வேண்டாம் வேறு பொருளை நினைக்காமல் ஒரே பொருளை நினைப்பதுதான் த்யானம் என்பது வேறு தேவதைகளை நினையாமல் மேற்கூறியபடி ராமன் ஒருவனையே தியானிக்கிறேன் என்று கருத்து அடுத்த இரண்டு சுலோகங்களிலும் இதே ரீதியில் ராமரின் வேறு சில பெருமைகளைக் கூறுகிருர்.* (23)

अवीरासनस्थैरचिन्मुद्रिकाद्यै-
रभक्ताञ्जनेयादितत्त्वप्रकाशैः ।
अमन्दारमूलैरमन्दारमाले-
ररामाभिधेयैरलं दैवतैर्नः ॥ २४ ॥

*அவீராஸநஸ்தைரசின்முத்ரிகாட்யை:*
*அபக்தாஞ்ஜநேயாதிதத்வப்ரகாசை: ।*
*அமந்தாரமூலைரமந்தாரமாலை:*
*அராமாபிதேயைரலம் தைவதைர் ந: ॥*

**अवीरासनस्थैः** வீராஸனத்தில் இல்லாதவர்களும், **अचिन्मुद्रिकाढ्यैः**-சின்முத்ரையோடு கூடியிராதவர்களும், **अभक्ताञ्जनेयादितत्त्वप्रकाशैः**-பக்தரான ஆஞ்ஜநேயர் முதலானவர்களுக்கு ஜீவப்ரஹ்மைக்யதத்வத்தை வெளிப்படுத்தாதவர்களும், **अमन्दारमूलैः**—மந்தார விருக்ஷத்தினடியில் அமராதவர்களும், **अमन्दारमालैः**—மந்தார மலர்மாலையணியாதவர்களும், **अरामाभिधेयैः**—ராமர் என்ற பெயரில்லாதவர்களுமான, **दैवतैः**—மற்ற தேவதைகளால், **नः**—எங்களுக்கு, **अलं**—போதும்.

*மந்தார விருக்ஷத்தினடியில் அமராதவர்களும், மந்தார புஷ்ப மாலை அணியாதவர்களும், வீராஸநம் என்னும் யோகாஸநத்தில் அமராதவர்களும் சின்முத்ரையற்றவர்களும், ஆஞ்ஜநேயர் முதலிய பக்தர்களுக்கு தத்வோபதேச ப்ரகாசம செய்யாதவர்களும் ராம என்ற பெயரில்லாதவர்களுமான இதர தேவதைகளினால் நமக்கு ஆகவேண்டியதொன்றுமில்லை. மந்தாரமென்னும் தேவலோக விருக்ஷத்தினடியில் வீராஸனத்திலமர்ந்து மந்தார மாலையணிந்து சின்முத்ரையால் ஹனுமார் முதலான பக்தர்களுக்கு ஜீவப்ரஹ்மைக்யதத்வத்தை உபதேசிக்கும் ராமனையே தியானிக்கிறேன்.* **(24)**

असिन्धुप्रकोपैरवन्द्यप्रतापै-
रबन्धुप्रयाणैरमन्दस्मिताढ्यैः ।
अदण्डप्रवासैरखण्डाप्रबोधै-
ररामाभिधेयैरलं दैवतैर्नः ॥ २५ ॥

*அஸிந்துப்ரகோபைரவந்த்யப்ரதாபை:*
*அபந்துப்ரயாணைரமந்தஸ்மிதாட்யை: |*
*அதண்டப்ரவாஸைரகண்டாப்ரபோதை:*
*அராமாபிதேயைரலம் தைவதைர் ந: ||*

**असिन्धुप्रकोपैः**—ஸமுத்திரராஜனிடம் கோபம் கொள்ளாதவர்களும், **अवन्द्यप्रतापैः**—வணங்கத்தக்க பராக்ரம மற்றவர்களும், **अबन्धुप्रयाणैः**—பந்துவிற்காக ப்ரயாணம் செய்யாதவர்களும், **अमन्दस्मिताढ्यैः**—புன்சிரிப்புடன் கூடியிராதவர்களும், **अदण्डप्रवासैः**—தண்டகாரண்யத்தில்

வாஸம் செய்யாதவர்களும, **अखण्डाप्रबोधैः**-அகண்டமான ஞானமில்லாதவர்களும், **अरामाभिधेयैः**-ராமர் என்ற பெயரற்றவர் களுமான, **दैवतैः**-தேவதைகளால், **नः**-எங்களுக்கு, **अलं**-போதும்.

*இலங்கை செல்லும் சமயம் முதலில் வழிவிட மறுத்த சமுத்ர ராஜனிடம் தன் கோபத்தை வெளியிடாதவர்களும், வணங்கத் தக்க பராக்ரமமற்றவர்களும், பந்துவிற்காக ப்ரயாணம் செய்யாத வர்களும் அரக்கர்கள் சூழ்ந்த தண்டகாரண்யத்தில் வாஸம் செய்யாதவர்களும் அகண்ட பரிபூர்ண பிரும்ம ஞானமற்றவர் களும் ராமர் என்ற பெயரில்லாதவர்களுமான தைவங்களால் நமக்கு*

*ஸமுத்திரராஜனிடம் கோபத்தைக்காட்டி அதனாலேயே அவனை தம் அடிபணியச் செய்தவர். எப்பேற்பட்ட துஷ்டவீரர் களும் அவருடைய பராக்ரமத்திற்கு பயந்து வணங்குவார்கள் தன் உத்தமபந்துவான பிதாவின் வாக்யத்தைக் காப்பாற்ற காட்டில் ஸஞ்சாரம் செய்தவர். எப்பொழுதும் புன்சிரிப்புடன் விளங்குபவர். கொடிய தண்டகாரண்யத்தில் வஸித்தவர் அத்வைதாத்ம ஞானமுள்ளவர். இந்த ராமரையே தியானிக் கிறேன்.* (25)

**हरे राम सीतापते रावणारे**
**खरारे मुरारेऽसुरारे परेति ।**
**लपन्तं नयन्तं सदा कालमेवं**
**समालोकयालोकयाशेषबन्धो ॥ २६ ॥**

*ஹரே ராம ஸீதாபதே ராவணாரே*
*கராரே முராரே ஃஸுராரெ பரேதி ।*
*லபந்தம் நயந்தம் ஸதா காலமேவம்*
*ஸமாலோகயாலோகயாசேஷபந்தோ ॥*

**हरे**-ஹரியே, **राम**-ஏ ராமா, **सीतापते**-ஸீதாநாயகனே, **रावणारे**-ராவணனுக்குச் சத்துருவே, **खरारे**-கரன் என்ற ராக்ஷஸனுக்குச் சத்துருவே, **मुरारे**-முரன் என்ற அஸுரனுக்கு சத்ருவே, **असुरारे**-அசுரர்களையழித்தவரே, **पर**-சிறந்தவனே, **इति एवं**-என்று இவ்வாறு,

**सदा**-எப்பொழுதும், **जपन्तं**-சொல்லிக்கொண்டு, **कालं नयन्तं**-காலத்தை கழித்துவருகிற என்னை, **अशेषबन्धो**-எல்லாருக்கும் உறவினனே (உதவி செய்பவனே), **समालोकय**-கடாக்ஷத்தால் பாரக்கவேணும், **आलोकय**-பார்க்கவேணும்.

*எல்லா உயிர்களுக்கும் பந்துவாக விளங்குபவனே! ஹே ராம! ஸீதாபதே! ராவணனை வென்றவ! கரனை அழித்தவனே, முரன் என்னும் அசுரனைக்கொன்றவனே மற்றும் எல்லா அசுரர்களையும் அழித்தவனே உத்தம! என்று எப்பொழுதும் சொல்லிக்கொண்டே காலமனைத்தையும் கழித்து வரும் உனது பக்தனை கருணையுடன் காண்வாய். காண்வாய்.* (26)

**नमस्ते सुमित्रासुपुत्राभिवन्द्य**
**नमस्ते सदा कैकयीनन्दनेड्य ।**
**नमस्ते सदा वानराधीशवन्द्य**
**नमस्ते नमस्ते सदा रामचन्द्र ॥ २७ ॥**

*நமஸ்தே ஸௌமித்ராஸுபுத்ராபிவந்த்ய*
*நமஸ்தே ஸதா கைகயீநந்தனேட்ய ।*
*நமஸ்தே ஸதா வானராதீசவந்த்ய*
*நமஸ்தே நமஸ்தே ஸதா ராமசந்த்ர ॥*

**सुमित्रासुपुत्राभिवन्द्य**-ஸௌமித்ரையின் ஸத்புத்ரனுன லக்ஷ்மணனுல நமஸ்கரிக்கத்தக்கவனே, **ते**-உமக்கு, **नमः**-நமஸ்காரம், **कैकयीनन्दनेड्य**-கைகேயியின் குமாரனுன பரதனுல போற்றத்தக்கவனே, **ते**-உமக்கு, **सदा**-எப்பொழுதும், **नमः**-நமஸ்காரம், **वानराधीशवन्द्य**-வானரர்களின் தலைவனுன சுக்ரீவனுல வணங்கத்தகுந்தவனே, **ते**-உமக்கு, **सदा**-எப்பொழுதும், **नमः**-நமஸ்காரம், **रामचन्द्र**-ஹே ராமசந்த்ர, **सदा**-எப்பொழுதும், **ते**-உமக்கு, **नमः**-நமஸ்காரம், **ते**-உமக்கு, **नमः**-நமஸ்காரம.

*ஸௌமித்ரா தேவியின் திருமகனுன லக்ஷ்மணனுல் சேவிக்கப் படுகிறவா! உந்தன் பொருட்டு நமஸ்காரம் கைகேயியின் அருமை மகன் பரதனுலும் துதிக்கப்படுபவனே! உந்தன் பொருட்டு*

எப்பொழுதும் நமஸ்காரம் வானர அரசன் சுக்ரீவன் முதலியவர்களால் வணங்கப்படுபவ உந்தனுக்கு எப்பொழுதும் நமஸ்காரம் ஹே ராமசந்த்ரா எபபொழுதும உந்தனுக்கே நமஸ்காரம் உந்தனுக்கே நமஸ்காரம். (27)

प्रसीद् प्रसीद् प्रचण्डप्रताप
प्रसीद् प्रसीद् प्रचण्डारिकाल ।
प्रसीद् प्रसीद् प्रपन्नानुकम्पिन्
प्रसीद् प्रसीद् प्रभो रामचन्द्र ॥ २८ ॥

*ப்ரஸீத ப்ரஸீத ப்ரசண்டப்ரதாப*
*ப்ரஸீத ப்ரஸீத ப்ரசண்டாரிகால* ।
*ப்ரஸீத ப்ரஸீத ப்ரபன்னானுகம்பின்*
*ப்ரஸீத ப்ரஸீத ப்ரபோ ராமசந்த்ர* ॥

**प्रचण्डप्रताप**-பயங்கர பராக்ரமமுள்ளவனே, **प्रसीद् प्रसीद्**-அருள் செய்வாய் அருள செய்வாய், **प्रचण्डारिकाल**-பயங்கரமான எதிரிகளுக்கு யமனாக உள்ளவனே, **प्रसीद् प्रसीद्**-அருள் செய்வாய் அருள செய்வாய், **प्रपन्नानुकम्पिन्**-சரணமடைந்தவர்களிடம் தயவுள்ளவரே, **प्रसीद् प्रसीद्**-அருள செய்வாய் அருள செய்வாய், **प्रभो**-ப்ரபுவான, **रामचन्द्र**-ராமசந்திரனே, **प्रसीद् प्रसीद्**-அருள் செய்ய வேணும் அருள செய்யவேணும்.

*மிகவும் உக்ரமான பராக்ரமம் உடையவ ! தயைசெய்வாய், தயைசெய்வாய் ! மிக்க உக்ர பராக்ரமமுடைய இராவணன் முதலிய சத்ருக்களையும் அழித்தவ ! தயைசெய்வாய், தயை செய்வாய் சரணமடைந்தவர்களிடம் கருணைகொண்டவ, தயை செய்வாய் தயைசெய்வாய் ! ஹே ப்ரபோ ஹே ராமசந்த்ர தயை செய்வாய் தயைசெய்வாய் (பக்தியின் மேலீட்டால் பன்முறை வருந்தி பிரார்த்தித்தல்)*

*நீ ப்ரபு நான் ப்ருத்யன் என்னைக் காப்பது உம் கடமை. எந்த எதிரியையும் அழிக்கும் வலிமை உம்மிடம் உள்ளது. ராவணாதிகளைக்கொன்று உம் வலிமையைக் காட்டியிருக்கிறாய். இதில் ஸந்தேஹமில்லை. சத்ருக்களுக்கு பயங்கரனாக இருந்தாலும்*

சரணடையும் பக்தர்களிடம் மிகுந்த தயவைக் காட்டுவாய். நான் சரணமடைந்துள்ளேன். உம் வலிமையால் என் எதிரிகளை, முக்யமாக உள் சத்ருக்களான காமக்ரோதாதிகளை அழித்து எனக்கு ஸத்கதியருளவேண்டும். (28)

भुजङ्गप्रयातं परं वेदसारं
मुदा रामचन्द्रस्य भक्त्या च नित्यम् ।
पठन्सन्ततं चिन्तयन्स्वान्तरङ्गे
स एव स्वयं रामचन्द्रः स धन्यः ॥ २९ ॥

புஜங்கப்ரயாதம் பரம் வேதஸாரம்
முதா ராமசந்த்ரஸ்ய பக்த்யா ச நித்யம் ।
படந் ஸந்ததம் சிந்தயந் ஸ்வாந்தரங்கே
ஸ ஏவ ஸ்வயம் ராமசந்த்ர: ஸ தன்ய: ॥

**परं**–சிறந்ததும், **वेदसारं**–வேதங்களின் ஸாரமாக இருப்பதுமான, **रामचन्द्रस्य**–ராமசந்திரனின், **भुजङ्गप्रयातं**–புஜங்கப்ரயாதம் என்ற விருத்தத்தில் அமைந்த இந்த ஸ்தோத்ரத்தை, **नित्यं**–தினந்தோறும், **मुदा**–ஸந்தோஷத்தோடும், **भक्त्या च**–பக்தியோடு, **पठन्**–படித்துக்கொண்டும், **सन्ततं**–எப்பொழுதும், **स्वान्तरङ्गे**–தனது மனதில், **चिन्तयन्**–(ராமஸ்வரூபத்தை) தியானித்துக்கொண்டும், (எவன் இருக்கிருனோ), **सः**–அவன், **स्वयं**–தானாகவே, **रामचन्द्रः**–ராமசந்திரஸ்வரூபமாக ஆய்விடுகிருன், **स एव**–அவனதான், **धन्यः**–பாக்யசாலி.

மிகச் சிறந்ததும் வேதங்களின் ஸாரமாக விளங்குவதுமான ஸ்ரீ ராமசந்தரனுடைய இந்த புஜங்க ப்ரயாதம் என்னும் ஸ்துதியை. யார் இடைவிடாது சந்தோஷத்துடனும் பக்தியுடனும் எப்பொழுதும் படித்துக்கொண்டும் தனது மனதில் தியானித்துக்கொண்டுமிருக்கிருரோ, அவர் ராமசந்திரனுகவே ஆகிருர். தனது பிறப்பை பயனுற்றதாக செய்தல் பற்றி அவனே தன்யன். பாக்யசாலி (29)

ஸ்ரீ ராமபுஜங்கப்ரயாத ஸ்தோத்ரம் முற்றும்

॥ श्रीः ॥

# ॥ हनुमत्पञ्चरत्नम् ॥

## ஹநுமத்பஞ்சரத்னம்

**वीताखिलविषयेच्छं जातानन्दाश्रुपुलकमत्यच्छम् ।**
**सीतापतिदूताद्यं वातात्मजमद्य भावये हृद्यम् ॥ १ ॥**

*வீதாகிலவிஷயேச்சம்*
*ஜாதாநந்தாச்ருபுலகமத்யச்சம் ।*
*ஸீதாபதிதூதாத்யம்*
*வாதாத்மஜமத்ய பாவயே ஹ்ருத்யம் ॥*

**वीताखिलविषयेच्छं**–எல்லா விஷயங்களிலும் ஆசையைத்துறந்த வரும், **जातानन्दाश्रुपुलकं**–ஆனந்த பாஷ்பத்துடனும் ரோமாஞ்சத் துடனும் கூடியவரும், **अत्यच्छं**–மிகப்பரிசுத்தமானவரும், **सीतापति-दूताद्यं**–ஸீதாநாயகனுன ஸ்ரீ ராமரின தூதர்களுள் முதன்மையானவரும், **हृद्यं**–பிரியமானவருமான, **वातात्मजं**–வாயுகுமாரனுன ஹநுமாரை, **अद्य**–இப்பொழுது, **भावये**–தியானிக்கிறேன்.

*எல்லாவித (பொன், மண், பெண்,) விஷயப் பற்றற்றவரும், எப்பொழுதும் ஸ்ரீ ராமத்யானத்தினுல் ஏற்படும் ஆனந்தக் கண்ணீரையும் சிலுக்கும் ரோமாஞ்சித சரீரத்தையுமுடையவரும் மிக்கத் தூய்மை வாய்ந்தவரும் சீதாபிருட்டியின் கணவன் ஸ்ரீ ராமனின் தூதர்களுக்குள் தலை சிறந்தவரும் பக்தர்களின் ஹிருதயத்தில் குடிகொண்டவரும் எல்லோருக்கும் பிரியமான வரும் வாயு தேவனின் புத்ரனுமான ஹநுமாரை இப்பொழுது தியானம் செய்கிறேன்.*

*ப்ரஹ்மசர்ய நியமங்களை பூர்ணமாக நடத்திவரும் ஹநு மாருக்கு உலகப்பொருள் ஒன்றிலும் ஆசை கிடையாது ஸதா ராம குணங்களை அநுஸந்தானம் செய்வதால் அவர் கண்ணில் ஆனந்தபாஷ்பமும் சரீரத்தில் மயிர்க்கூச்சும் எப்பொழுதும் ஏற்பட்டுக்கொண்டேயிருக்கும். அவருடைய மனது, வாக்கு, சரீரம் எல்லாம் லவலேசங்கூட தோஷமின்றி மிகப் பரிசுத்த*

மானது. ராமர் அனுப்பிய தூதர்களில் இவரே ஸீதையிருக்கு மிடம் கண்டுபிடித்து வந்ததால் எல்லோரினும் சிறந்தவர். எல்லோராலும் ப்ரீதியுடன் போற்றப்படும் மூர்த்தி (1)

तरुणारुणमुखकमलं करुणारसपूरपूरितापाङ्गम् ।
संजीवनमाशासे मञ्जुलमहिमानमञ्जनाभाग्यम् ॥ २ ॥

தருணாருணமுககமலம்
கருணாரஸபூரபூரிதாபாங்கம் ।
ஸஞ்ஜீவநமாஶாஸே
மஞ்சுளமஹிமானமஞ்ஜநாபாக்யம் ॥

**तरुणारुणमुखकमलं**- இளஞ்சூரியன்போல் சிவந்த வதனாரவிந்த முள்ளவரும், **करुणारसपूर**—தயை என்னும் ரஸப்ரவாஹத்தால், **पूरितापाङ्गं**—நிறைந்தகடைக்கண பார்வையுள்ளவரும், **संजीवनं**-சிரஞ்ஜீவியாக நன்கு வாழபவரும, ஸஞ்ஜீவி மலையைககொணடு வந்து எல்லோரையும் ஜீவிக்கச்செய்தவரும, **मञ्जुलमहिमानं**—அழகிய சிறநத மஹிமையுள்ள வரும், **अञ्जनाभाग्यं**—அஞ்ஜனுதேவியின் பாக்யமானவரும் (புதரனும்) ஆன ஹனுமாரை, **आशासे**—பிரார்த்திக்கிறேன்.

உதிக்கும் இளம் சூர்யன்போன்ற சிவந்த ஒளிவீசும் முக கமலத்தையுடையவரும் கருணாரஸப்ரவாஹம் நிறைந்த கடைக் கண் பார்வையுடையவரும், சிறந்து எல்லோருக்குமுதவும் மஹிமை யுடையவரும் அஞ்ஜநா தேவியின் தவப்பயனை பாக்யமாக விளங்குபவருமான ஸஞ்ஜீவனன் என்னும் (சிறந்த நீண்டகால வாழ்க்கையையுடையவன் சிரஞ்ஜீவி) காரணப் பெயர் பெற்ற வனுமான ஹனுமானை பிரார்த்திக்கிறேன். (2)

शम्बरवैरिशरातिगमम्बुजदलविपुललोचनोदारम् ।
कम्बुगलमनिलदिष्टं बिम्बज्वलितोष्ठमेकमवलम्बे ॥ ३ ॥

ஶம்பரவைரிஶராதிகம்
அம்புஜதளவிபுலலோசனோதாரம் ।
கம்புகளமநிலதிஷ்டம்
பிம்பஜ்வலிதோஷ்டமேகமவலம்பே ॥

**शंबरवैरिशरातिगं**-சம்பரனின் சத்ருவான மன்மதனின் பாணத்தை மீறிச்செல்பவரும், **अम्बुजदल**-தாமரை இதழ்போல, **विपुल**-அகன்ற, **लोचनोदारं**-கண்களால் சிறந்து விளங்குபவரும், **कम्बुगलं**-சங்கம் போன்ற கழுத்து உள்ளவரும், **बिम्बज्वलितोष्ठं** கோவைப்பழம்போல் சிகப்பாக பிரகாசிக்கும் உதடுகளையுடையவரும், **अनिलदिष्टं एकं**-வாயு தேவனின் பாக்யமான ஹநுமார் ஒருவரையே, **अवलम्बे**-பற்றிக் கொள்கிறேன்.

*ஜிதேந்திரியராதலால் மன்மத பாணங்களுக்கு இலக்காகாத வரும் தாமரை இதழ்போல் அகன்ற கண்களினாலேயே தனது வள்ளல் தன்மையை வெளியிடுபவரும் வலம்புரி சங்கம் போன்ற கழுத்தையுடையவரும், கோவைப்பழம்போல் சிவந்தொளிக்கும் உதடுகளையுடையவரும், ஒப்பற்றவரும் வாயுதேவனின் அதிருஷ்டமோவென விளங்கும் ஹநுமானை சரணமடைகிறேன்.*

दूरीकृतसीतार्तिः प्रकटीकृतरामवैभवस्फूर्तिः ।
दारितदशमुखकीर्तिः पुरतो मम भातु हनुमतो मूर्तिः ॥ ४ ॥

*தூரீக்ருதஸீதார்த்தி:*
*ப்ரகடீக்ருதராமவைபவஸ்பூர்த்தி: ।*
*தாரிததஶமுககீர்த்தி:*
*புரதோ மம பாது ஹநுமதோ மூர்த்தி: ॥*

**दूरीकृतसीतार्तिः**-ஸீதா தேவியின் துன்பங்களை விலக்கச்செய்ததும் **प्रकटीकृतरामवैभवस्फूर्तिः**-ஸ்ரீராம மாஹாத்ம்யப்ரகாசத்தை வெளிப்படுத்தியதும், **दारितदशमुखकीर्तिः**-ராவணனின் புகழை அழித்ததுமான, **हनुमतो मूर्तिः**-ஆஞ்ஜநேயரின் உருவம், **मम पुरतः**-என் முன்னால், **भातु**-விளங்கட்டும்.

*சீதா தேவியின் கஷ்டங்களை விலக்கியதும் ஸ்ரீ ராமனின் மஹிமை எங்கும் பிரகாசிக்கும்படி வெளிப்படுத்தியதும், ராவண னின் புகழை அழித்ததுமான ஹநுமானின் உருவம் என்னெதிரில் விளங்கவேண்டும்.* (4)

वानरनिकराध्यक्षं दानवकुलकुमुदरविकरसदृक्षम् ।
दीनजनावनदीक्षं पवनतपःपाकपुञ्जमद्राक्षम् ॥ ५ ॥

*வானரநிகராத்யக்ஷம் தானவகுலகுமுதரவிகரஸத்ருக்ஷம் ।*
*தீனஜனாவனதீக்ஷம் பவனதப:பாகபுஞ்ஜமத்ராக்ஷம் ॥*

**वानरनिकराध्यक्षं**-வானரா கூட்டத்திற்குத்தலைவரும், **दानवकुल** ராக்ஷஸக்கூட்டமாகிற, **कुमुद**-அல்லி மலருக்கு, **रविकरसदृक्षं**-சூரிய கிரணம் போன்றவரும், **दीनजनावनदीक्षं**-தீன ஜனங்களைக் காப்பாற்றுவதை நியமமாகக்கொண்டவரும், **पवनतपःपाकपुञ्जं**-வாயு தேவனுடைய தவப்பயனின் கூட்டமே உருவமெடுத்ததுமான ஹனுமாரை, **अद्राक्षम्**-பார்த்தேன.

*வானரர் கூட்டத்தலைவனாகவும் அசுர குலமாகும் அல்லிப் புஷ்பத்தை வாடச்செய்யும் சூர்ய கிரணத்திற்கொப்பானவனையும் வருந்தும் ஜனங்களை ரக்ஷிப்பதையே தனது விருதமாகக் கொண்டவனாகவும், வாயுபகவானின் அருந்தவப்பயனாக விளங்குபவனுமான ஹனுமானைக்கண்டேன்.* (5)

**एतत्पवनसुतस्य स्तोत्रं यः पठति पञ्चरत्नाख्यम् ।**
**चिरमिह निखिलान्भोगान्भुङ्क्त्वा श्रीरामभक्तिभाग्भवति ॥**

*ஏதத் பவனஸுதஸ்ய*
*ஸ்தோத்ரம் ய: படதி பஞ்சரத்நாக்யம் ।*
*சிரமிஹ நிகிலாந் போகாந்*
*புங்க்த்வா ஸ்ரீராமபக்திபாக் பவதி ॥*

**पञ्चरत्नाख्यं**-பஞ்சரத்னம் என்று பெயர்கொண்ட, **एतत्**-இந்த, **पवनसुतस्य**-வாயுகுமாரனான ஹனுமாருடைய, **स्तोत्रं**-ஸ்தோத்ரத்தை, **यः**-எவன, **पठति**-படிக்கிருனே (அவன), **इह**-இவவுலகில, **चिरं**-வெகு காலம், **निखिलान् भोगान्**-எல்லா போகங்களையும, **भुंक्त्वा**-அனுபவித்துவிட்டு, **श्रीरामभक्तिभाक्**-ராமபக்தியுடன் கூடியவனாக, **भवति**-ஆகிருன்.

*ரத்னம்போலமைந்த ஐந்து சுலோகங்களைக்கொண்டதால் பஞ்சரத்னமென்று பெயருடைய இந்த ஹனுமத் ஸ்தோத்திரத்தை படனம் செய்யும் எவரும் இவ்வுலகில் எல்லா வித சுகபோகங்களையும் வெகுகாலம் அனுபவித்து ஸ்ரீ ராம பிரானிடம் பக்திநிறைந்தவராவார்.*

ஹனுமத் பஞ்சரத்னம் ஸம்பூர்ணம்

|| श्रीः ||

# || अच्युताष्टकम् ||

## அச்யுதாஷ்டகம்

['अच्युतं' என்று முதலில் ஆரம்பிப்பதால் 'அச்யுதாஷ்டகம்' என்ற பெயரடைந்துள்ள இந்த ஸ்தோத்ரம் எட்டு சுலோகங்கள் கொண்டுள்ளது. 9-வது சுலோகம் பலனைக் கூறுகிறது. அநேகமாக சுலோகங்களில் பகவந்நாமாக்களே கோர்வையாகச் சேர்ந்து காணப்படுவதாலும் இனிமையான விருத்தத்தில் அமைந்திருப்பதாலும் இந்த ஸ்தோதரத்தைக்கொண்டே ஸுலபமாக பகவந்நாமகானம் செய்யலாம் நடுவில் இரண்டு சுலோகங்களில் ராம சரித்திரத்தையும் கிருஷ்ண சரித்திரத்தையும் கொஞ்சம் காட்டுகிறார். பக்தியோடு மனமுருகி இந்த ஸ்தோத்திரம் மூலம் பகவந்நாமகானம செய்யும் பக்தருக்கு பகவான் வசமாகிறார் என்பது கடைசியில் பலனாகக் கூறப்படுகிறது.]

**अच्युतं केशवं रामनारायणं कृष्णदामोदरं वासुदेवं हरिम् ।**
**श्रीधरं माधवं गोपिकावल्लभं जानकीनायकं रामचन्द्रं भजे ॥ १ ॥**

*அச்யுதம் கேசவம் ராமநாராயணம்*
*க்ருஷ்ண தாமோதரம் வாஸுதேவம் ஹரிம் ।*
*ஸ்ரீதரம் மாதவம் கோபிகா வல்லபம்*
*ஜாநகீநாயகம் ராமசந்த்ரம் பஜே ॥*

**अच्युतं**-தன் ஸ்வரூபநிலையிலிருந்து நழுவாமல் இருப்பவரும், (விகாரங்களற்றவரும்), **केशवं**-அழகிய கேசங்களுள்ளவரும, **रामनारायणं**-யோகிகளின மனதை இனபமடையச்செய்கிறவரும், ஜீவர்கள் அடையுமிடமாக இருப்பவரும், **कृष्णदामोदरं**-கிருஷ்ணவர்ணமுள்ளவரும் யசோதையால் வயிற்றில் கயிற்றால் கட்டப்பட்டவரும், **वासुदेवं**-வஸுதேவகுமாரனும், **हरिं**-பாபங்களைப் போக்குகிறவரும், **श्रीधरं**-லக்ஷ்மியை மார்பில தரித்திருப்பவரும், **माधवं**-லக்ஷ்மீநாயகனும், **गोपिकावल्लभं**-கோபியர்களின அன்பரும், **जानकीनायकं**-ஸீதாநாதனும், **रामचन्द्रं**-ராமசந்திரனுமான பகவானை, **भजे**-ஸேவிக்கிறேன.

எந்தவித விகாரமும் கொள்ளாமல் தனது நிலையிலிருந்து என்றும் மாருமல் இருப்பதாலும் பக்தர்களையும் உயர்நிலையி லிருந்து நழுவாமலிருக்கும்படி செய்வதாலும் அச்யுதன். அழகிய கூந்தலுடையது பற்றி கேசவன் யோகிகளின் மனது ஸதா ஆனந்திக்கும் இடமாகிய பரபிரம்மமே ராமன் என்னும் பெயரின் பொருள். நரர்கள் கூட்டம் நாரம் ஜீவஸமூகம் அது சேருமிடம் லயிக்குமிடம் என்று பொருள்கொண்டது நாராயணன் என்னும் நாமம். பிராணிகளுக்கு புண்யபாப கர்ம பலன்களை அளித்து ஆகர்ஷிப்பதால் கிருஷ்ணன் என்றும், கிருஷ்ணவதாரத்தில் தாயார் யசோதையினுல் வயிற்றில் கயிற்றிஞல் கட்டப்பட்டு வைக்கப்பட்டது பற்றி தாமோதரன் என்றும் பெயர். வசுதேவ புத்ரனுக அவதரித்ததால் வாசுதேவர் எல்லாப்பொருள்களையும் தனது பரப்ரம்ம ஸ்வரூப அதிஷ்டானத்திஞல் ப்ரகாசிக்கச் செய்பவன். எல்லோரையும் வஸிக்கும்படி செய்து ஸத்தையைக் கொடுத்துதான் ஸ்வயம்பிரகாசமாக இருப்பவர் என்ற பொருள் கொண்டும் வாஸுதேவர் என்று கூறப்படுகிருர். ஜீவன்களின் பாபங்களை போக்குவதால் ஹரி என்ற நாமமுடையவர் லக்ஷ்மீ தேவியை நித்யம் தரித்து இருப்பதுபற்றி ஸ்ரீதரர் என்ற பெயர் பூண்டவர். லக்ஷ்மீதேவியின் உயிர்க்காதலனுக இருப்பவர், தன்னிடம் பக்திக்காதல் கொண்ட கோபிகாஸ்திரீகளின் நாயகர், ஸ்ரீராமாவதாரத்தில் ஜானகியாக அவதரித்த லக்ஷ்மீதேவிக்கு கணவனுக விளங்கியவர், ஸ்ரீ ராமசந்திரன் என்னும் மங்களகர நாமமுடையவர். ]வரை ன.

பல அவதாரங்களில் பல ரூபங்களுடன் பகவான் விளங்கிய தால் அவ்வெல்லா ரூபங்களையும் பக்தர்கள் தியானம் செய்ய, பல அவதாரங்களில் ஏற்பட்ட பல நாமங்களிஞல் தோத்தரிக்கப் படுகிருர் பகவான். (1)

अच्युतं केशवं सत्यभामाधवं माधवं श्रीधरं राधिकाराधितम् ।
इन्दिरामन्दिरं चेतसा सुन्दरं देवकीनन्दनं नन्दजं संदधे ॥ २ ॥

அச்யுதம் கேஶவம் ஸத்யபாமா தவம்
மாதவம் ஸ்ரீதரம் ராதிகாராதிதம் ।
இந்திராமந்திரம் சேதஸா ஸுந்தரம்
தேவகீநந்தனம் நந்தஜம் ஸந்ததே ॥

**अच्युतं**-அச்யுதராயும், **केशवं**-கேசவனையும், **सत्यभामाधवं**-ஸத்ய பாமையின் கணவனும், **माधवं**-லக்ஷ்மீநாயகனும், **श्रीधरं**-லக்ஷ்மியை மார்பில் தாங்கி இருப்பவரும், **राधिकाराधितं**-ராதையால் பூஜிக்கப் பட்டவரும், **इन्दिरामन्दिरं**-லக்ஷ்மியின் வாஸஸ்தானமாக விளங்குபவரும், **सुन्दरं**-அழகியவனும், **देवकीनन्दनं**-தேவகீ புத்திரனும், **नन्दजं**-நந்தகுமாரனுமான பகவானை, **चेतसा**-மனதால், **संदधे**-தரிக்கிறேன் (மனதை விட்டுவிலகாதபடி எப்பொழுதும் த்யானிக்கிறேன்.)

*அச்யுதன் கேசவன் கிருஷ்ணவதாரத்தில் சத்யபாமா என்ற பெயர் கொண்டு அவதரித்த தேவியின் காதலன் லெக்ஷ்மீநாதன் லக்ஷ்மியை மார்பில் தரித்தசால் ஸ்ரீதரன் கிருஷ்ணவதாரத்தில் ராதை என்னும் மிக்கப் பற்றுகொண்ட கோபிகையால் நன்கு ஆராதிக்கப்பட்டவர் லக்ஷ்மீ தேவி நித்யவாஸம் செய்யும் திருமாளிகையாக விளங்குபவர் அழகிய திருவுருவமுடையவர் தேவகி பெற்றெடுத்த அரும்புத்ரன் நந்தகோபரின் திருமகன் இந்த பகவானை பக்தி நிறைந்த மனதோடு தியானம் செய்கிறேன்.*

**विष्णवे जिष्णवे शङ्खिने चक्रिणे रुक्मिणीरागिणे जानकीजानये ।**
**वल्लवीवल्लभायार्चितायात्मने कंसविध्वंसिने वंशिने ते नमः ॥ ३ ॥**

*விஷ்ணவே ஜிஷ்ணவே சங்கினே சக்ரிணே*
*ருக்மிணீராகிணே ஜாநகீஜாநயே ।*
*வல்லவீ வல்லபாயார்சிதா யாத்மநே*
*கம்ஸவித்வம்ஸிநே வம்ஸிநே தே நம: ॥*

**विष्णवे**-வியாபகனும், **जिष्णवे**-ஜயிக்கும் ஸ்வபாவமுள்ளவனும், **शंखिने**-சங்கத்தோடு கூடியவரும், **चक्रिणे**-சக்ராயுதத்தோடு கூடியவரும, **रुक्मिणीरागिणे**-ருக்மிணியினிடம ப்ரேமை கொண்டவனும், **जानकीजानये**-ஸீதாநாயகனும, **वल्लवीवल्लभाय**-கோபியர்களின ப்ரியனும், **अर्चिताय**-யாவராலும் பூஜிககப்பட்டவரும், **आत्मने**-ஆத்மருபியும், **कंसविध्वंसिने**-கமஸனை அழித்தவனும, **वंशिने**-புல்லாங்குழலுடன் கூடியவனுமான, **ते**-உமக்கு, **नमः**-நமஸ்காரம்.

*எங்கும் வியாபகனைவும் ஜயசீலமுடையவராகவும் பாஞ்சஜன்ய மென்னும் சங்கமுடையவரும் சுதர்சனமென்னும் சக்ரா*

யுகம் ஏந்தியவரும் ருக்மிணீதேவியிடம் காதல் கொண்டவரும் ஜானகீ என்னும் சீதையை மனைவியாகக் கொண்டவரும் (ராமாவதாரத்தில்) கோபிகா ஸ்திரீகளின் நாயகனும் (கிருஷ்ணாவதாரத்தில்) எல்லோராலும் பூஜிக்கப்பட்டவரும் எல்லா ஜீவராசிகளுக்கும் ஆத்ம ரூபமாக விளங்குபவரும் கம்ஸனை அழித்தவரும புல்லாங்குழலுடையவருமான உன் பொருட்டே நமஸ்காரம். (3)

**कृष्ण गोविन्द हे राम नारायण श्रीपते वासुदेवाजित श्रीनिधे ।**
**अच्युतानन्त हे माधवाधोक्षज द्वारकानायक द्रौपदीरक्षक ॥ ४ ॥**

க்ருஷ்ண கோவிந்த ஹே ராம நாராயண
ஸ்ரீபதே வாஸுதேவாஜித ச்ரீநிதே ।
அச்யுதாநந்த ஹே மாதவாதோக்ஷஜ
த்வாரகாநாயக த்ரௌபதீரக்ஷக ॥

**कृष्ण**–ஹே கிருஷ்ணா, **गोविन्द**–ஹே கோவிந்தா, **हे राम**–ஹே ராம, **नारायण**–ஹே நாராயணா, **श्रीपते**–லக்ஷ்மீநாதா, **वासुदेव**–வாஸுதேவா, **अजित**–ஜயிக்கப்படாதவரே, **श्रीनिधे**–லக்ஷ்மிக்கு இருப்பிடமானவரே, **अच्युत**–ஹே அச்யுதா, **अनन्त**–முடிவற்றவரே, **हे माधव**–மாதவா, **अधोक्षज**–அதோக்ஷஜ, **द्वारकानायक**–தவாரகையின அதிபதியே, **द्रौपदीरक्षक**–தரௌபதியைக காபபாற்றியவரே (உமக்கு நமஸ்காரம).

ஹே கிருஷ்ண, எல்லோரையும் தன் பக்கம் இழுப்பவரே, கோவிந்தா, ஸமுத்திரத்தில் மறைத்து வைத்த பூமியை வராஹாவதாரம் எடுதது ஹிரண்யாக்ஷனைக்கொன்று திருப்பிக் கொண்டுவந்தவரே, வேதத்தால் அறியப்படுகிறவரே, கிருஷ்ணாவதாரத்தில் பசுக்களைக் காப்பாற்றியவரே, ஹே ராமா, ஹே நாராயணா, ஹே லக்ஷ்மீபதே, ஹே வாஸுதேவா, அஜிதா, எக்காலத்திலும் ஒருவராலும் ஜயிக்கப்படாதவரே ஏ ச்ரீநிதே எல்லா ஐசுவரியங்களுக்கும் இருப்பிடமாய் விளங்குபவரே ஹே அச்யுத! அனந்த, முடிவு இல்லாது நித்யப் பொருளாய் விளங்குபவரே ஏ மாதவ! அதோக்ஷஜ, ஒருக்காலும் கீழேபோய் அழியமாட்டார். எல்லோருக்கும் மேலே எப்பொழுதும் இருப்பவர் இந்திரியங்களின் போக்கைத்தடுத்து மேலே கிளம்பவொட்டாமல்

கீழே அமிழ்த்தினுல்தான் பகவத் தத்வத்தை அறிய முடியும். அப்பொழுது மனதில் உதிப்பார். த்வாரகையின் அதிபதியே, ராஜஸபையில் துச்சாஸனன் திரௌபதியின் வஸ்திரத்தை அபஹரிக்கும்பொழுது 'த்வாரகாநாத' என்று சொன்ன மாத்திரத்தில் அவள் மானத்தைகாப்பாற்றியவரே உமக்கு நமஸ்காரம் அவரது மஹிமைகளை ஸ்மரித்துக்கொண்டு திவ்ய நாமாக்களை வாயார உரக்கக்கூறுகிறுர். (4)

राक्षसक्षोभितः सीतया शोभितो दण्डकारण्यभूपुण्यताकारणम् ।
लक्ष्मणेनान्वितो वानरैः सेवितोऽगस्त्यसंपूजितो राघवः पातु माम् ॥

*ராக்ஷஸக்ஷோபித: ஸீதயா ஶோபித:*
*தண்டகாரண்யபூ புண்யதாகாரணம் ।*
*லக்ஷ்மணேநாந்விதோ வாநரை: ஸேவிதோ-*
*ऽகஸ்த்யஸம்பூஜிதோ ராகவ: பாது மாம் ॥*

**राक्षसक्षोभितः**–ராக்ஷஸனுல் மனம் கலங்கி கோபம் கொண்டவரும, **सीतया**–ஸீதையினுல, **शोभितः**-நன்கு பிரகாசிக்கிறவரும், **दण्डकारण्यभूपुण्यताकारणं**–தண்டகாரண்ய பிரதேசத்திறகு ஏற்பட்ட புண்யத்திற்கும பரிசுததிக்கும காரணமானவரும், **लक्ष्मणेन अन्वितः**-லக்ஷ்மணனுேடு கூடியவரும், **वानरैः**–வானரர்களால், **सेवितः**-ஸேவிக்கப்பட்டவரும், **अगस्त्यसंपूजितः**–அகஸ்த்யமுனிவரால் பூஜிககப்பட்டவருமான, **राघवः**–ராகவன், **मां पातु**–என்னைக காப்பாற்றட்டும்.

*எல்லாவற்றிலும் தனக்குத் தகுதி வாய்ந்த மனைவி சீதா பிருட்டியினுல் பிரகாசிப்பவரும், அரக்கர்களால் சீற்றங்கொள்ளச் செய்யப்பட்டவரும் ராவணன் செய்த ஸீதாபஹரணத்தால் மனம் கலங்கி கோபம் கொண்டவரும், தண்டகா என்னும் வனபூமியின் புண்ய ஸமுகத்திற்கும் பரிசுத்திக்கும் காரணமானவரும் ஸ்ரீராமன் தண்டகாரண்யத்தில் வசித்து அங்குமிங்கும் சஞ்சரித்ததால் அவனது திருவடிபட்டு அத்தண்டகாவனபூமி சம்பாதித்த புண்யங்கள் அனந்தம். அதனுல் அது பரிசுத்தமாகிவிட்டது. இலக்ஷ்மணன் என்னும் தனது உத்தம ஸஹோதரனுேடு என்றும் சேர்ந்திருப்பவரும் சுக்ரீவன் அங்கதன் அனுமான் முதலிய வானரர்களால் சேவிக்கப்பட்டவரும் தண்டகாவனவாச சமயம் அகஸ்திய முனிவரை தர்சனம் செய்யச்சென்றபோது அகஸ்திய*

முனிவரால் ஆதித்யம் செய்யப்பட்டு பூஜிக்கப்பட்டவரும் ஆன ரகுகுல திலகமான ஸ்ரீ ராகவன் என்னைக் காக்கவேண்டும்.

(இச்சுலோகம் ராமாவதார வரலாற்றைச் சுருக்கி நினைவூட்டு கிறது.) (5)

**धेनुकारिष्टहानिष्टकृद्द्वेषिणां केशिहा कंसहृद्वंशिकावादकः ।**
**पूतनाकोपकः सूरजाखेलनो बालगोपालकः पातु मां सर्वदा ॥ ६ ॥**

*தேநுகா ऽரிஷ்டஹா ऽநிஷ்டக்ருத் த்வேஷிணாம்*
*கேசிஹா கம்ஸஹ்ருத் வம்சிகாவாதக: ।*
*பூதநாகோபக: ஸூரஜாகேலநோ*
*பாலகோபாலக: பாது மாம் ஸர்வதா ॥*

**धेनुकारिष्टहा**–தேனுகாஸுரனையும் அரிஷ்டாஸுரனையும் கொன்றவரும், **द्वेषिणां**–தன்னிடத்தில் வெறுப்பு கொண்டவருக்கு, **अनिष्टकृत्**–துன்பத்தைச் செய்கிறவரும், **केशिहा**–கேசி என்ற அஸுரனைக்கொன்றவரும், **कंसहृत्**–கம்ஸனை அழித்தவரும், **वंशिकावादकः**–வேணு வாத்யம் வாசிப்பவரும் **पूतनाकोपकः**–பூதனையிடம் கோபம் கொண்டவரும், **सूरजाखेलनः**–யமுனா நதியில் விளையாடியவருமான, **बाल-गोपालकः**–பால கோபாலன், **सर्वदा**–எப்பொழுதும், **मां**–என்னை, **पातु**–காப்பாற்றவேண்டும்.

*தாளவனத்தில் வசித்த கழுதை உருவம் கொண்ட தேனுகாசுரனையும், காளை உருவத்துடன் தன்னை எதிர்த்த கம்ஸ ப்ருத்யனான அரிஷ்டாஸுரனையும் கொன்றவரும் தன்னிடம் த்வேஷ மனப்பான்மை கொண்டவர்களுக்கு பல துன்பங்களை உண்டுபண்ணுகிறவரும், குதிரை உருவம் கொண்ட கேசி என்னும் அசுரனைக்கொன்றவரும், கமஸனை அழித்தவரும் புல்லாங்குழல் ஊதி மகிழ்பவரும் மகிழ்விப்பவரும், பூதனையென்னும் அரக்கியிடம் கோபம் கொண்டு அவளைக்கொன்றவரும் யமுனா நதியில் விளையாடியவருமான இளங்கோபால வடிவங் கொண்ட பிரபு என்னை எப்பொழுதும் காப்பாற்றவேண்டும்.*

*இச்சுலோகம் பகவானின் கிருஷ்ணவதார லீலைகளைக் குறிப்பிடுகிறது. இந்த துஷ்டர்களின் ஸம்ஹாரத்தை அதிபால்ய வயதிலேயே லீலையாக அநாயாஸமாகச் செய்தார் என்பதை 'பாலகோபால பதம்' காட்டுகிறது.* (6)

विद्युदुद्योतवत्प्रस्फुरद्वाससं प्रावृडम्भोदवत्प्रोल्लसद्विग्रहम् ।
वन्यया मालया शोभितोरःस्थलं लोहिताङ्घ्रिद्वयं वारिजाक्षं भजे ॥

*வித்யுதுத்யோதவத் ப்ரஸ்புரத் வாஸஸம்*
*ப்ராவ்ருடம்போதவத் ப்ரோல்லஸத் விக்ரஹம் ।*
*வந்யயா மாலயா ஶோபிதோரஸ்ஸ்தலம்*
*லோஹிதாங்க்ரித்வயம் வாரிஜாக்ஷம் பஜே ॥*

**विद्युदुद्योतवत्** –மின்னலின் ஒளிபோல, **प्रस्फुरद्वाससं**- பிரகாசிக்கின்ற வஸதிரமுள்ளவரும, **प्रावृडम्भोदवत्** –மழைகாலதது மேகம்போல் **प्रोल्लसद्विग्रहं**–காந்தியுடன் விளங்குகின்ற சரீரமுள்ளவரும, **वन्यया**–காட்டில உள்ள மலர்களால தொடுககப்பட்ட, **मालया**–மாலையினுல, **शोभितोरःस्थलं**–ஶோபிக்கும் மாாபு பிரதேசத்தை உடையவரும, **लोहिताङ्घ्रिद्वयं**–சிவநத இரு சரணங்களுள்ளவருமான, **वारिजाक्षं**–தாமரைக கண்ணனை, **भजे**–ஸேவிககிறேன.

*மின்னலின் ஒளிபோல் ப்ரகாசிக்கும் பீதாம்பரம் என்னும் பட்டாடை யுடுத்தியவரும் வர்ஷா காலத்து, நீருண்ட மேகம் போல் நீல நிறமாக விளங்கும் திவ்ய தேகமுடையவரும் வனத்தில் கிடைக்கும் மலர்களினுல் கட்டப்பட்ட பூமாலையினுல், (வனமாலையென்னும் அவருக்கென்று சிறப்புடன் பிரசித்தமான புஷ்பமாலையினுல்) அழகு படைத்த மார்பு ப்ரதேசத்தையுடையவரும் சிவந்த நிறமுள்ள இருபாதங்களுடையவருமான தாமரை மலர்க் கண்ணனை ஸேவிக்கிறேன் புண்டரீகாக்ஷன் என்பது நாராயணனுக்கு சுருதிப்ரஸித்தமான பெயர்.* (7)

कुञ्चितैः कुन्तलैर्भ्राजमानाननं रत्नमौलिं लसत्कुण्डलं गण्डयोः ।
हारकेयूरकं कङ्कणप्रोज्ज्वलं किंकिणीमञ्जुलं श्यामलं तं भजे ॥ ८ ॥

*குஞ்சிதை: குந்தலைர் ப்ராஜமாநாநநம்*
*ரத்நமௌளிம் லஸத்குண்டலம் கண்டயோ: ।*
*ஹாரகேயூரகம் கங்கணப்ரோஜ்வலம்*
*[illegible]ளம் ச்யாமளம் தம் பஜே ॥*

**ः**-சுருண்ட, **कुन्तलैः**-கேசங்களால், **भ्राजमानाननं**-அழகுடன் விளங்கும் முகமுள்ளவரும், **रत्नमौलिं**-ரத்ன கிரீடம் உள்ளவரும், **गण्डयोः**-இரு கன்னங்களிலும, **लसत्कुण्डलम्**-விளங்கும குண்டலங்களுள்ளவரும, **हारकेयूरकं**-ஹாரங்களும் தோள்வளைகளுமுள்ளவரும், **कङ्कणप्रोज्ज्वलं**-காப்புக்களினால் மிகவும் பிரகாசிப்பவரும், **किङ्किणीमञ्जुलं**-சிறு சலங்கை மணிகளால அழகியவரும, **श्यामलं**-நீலநிறமாக இருப்பவருமான, **तं**-அந்த பகவானை, **भजे**-ஸேவிக்கிறேன்.

*சூர்ண குந்தளங்கள் என்னும் சுருட்டை மயிர்களால் அழகுடன் விளங்கும் முகமுடையவரும் ரத்ன மயமான கிரீடம் தரித்தவரும் இரு கன்னப்ரதேசங்களிலும் ப்ரகாசிக்கும் குண்டலங்களை உடையவரும் (காதுகளில் அணிந்துள்ள குண்டலங்கள் கன்னங்களை ஒட்டியிருப்பதால் அவற்றிற்கு மிகுந்த சோபையைக்கொடுக்கிறது) முக்தா ரத்ன புஷ்பமயமான பல் ஹாரங்களை மார்பில் அணிந்தும் தோள்வளைகளைத் தோள்களில் அணிந்தும் விளங்குபவரும் கைகளில் அணிந்துள்ள காப்புகளால் மிக்க அழகாக விளங்குபவரும் ஒட்டியாணம் பாதத் தண்டை கொலுசு இவைகளிலுள்ள அழகிய சிறு சலங்கை மணிகளினால் அழகுடையவரும் அழகிய நீல நிறமுடையவரும் ஆன அந்த பகவானை சேவிக்கிறேன்.* (8)

**अच्युतस्याष्टकं यः पठेदिष्टदं प्रेमतः प्रत्यहं पूरुषः सस्पृहम् ।**
**वृत्ततः सुन्दरं वेद्यविश्वंभरं तस्य वश्यो हरिर्जायते सत्वरम् ॥ ९ ॥**

*அச்யுதஸ்யாஷ்டகம் ய: படேதிஷ்டதம்*
*ப்ரேமத: ப்ரத்யஹம் பூருஷ: ஸஸ்ப்ருஹம் ।*
*வ்ருத்தத: ஸுந்தரம் வேத்யவிச்வம்பரம்*
*தஸ்ய வச்யோ ஹரிர் ஜாயதே ஸத்வரம் ॥*

**यः**-எந்த, **पूरुषः**-மனிதன், **इष्टदं**-விருமபிய பொருளைக்கொடுப்பதும், **वृत्ततः**-விருத்தத்தால, **सुन्दरं**-அழகியதும, **वेद्यविश्वंभरं**-உலகைத்தாங்கும பகவானை அறியத்தக்க பொருளாகக்கொண்டதுமான **अच्युतस्याष्टकं**-எட்டு சுலோகங்கள் கொண்ட அச்யுதாஷ்டகத்தை, **प्रत्यहं**-தினந்தோறும, **प्रेमतः**-பக்தியுடனும், **सस्पृहं**-ஆவலுடனும், **पठेत्**-

படிப்பானே, **तस्य**- அவனுக்கு, **हरिः**-விஷ்ணு, **सत्वरं**-சீக்கிரம், **वश्यः**-ஸ்வாதீனமாக, **जायते**-ஆகிறான்.

*எட்டு சுலோகங்கள் கொண்ட இந்த அச்யுதாஷ்டகம் படிப்பவர்களுக்கு விரும்பிய பலனைத்தருவது படிப்பதற்கும் கேட்பதற்கும் இன்பமளிக்கும் வகையில் இசைக்குத்தக்கபடி அழகிய விருத்தத்தில் அமைந்துள்ளது. இதிலுள்ள ஒவ்வொரு சுலோகமும் உலகைத்தாங்கிநிற்கும் விச்வம்பரனை நாராயணனை அறிவுறுத்துகிறது. ஆவலுடனும் பக்தியுடனும் இந்த ஸ்தோத்திரத்தை தினமும் பாராயணம் செய்துவரும் புருஷனுக்கு வெகு சீக்கிரத்திலேயே ஹரியானவர் ஸ்வாதீனமாகிவிடுகிறார். பகவான் பக்தபராதீனரல்லவா. இவன் நினைத்ததையெல்லாம் கைகூடும்படி செய்கிறார். பகவான் ஸ்வாதீனமாயிருப்பதால் இவனால் அடையமுடியாதது ஒன்றுமிருக்காது முக்திபர்யந்தமான எல்லா ஸுகங்களையும் பெறுவான்.*

**அச்யுதாஷ்டகம் முற்றும்**

|| श्रीः ||

# || श्लोकानुक्रमणिका ||